# பஞ்சதந்திரப் பாடல்

வீரமார்த்தாண்ட தேவர்

இயற்றியது




பதிப்பாசிரியர் :

மகாவித்துவான், சிந்தாமணிச் செல்வர்

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.

135, பவழக்காரத் தெரு, :: சென்னை - 1.

# முன்னுரை

பஞ்சதந்திரம், இனிய கதைகளாகப் புனைந்து நீதிகளைக் கற்பிக்கும் அரிய நூலாகும். இதன் முதல் நூல் வடமொழியில் உள்ளது; ஆங்கிலம், பாரசீகம், மராத்தி, அரபு முதலிய பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு, பல கோடிக்கணக்கான மக்களால் மகிழ்ச்சியுடன் ஓதப்பட்டு வருவது: இதன் மராத்தி மூலத்தையொட்டி, 1826 - ஆம் ஆண்டு, வித்துவான் தாண்டவராய முதலியார் என்னும் தமிழ்ப் பேரறிஞரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு, தமிழ் உரைநடை கற்பார்க்கு—நடை வண்டி நடை பழகும் குழவிகளுக்குப் பயன்படுவது போலப்—பெரிதும் பயன்பட்டு வருவது.

இப்பஞ்சதந்திரப்பாடலை எளிய இனிய விருத்தப் பாக்களால், உரைநடைப் பஞ்சதந்திரம் வெளிவருதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்னரே இயற்றியவர் வீரமார்த்தாண்ட தேவர் என்பவராவர். 'வயவீரர் ஒன்பான் வழியுற்ற மேலோன்' என்று இவர் குறிக்கப்படுவதால், இவரது மரபு செங்குந்தர் மரபு என்பது புலனாகிறது.

வித்துவான் தாண்டவராய முதலியாரால் மொழி பெயர்க்கப்பட்ட உரைநடைப் பஞ்சதந்திரத்திற்கும் இப் பஞ்சதந்திரப் பாடலுக்கும் சில வேறுபாடுகள் காணப் படுகின்றன; அதிற்காணப்படாத சில கதைகள் இதிற் காணப்படுகின்றன. அதில் காணப்படும் கதைகளுட்சில இதிற் காணப்படாமையால் அவை பின்னர்ப் பாடிச் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூலின் பொருளடக்கத்தில் உடுக்குறியிட்டுள்ள பகுதிகள் காஞ்சிபுரம் குமாரசுவாமி தேசிகராற் பாடப் பட்டவை என்பது, விளம்பி ஆண்டு, சித்திரைத் திங்களில் சென்னைக் கல்வி விளக்க அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப் பட்ட அச்சுப்பிரதியால் விளங்குகிறது.

இந்நூல் எளிய நடையில் இயற்றப்பட்டிருப்பதால், தமிழ்ச் சிறுவர் சிறுமியர் விரும்பிக் கற்றற்குரியதாய்த் திகழ்கின்றது. ஆதலின், சிறுவர்க்கான தமிழ்ப்பாட நூல்களில் இப்பஞ்சதந்திரப்பாடற்பகுதிகள் இடம் பெற்று வருவதைக் காணலாம். எனவே, இது சிறுவர் சிறுமியர்க்கும் பெரிதும் பயன்பட வேண்டுமென்னும் கருத்தால், செய்யுளிற்பயின்று வரும் கடின சந்திகளைச் செய்யுளின்பம் கெடாத வகையில் பிரித்து, ஆங்கிலச் செய்யுள் நூல்களில் அமைந்துள்ள வகையில் வாக்கியக் குறியீடுகளை அமைத்து, அழகிய முறையில் அச்சிடப்பட்டுள்ளது.

செய்யுளிற் பயின்று வரும் அருஞ்சொற்பொருளை உணர்தற்பொருட்டுச் செய்யுட்களின் கீழ் அருஞ்சொற்பொருள் தரப்பட்டுள்ளது கற்பார்க்குப் பெரிதும் நலம் பயக்குமென்பது ஒருதலை.

இந்நூலினைத் தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் பெற்றுப் படித்துப் பெரும்பயன் அடையச் செய்வது தமிழ் மொழியின் முன்னேற்றம் கருதும் அன்பர்களது கடமையாகும்.

சென்னை,
15—9—'58

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

## பதிப்புரை

சிறுவர் சிறுமியர் உள்ளத்தைக் கொள்ளை கொள்வன சிறு கதைகளே. இந்திய நாட்டுச் சிறுகதை நூல் வரிசையில் தலைமை இடம் பெறுவது **பஞ்சதந்திரம்.** இது நல்ல நீதிகளை—இளைஞரின் பிற்கால வாழ்க்கையிற் பெரிதும் வழி காட்டிகளாய் அமையத் தகுந்த அரிய கருத்துகளை—புனை கதைகள் வாயிலாகப் பொற்புறக் கற்பிப்பது. ஆதலின், இந்நூலினை நேர்முக மொழி பெயர்ப்பாகவும் உரு மாறிய கதைத்தொகுதிகளாகவும் பற்பல மொழிகளில் அவ்வம் மொழிக்குரிய அறிஞர்கள் அமைத்துக்கொண்டுள்ளார்கள்.

தமிழ் மொழியில் அமைந்த உரைநடைப் பஞ்சதந்திரமும் பஞ்சதந்திரப் பாடலும் பல்லாண்டுகளாகத் தமிழ் நாட்டிற் பயிலப்பட்டு வருகின்றன. சில்லாண்டுகளாகப் பஞ்சதந்திரப் பாடல் அச்சிற்கிடைப்பது அரிதாயினமையின், செவ்வியதொரு பதிப்புத் தேவைப்படுவதாயிற்று. ஆதலின், இதனைப் பலர்க்கும் பயன்படும்பொருட்டுக் குறைந்த விலைப் பதிப்பாக வெளியிட்டு மகிழ்கின்றோம்!

இதனைச் சீரிய முறையிற் பதிப்பித்துதவிய பிள்ளையவர்களுக்கும் நூன்முகப்பில் கண்ணைக் கவரும் வண்ண ஓவியத்தை வரைந்து தந்த **ஆர்ட்ஸ் சொசைட்டி**க்கும் எங்கள் நன்றி உரித்தாகுக!

சென்னை,
15—9—'58

சித. இராமநாதன்

# பொருளடக்கம்

## IV. அர்த்த நாசம்



## V. அசம்பிரேட்சிய காரித்துவம்

## இயற்றியவர்

வயவீரர் ஒன்பான் வழியுற்ற மேலோன்
சயவீர **மார்த்தாண்ட தேவன்**—வியமாய
பன்னூலின் நுண்ணூலாம் பஞ்சநற் றந்திரத்தை
மன்னூலாச் சொற்றான் மகிழ்ந்து.

ஸ்ரீ:

# பஞ்சதந்திரப் பாடல்

## பாயிரம்

### கணபதி துதி

அறுசீர் ஆசிரிய விருத்தம்

சீர்பெறும் உலகோர் யாரும்
செயத்தொடர் கருமம் முற்றப்
பேர்பெறும் மறையின் ஆற்ருல்
பேணிமுன் பூசை செய்யும்
கார்பெறும் மதம்பாய் துங்கக்
கரிமுகத் தவனைப் போற்றிப்
பார்பெறும் தமிழி ஞலே
பஞ்சதந் திரம்சொல் வேனே. 1

**கருமம் = செயல், மறை = வேதம், கார் = மேகம், துங்கம் = உயர்வு, கரி முகத்தவன் = யானை முகத்தையுடைய கணபதி.**

### சபாபதி துதி

திருவளர் கமல வாவி
திகழ்புலி யூரிற் செம்பொன்
மருவிய பொதுவில் ஆடும்
வள்ளலை உமையைப் போற்றிப்
பெருகிய உபாய நீதிப்
பேரறி வுடைய நீரார்
கருதிய பஞ்ச தந்த்ரக்
கதையையான் கூற லுற்றேன். 2

**திரு = இலட்சுமி, கமல வாவி = தாமரைக் குளம், புலியூர் = சிதம்பரம், பொது = சபை, உமை = பார்வதி, நீரார் = தன்மை யுடையவர்.**

## முன்னூல்

மேதினி தனில்வி யாழன்,
பராசரன், சுகன்,வி யாசன்,
ஆதிசா ணக்கி யன்,மா
மனுஇவர் அறுவர் சொல்லும்
நீதிநூல் வழியே மிக்க
நிறைமதிச் ***சோம சன்மா***
ஓதிய தந்தி ரத்தைத்
தமிழினல் உரைசெய் வேனே. 3

**மேதினி = பூமி, வியாழன் = பிரகஸ்பதி (தேவகுரு).**

## அவையடக்கம்

வான்பொழி அமுதம் யாவர்
மனையின்அங் கணத்துற் ருலும்,
மீன்பயில் கங்கை சேரின்,
மிக்கநல் தீர்த்தம் ஆகும்;
தேன்புரை கவிஞர் செஞ்சொல்
சிறியன்வாய் உற்ற தேனும்,
தான்பெரி யோரைச் சேரின்
தண்டமிழ்க் கவிதை ஆமே. 4

**வான் பொழி அமுதம் = மழை நீர், மனை = வீடு, அங்கணம் = சாக்கடை, புரைதல் = ஒத்திருத்தல், கவிதை = பாட்டு.**

தன்மமே ஆதி நான்கு
தகுதியின் பகுதி எல்லாம்
பன்முறை தமிழ்நூ லாலே
பார்மிசை விளக்கும் மேலோர்
சொன்முன்யான் தந்தி ரத்தைச்
சொல்லல்,வான் சுடரின் முன்னே
மின்மினி தானும் ஆங்கோர்
விரிசுடர் ஆதல் போலும். 5

**தன்மமே ஆதி நான்கு = அறம் முதலிய நான்கு (அறம், பொருள், இன்பம், வீடு), தகுதி = நல்லொழுக்கம், பார் = உலகம், வான் சுடர் = சூரியன், மின்மினி = ஒளி வீசும் பூச்சி.**

# கதை வரலாறு

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

பாடலி புரத்து மன்னன்
சுதரிச னன், தன் பாலர்
மூடராய்த் திரித லாலே
அவர்கள்மேல் மோகம் நீங்கி,
வாடி,'இங் கிவர்க ளாலே
பலனென்ன ? மலட்டா ஒப்பாம்
பீடிலார் பிறந்தார் அன்னோ!
பிள்ளைஎண் ணிக்கைக் கென்றான். 1

சுதரிசனன் = நல்ல நோக்கம் உடையவன், மோகம் = விருப்பம், மலட்டா = கன்று ஈனாத பசு, பீடு = பெருமை, அன்னோ = ஐயோ.

'கல்வியும் குலத்தைக் காக்கும்
கருத்தும்இல் லாத மைந்தர்
செல்வமும் குணமும் மிக்க
செவ்விசேர் உருவும் பெற்றென் ?
நல்வினை இலாரைப் பெற்ற
நங்கைதான் பூத்த காலை -
யில்வரு கருவி லாமல்
கருவழிந் திடலும் நன்றே! 2

செவ்வி = அழகு, நங்கை = பெண், நல்வினை = புண்ணியம், பூத்த காலையில் = புஷ்பவதி ஆனபோது, கரு = கருப்பம்.

'ஆயிரம் மகவைப் பெற்றும்
ஆவதென் ? அம்மா! மிக்க
தூயநல் அறிவன் ஆன
சுதன்ஒரு வனையே பெற்றால்,

‘ தாயொடு தந்தை என்ன
 தவமியற் றினரோ !’ என்று
மாயிரு ஞாலம் போற்றும் ;
 மரபெலாம் தழைக்கும் அன்றே ? 3

**மகவு = குழந்தை, அம்மா = ஆச்சரியம் (வியப்பைக் குறிக்கும் இடைச்சொல்), சுதன் = மைந்தன், மாயிரு ஞாலம் = மிகப் பெரிய உலகம், மரபு = குலம், அன்றே = அல்லவா ?**

‘ எவ்வனம், செல்வம், மிக்க
 இராசதம், அவிவே கத்துள்
ஒவ்வொன்றே கேட்டுக் கெல்லாம்
 உறுதுணை ஆகி நிற்கும் ;
இவ்வகை நான்கும் கூடி
 ஒருவன்பால் இருந்த என்றால் ;
எவ்வகை யால்அன் னோனுக்கு
 இகபரம் கிடைப்ப தென்றான். 4

**எவ்வனம் = இளமைப்பருவம், இராசதம் = இரசோ குணம், அவிவேகம் = அறியாமை, உறுதுணை = பெரிய துணை, இருந்த = இருந்தன, இகபரம் = இவ்வுலகமும் மறு உலகமும்.**

அங்கவன் சபையில் மிக்க
 அறிஞரை நோக்கி, ‘ மைந்தர்-
தங்களை மடமை நீக்கும்
 தகைமையர் இலரோ ?’ என்ன,
துங்கமா மறையோ னன
 **சோமசன்** மாவெ ழுந்தே,
‘ இங்கிவர்க் கறிவால் ஒப்பார்
 இலரெனச் செய்வேன்,’ என்றான். 5

**மடமை = அறியாமை, தகைமையர் = தன்மை உடையவர், துங்கம் = பரிசுத்தம், மறையோன் = பார்ப்பனன்.**

விஞ்சுமா மறையோன் மாற்றம்
　　வினவியே அரசர் கோமான்
நெஞ்சகம் மகிழ்ந்து மிக்க
　　நிதியொடு மக்கள் தம்மைக்
கொஞ்சமில் களிப்பி னோடும்
　　கொடுத்தனன் ; சோம சன்மா,
பஞ்சதந் திரத்தி னாலே
　　பாலரைத் திருத்த எண்ணி 6

விஞ்சுதல் = அதிகரித்தல், மாற்றம் = சொல், கோமான் = தலைவன், நிதி = செல்வம், கொஞ்சம் இல் களிப்பு = மிகுந்த மகிழ்ச்சி.

மன்னவன் குமாரர் தங்கள்
　　மனங்களுக் கேற்கு மாறு
நன்னயம் பெறுசொற் பேசி
　　நண்புகொண் டிருக்கும் நாளில்,
'பொன்னணி மார்பீர் ! இன்பம்
　　பொழிகதை ஒன்றுண் டென்ன,
'பன்னும்அக் கதையாது ?' என்றார் :
　　'பஞ்சதந் திரம்' என் றானே. 7

நண்பு = சினேகம், பன்னும் = சொல்லும், பஞ்சதந்திரம் = ஐந்து உபாயங்கள்.

'பஞ்சதந் திரங்கள் என்னும்
　　பான்மையாது ? உரைத்தி,' என்ன,
'வஞ்சமாம் **மித்ர பேதம்**,
　　மருவிய **சுகிர்ல்லா பம்**, சீர்
விஞ்சுமா நிலத்திற் **சந்தி
　　விக்ரகம்**, **அர்த்த நாசம்**,
அஞ்சலில் **அசம்பி ரேக்ஷ்ய
　　காரித்வம்** ஆம்; அவற்றுள் 8

பான்மை = பகுதி, மருவிய = சேர்ந்த, அர்த்தம் = பொருள்

மித்திர பேதம், நட்பை
விலக்கியே பகையுண் டாக்கல்;
ஒத்தவர் நட்புக் கூட்டல்,
ஓதிய சுகிர்ல்லா பந்தான்;
மெத்தவும் பகைத்து ளாரை
விரும்பிநட் பாக்கிப் பின்னர்ச்
சத்துரு நாசம் பண்ணல்,
சந்திவிக் கிரகம் ஆமே. 9

'கிடைத்ததை அழியப் பண்ணல்,
கெழுமிய அர்த்த நாசம்;
திடப்பட விசாரி யாமல்
செய்யுங்கா ரியத்தின் நாமம்
கடைப்படும் அசம்பி ரேக்ஷ்ய
காரித்வம் என்ப தாகும்;
தடப்பெருந் தோளீர்!' என்றான்
சதுமறைக் குரிய கோமான். 10

**கெழுமிய = சேர்ந்த, நாமம் = பெயர், தடம் = விசாலம், சதுமறை = நான்கு வேதங்கள்.**

மாதவன் உரைக்கும் சூழ்ச்சி
மன்னவன் குமாரர் நெஞ்சில்
காதலை விளைத்த லாலே
கமலமார் பினனை நோக்கி,
'ஈதுயாம் அறிய வேண்டும்;
எமக்கிதை விரித்து நன்று
ஓதுக பெரியோய்!' என்ன,
உயர்மறை யவன்சொல் வானால்: 11

**மாதவன் = பெருந்தவத்தைச் செய்தவன் (பார்ப்பனன்), சூழ்ச்சி = தந்திரம், காதல் = விருப்பம், கமல மார்பினன் = தாமரை மலர்மாலையை அணியும் மார்பையுடையவன் (பார்ப்பனன்), ஈது = இது, நன்று = விளக்கமாக, ஓதுக = சொல்லுக.**

I

# மித்திர பேதம்

[சினேகத்தைக் கெடுத்துப் பகையுண்டாக்கல்]

## 1. சிங்கத்தோடு இடபம் வாழ்ந்து இறந்த கதை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

'சிங்கமொன் றிடபம் ஒன்று
சேர்ந்துவாழ்ந் திருந்த நட்பை
அங்கொரு நரிதான் எய்தி
அழித்ததால்,' என்று கூற,
'இங்கிது புதுமை தானே!
இடபமே தரிமா ஏது?
வெங்குறு நரிஅ ழித்த
விவரம்ஏ தருள்க,' என்ருர். 1

**இடபம் = எருது, அரிமா = சிங்கம், அழித்ததால் = ஆல் = அசைச்சொல், வெங்குறு நரி = கொடிய குள்ள நரி.**

'நலந்திகழ் தெற்கு நாட்டில்
*மகிழாருப் பியத்*தில் நண்ணி
இலங்கிய *வர்த்த மானன்*
எனுமொரு வணிகன், தன்பால்
துலங்கிய நிதிமிக் குற்றும்,
'தூரவா ணிபஞ்செய் திந்தத்
தலம்வரல் வேண்டும்,' என்று
தன்மனத் தெண்ண லுற்ருன்: 2

**இலங்குதல் = விளங்குதல், வாணிபம் = வியாபாரம், தலம் = இடம்.**

'பொருளிலார்க் கின்பம் இல்லை;
புண்ணியம் இல்லை; என்றும்
மருவுறு கீர்த்தி இல்லை;
மாந்தருட் பெருமை இல்லை;
கருதிய கருமம் இல்லை;
கதிபெறு வழியும் இல்லை;
பெருநிலத் திடைந டக்கும்
பிணமெனப் படுவர் அன்றே? 3

கீர்த்தி= புகழ், மாந்தர் = மனிதர், கருதிய = எண்ணிய, **கருமம்**= செயல், கதி = மோட்சம்.

'நற்பொருள் அறத்தை, இன்ப
நலத்தை, ஞா னத்தை, மிக்க
சொற்பெறு புகழை, என்றும்
துகளறு பெருமை தன்னை,
பற்பலர் உறவை, நட்பை,
பகைதவிர்த் திடுந்தி றத்தை,
பொற்புறு கதியை எல்லாம்
பொருளலால் தருவ தின்றே! 4

துகள் = குற்றம், பொற்புறு கதி = அழகு பொருந்திய **மோட்சம்**, இன்று = இல்லை.

'ஆதலால், தரும ஆற்றால்
அரும்பொருள் ஈட்டி, மேலும்
ஊதியம் கொண்ட றஞ்செய்-
துரியஅப் பொருளைக் காத்தல்
நீதி; இவ் வாறு செய்யார்,
நிதியமும் தேய்ந்து, மற்றும்
ஓதும்எந் நலமும் இன்றி
உறுதுயர் அடைகு வாரே.' 5

ஆறு = வழி, ஆற்றால் = வழியால், ஈட்டுதல் = சம்பாதித்தல், ஊதியம் = இலாபம், நிதியம் = செல்வம், உறு துயர் = பெருந் துன்பம்.

இன்னன பலவும் நெஞ்சில்
எண்ணியே வணிகன் தன்பால்
மன்னிய சரக்கைச் சூல
வண்டியில் ஏற்றிக் கொண்டே
தென்னமர் **நந்தகன், சஞ்**
**சீவகன்** என்னும் பேர்சேர்
தன்னெரு திரண்டும் பூட்டிச்
சதுரொடு நடத்தி னனே. 6

இன்னன = இவை போல்வன, *மன்னுதல் = நிலைபெறுதல், சூலவண்டி = கட்டை வண்டி, தென் = அழகு, சதுர் = சாமர்த்தியம்.*

நடத்திடும் நாளில் ஓர்நாள்
நளிபெருங் காட்டில் ஓர்காட் -
டிடத்திற்சஞ் சீவ கன்கால்
இடறியே நொண்டி யாக,
எடுப்பருஞ் சரக்கை ஆளால்
எடுப்பித்தவ் வெருதைக் காட்டில்
விடுத்தொராள் வைத்துப் போனன்;
'விளிந்தபின்' தன் றவனும் போனன். 7

*நளி = நெருக்கம், எடுப்பருஞ்சரக்கு = தூக்க முடியாத பொருள், விளிந்தது = செத்தது.*

போனபின் எருதுக் கின்னம்
பொன்றும்நாள் வராமை யாலும்
தீனிமிக் கருந்த லாலும்
திணிந்துமுன் ஒடிந்த காலில்
ஊனமும் ஆறி வேறோர்
ஒப்பிலா இடபம் ஆகிக்
கானகம் முழுதும் மேய்ந்து
களிப்புடன் திரியும் நாளில் 8

*பொன்றுதல் = அழிதல், திணிதல் = கொழுத்தல், இடபம் = எருது.*

### கலி விருத்தம்

பொங்குகதிர் திங்கள்ஒளி புகுதஅரி தாகிக்
கங்குல்குடி தங்கிவளர் கானமதை ஆளும்
**பிங்கலன்**எ னப்படுமொர் பேருடைய தாகும்
சிங்கஅர சன்யமுனே சேர்கரை அடைந்தே 9

திங்கள் = சந்திரன், பொங்குகதிர் = சூரியன், கங்குல் = இருள்,
கானம் = காடு.

கோதறு நதிப்புனல் குடித்திட நடக்கும்
போதிடபம் அப்புறம்ஓர் பொற்புறும் இடத்தில்
காதும்உக ஈற்றெழு கடற்பெரு முழக்கே
ஈதென நடுக்குற இடிக்குரல்செய் தன்றே. 10

கோது = குற்றம், காதுதல் = வருத்துதல், உக ஈறு = யுகமுடிவு,
செய்தன்று = செய்தது.

'இங்கிதைஅ றிந்திலம்!இ தேதுபுதி தென்று
சிங்கஅர சங்கமொடு சிந்தையும்ந டுங்க
அங்கிருந ரிக்குருளை கண்ட;அவை தம்பேர்
வெங்**கரடகன்**,**தமனகன்** எனவி ளங்கும். 11

அங்கம் = உடல், சிந்தை = மனம், நரிக்குருளை = நரிக்குட்டி,
கண்ட = பார்த்தன.

அந்தஅர சன்முதல்அ மைச்சுநரி சேய்கள்
வந்தஅவை ஆதலின்,'ம டங்கலெனும் மன்னன்
சிந்தைதளர் வுற்றதென செய்தி?'என வேயுன் -
னுந்தமன கன்கரட கன்றனைஉ சாவ 12

அமைச்சு = மந்திரி, சேய்கள் = பிள்ளைகள், மடங்கல் = சிங்கம்,
உன்னுதல் = நினைத்தல், உசாவுதல் = வினவுதல்.

கரடகன்,'ந மக்கிதென காரியம்?இ தாலே
இரைபெறுது மோ?பெருமை எய்துவதும் உண்டோ?
கருமம்அல தானஒரு காரியம்இ யற்றல்
பெருமுளைபி டுங்கியகு ரங்குபெறு பேறே. 13

இரை = தீனி, பெறுதுமோ = பெறுவோமோ? பேறு = பயன்.

## 2. குரங்கு குறி நசுங்கிய கதை

'பெரியமுனீ ஏது ?குரங் கேது ?பெறு பேறேது ?
உரை,' என,'ஓர் தொன்னகரம் உண்டதைஅ டுக்க
மருவுமொரு கோயில்;அதன் மன்னியப ணிக்கோர்
பரியமரம் இருபிளவு படமுளைக டாவ 14

மருவுதல் = பொருந்துதல், தொல்நகரம் = பழைய நகரம், மன்னிய பணி = நிலைபெற்ற திருப்பணி, பரிய = பருத்த, கடாவ = அடிக்க.

'பாதிபிள வாகிஒரு பாதிபிள வாமல்
ஏதமறு சோலையினி டத்ததுகி டப்ப
மாதுளவ னத்திலுறை மந்திசில வந்தே
தாதவிழ்ம லர்ப்பொழிலில் தாவிவிளை யாட 15

ஏதம் = குற்றம், மாதுளவனம் = மாதுளமரச் சோலை, மந்தி = குரங்கு, தாது = மகரந்தப் பொடி, பொழில் = சோலை.

'அங்கொருகு ரங்குபிள வாம்மரவி டர்க்குள்
தங்குகுறி வைத்துமுளை தனைவறித சைத்தே
செங்கைகொ டெடுப்ப,விடர் சிக்கெனநெ ருக்க,
அங்குறிந சுங்கி,உயிர் மாய்ந்ததது அன்றே. 16

விடர் = பிளப்பு, குறி = ஆண்குறி, வறிது = வீணாக, சிக்கென = உறுதியாக, அங்குறி = அழகிய குறி, அன்றே = அப்போதே.

'காரியம்அ லாதஒரு காரியம்இ யற்றின்
பேருயிர்இ ழப்பதவர் பேெ'றனஉ ரைத்தே
'தேரும்இரை நென்னல்சில தின்றகுறை யைத்தின்று
ஆர்வதுந மக்குறுதி; வா,'எனஅ ழைக்க 17

பேறு = அடையும் பயன், தேரும் = தேடிய, நென்னல் = நேற்று.

கரடகனை நோக்கி,'இரை கருதுகைந மக்கேன் ?
அரசர்கரு மம்பெருமை யாவையும்அ ளிக்கும்;
திரமுடைய அரசர்பணி செய்துலகில் அதனால்
பெரியரவர் நண்புகொடு பெறுகுவர்ச காயம். 18

கருதுகை = யோசித்தல், திரம் = உறுதி, பணி = தொண்டு, சகாயம் = உதவி.

'மிக்கஅவர் சீவனம்ள வர்க்கும்மிகும் உதவி
திக்குலவு கீர்த்திபெறு சீவனம்;அ தல்லால்
கொக்குமுத லானபற வைக்குலம்அ னைத்தும்
தக்கஇரை கொள்ளும்;அது தான்பெருமை அன்றே? 19

'வன்பசிகொள் சிங்கம்மத யானையலது யாதும்
தன்பசித னக்குநுக ராது;தளர் நாய்கள்
என்புசிறி தீரம்இல வேனும்இரை யாக
அன்பினெடு கௌவிஎயி றழியினும்வி டாவே. 20

வன்பசி = கடும்பசி, நுகர்தல் = சாப்பிடுதல், எயிறு = பல்.

'ஆனைபசி கொள்ளினும்,அ தற்குரிய பாகன்
தான்வலிய வேயிரைத ரத்தரஅ ருந்தும்;
ஈனமொடு நாய்உதரம் எக்கிமுகம் நோக்கி
வானுனிகு ழைத்துதவ வாங்கியுணும் எச்சில்.' 21

பாகன் = யானைச் சேவகன், உதரம் = வயிறு, வானுனி = வால் நுனி (வாலின் முனை), உதவ = கொடுக்க.

இந்தவகை தமனகன்இ யம்புதலும், 'நாமோ
மந்திரிகள் கூறெ'றனம றுப்ப,' ஒரு கருமம்
தந்திரமொ டேபுரித லால்தலைமை எய்தும்;
சிந்தையினில் ஊகம்இலை யேல்,சிறுமை சேரும். 22

மந்திரிகள் கூறு = மந்திரிகளின் அமிசம், ஊகம் = ஆலோசனை.

'நல்வினைதெ ரிந்துயர்ந லம்பெறுதல் அரிதே;
அல்வினைபு ரிந்திழிவ டைந்திடுதல் எளிதே;
செல்வம்உத வேரிகரை செய்தல்மிக அரிதே;
ஒல்கிவிட வேஅதை உடைத்தல்மிக எளிதே. 23

அல்வினை = தீவினை, ஒல்குதல் = கெடுதல்.

'ஏறிவரை மேல்ஒருகல் ஏற்றல்மிக அரிதே;
சாறிவிழ வேஒருகல் தள்ளிவிடல் எளிதே;
தேறி,' இது பெருமை; இது சிறுமை,' என எண்ணிக்
கூறுபெரி யோர்இவைகு றித்திடுவர் அன்றே? 24

வரை = மலை, சாறுதல் = நழுவுதல், அன்றே = அல்லவா?

'ஒருகணம தானபொழு தேனும்உர வோர்கள்
பெருமைபுகழ் ஞானம்உள பேரொடும்இ ருப்பர்:
கருமைஉரு வானகொடி கட்டமுடன் எச்சில்
பருகிவெகு நாளளவு பாரிடையி ருக்கும். 25

கணம் = விநாடி, உரவோர்கள் = அறிஞர்கள், கொடி = காக்கை, கட்டம் = மலம், பாரிடை = பூமியில்.

'பெருமையொடு சிறுமைதரு பெற்றிஅவ ரவரால்
வருவதலது யாதுமிலை; மன்னும்இவை தம்மில்
அருமையுணர் வோர்பெறுவர் அரசில்வரு பெருமை
கரடக!'எ னத்தமன கனைவினவும் அதுவே: 26

பெற்றி = தன்மை, மன்னும் = நிலைபெறும்.

'இன்னவகை நீதிகள்இ யம்புதம னக!நீ
உன்னுவகை என்செய ?உ ரைத்திடுதி,' என்ன,
'மன்னவன்வ ருந்தினதை என்னெனம தித்தே
அன்னவன்ம னத்துயர்அ கற்றிடுவன்,' என்ன 27

மதித்தல் = ஆராய்ந்தறிதல்.

அந்தமொழி கேட்டகர டகன்,'அரசன் உள்ளச்
சிந்தைமெலி வெப்படித்தெ ரிந்ததுனக்கு ?' என்ன,
'புந்தியில்வி சாரமொடு போயினன்;அ தைத்தான்
முந்தும்அர சன்திருமு கஞ்சொலிய'தென்ருன். 28

புந்தி = மனம், விசாரம் = ஆலோசனை, சொல்லியது = தெரிவித்தது.

கலிநிலைத் துறை

'சிங்க மன்னனை அடைந்தவன் செய்தியை வினவி
அங்க வன்றன தகத்துயர் அகற்றியே அவன்பால்
துங்க மந்திரத் தலைமைபூண் டிவ்வனம் சூழும்
நங்கு லங்களுக் கினியவாழ் வளிப்பனுன்,' என்ருன். 29

மந்திரம் = ஆலோசனைச் சபை, வனம் = காடு.

'வேந்த ரும்,கொடுந் தீயும்,வெவ் விடம்பொழி பகுவாய்ப்
பாந்த ளும்சரி ; ஆதலின், அன்னவன் பக்கல்
போந்து நண்புகொண் டடவிசீ புரக்குமா றென்னும்?
மோந்தி டும்படி கடிப்பது மன்னர்தம் முறையே. 30

பகுவாய் = அகன்ற வாய், பாந்தள் = பாம்பு, பக்கல் = பக்கம், போந்து = புகுந்து, நண்பு = சினேகம், புரத்தல் = காத்தல், புரக்குமாறு = காக்கும் விதம், அடவி = காடு.

'மன்ன வன்குணம் கொடியெ'தன வகுத்தலும், அதற்குத்
'துன்னு பைங்கொடி, அடுத்தகொம் பதனையே சூழும் ;
கன்னி மாதரும் மன்னரும் தங்களைக் காத்தே
பன்னும் இங்கிதம் சொலும்அவர் பாற்செய்வர் பரிவு.' 31

வகுத்தலும் = சொன்னவுடனே, துன்னுதல் = நெருங்குதல், கொம்பு = கிளை, சூழும் = சுற்றும், கன்னி மாதர் = மணமாகாத பெண்டிர், பன்னும் = சொல்லும், இங்கிதம் = இனிய சொல், பரிவு = அன்பு.

என்ன, 'எப்படிப் பேசுவாய் இறையிடத்து ? எனக்குப்
பன்னு வெ'கன்ன,'என் வாய்நின்று மழைபொழி பாரில்
துன்னும் வித்திடை முளையென உத்தரம் தோன்றும்
மன்ன வன்வினு வினுக்கெதிர் எனைநன்கு மதிக்க.' 32

இறை = அரசன், பன்னுக = சொல்லுக, பார் = பூமி, துன்னும் = பொருந்தும், வித்து = விதை, உத்தரம் = விடை, வினு = கேள்வி.

என்ற லும்,கர டகன்தம னகன்உரைக் கிசைந்து,
'நன்று நீயவன் பக்கல்போய் அவன்குணம் நாடி
வென்றி எய்வெ'தன, நரிஅரி வேந்தனைச் சேர்ந்து
நின்று கைதொழ, நோக்கியே சிங்கமாம் நிருபன் 33

வென்றி = வெற்றி, அரி = சிங்கம், நிருபன் = அரசன்.

'இற்றை நாள்வரைக் காண்கிலன் தமனகா !' என்ன,
'உற்ற காரியம் கண்டபோ தெய்துவன் உன்பால்

கொற்ற வா! எனைச் சிறியன் என் றுன்மனம் கொள்ளேல்;
வெற்றி யும்பெரு மையும்உனக் கெய்திட விளைப்பன். 34

**இற்றைநாள் = இந்நாள், எய்துவன் = சேர்வேன், கொற்ற வன் = அரசன், விளைப்பன் = உண்டாக்குவேன்.**

'அங்கு ரத்தினில் அறிகுவர் விளைபயிர்; அதுபோல்
இங்கு நீயறி குவையினி என்குணம் செயலால்;
**துங்க வாள், இசை, யாழ், புவி, தோகையர், சான்றோர்,**
**தங்கு நூல்கள்காப் பாற்றுவோர் தங்களால் தழைக்கும்.**

**அங்குரம் = முளை, துங்க வாள் = சிறந்த வாளாயுதம், இசை = இராகம், யாழ் = வீணை, புவி = பூமி, தோகையர் = பெண்டிர், சான்றோர் = பெரியோர், நூல்கள் = புத்தகங்கள், தழைக்கும் = சிறக்கும்.**

**'நலங்கொள் மன்னவர் அடைந்தவர் தங்களுள் நாடிப்**
**புலன்கொள் பேரறி வாளரை நம்பியே பொருந்தில்**
**இலங்கும் நீதிகள் இயற்றுவர்; அவர் அர செங்கும்**
**துலங்கும்,'** என்னலும் மனமகிழ்ந் தரசனும் சொல்வான்:

**நாடுதல் = ஆராய்தல், புலன் = அறிவு, இலங்கு நீதி = விளங்கும் நீதி, துலங்கும் = விளங்கும், என்னலும் = என்று சொன்ன உடனே.**

'உரிமை மந்திரி குமரன்நீ ஆதலின், உனக்குப்
பெருமை மந்திரப் புத்திகள் வந்திடப் பெற்றாய்!
வருக!' என்றரு கழைத்து, நம் பிக்கையும் வழங்கி,
'ஒருமை யாகநம் காரியம் இயற்றெ'ன உரைக்க 37

**உரிமை = சொந்தம், குமரன் = பிள்ளை, மந்திரம் = ஆலோசனை, ஒருமை = உண்மை, இயற்று = செய்.**

அந்த மன்னனை நோக்கி,' நின் அகத்தொரு துளக்கம்
வந்த போலும்! நீ உரை,' என, மன்னன், ' இவ் வனத்தில்
எந்த நாளும்நான் அறிகிலா முழக்கம்இன் றெழுந்தது!
' இந்த மாமுழக் கென்?'' எனத் துளங்கியது இதயம்! 38

**துளக்கம் = அச்சம், அகம் = மனம், துளங்கியது = கலங்கியது, இதயம் = மனம்.**

'முழக்கிற் கேற்பதாய் இருக்குமன் றேமுழங் குயிரும்?
வழுக்கி வீழ்கையில் ஊன்றுகோல் என்னநீ வந்தாய்;
இழுக்கம் மாறநீ எனக்கதை உணர்த்'தென இயம்ப,
தழைக்கும் அன்பொடு தமனகன் ஒருகதை சாற்றும்: 39

*இழுக்கம்=தளர்ச்சி, முழக்கு=சத்தம், உயிர்=பிராணி, வழுக்கி=சறுக்கி, சாற்றும்=சொல்லும்.*

## 3. பேரொலி கேட்டு அஞ்சிப் பேரிகை கண்ட கதை

### *கலிநிலைத்துறை*

'நரியொன் றெய்திய பசியினல் இரைதனை நாடித்
திரியும் போதுஅச தியில்ஒரு பேரொலி செவிகேட்டு,
உரிய நெஞ்சகம் துணுக்கென அச்சமுற் றேய்ந்து,
'தெரிவம் ஈ'தெனச் சென்றது திடம்கொடு; பின்னர் 40

*அசதியில்=திடீரென்று.*

'அன்ன ஓரிதான் சிறிதுதூ ரத்தமர்க் களம்போய்ப்
பின்னர் ஓர்மரத் தடியுறு பேரிகை நோக்கி,
முன்னர் மேவும்அத் தோலையும் கோலையும் முறையால்
உன்னி யேதன துளத்தினில் உணர்ந்ததிவ் வாறு: 41

*ஓரி=நரி, அமர்க்களம்=போர் புரியுமிடம், பேரிகை=போர் முரசு, மேவுதல்=பொருந்துதல், உன்னி=நினைத்து.*

'தங்கும் இம்மரச் சினையினில் தாழ்ந்தகோ டொன்று
பொங்கு காற்றினல் தாக்கலால் பொம்மெனும் ஒலிதான்
இங்கு மேவும்இப் பேரியில் எழுந்துள'தென்று,
'சிங்க மன்ன!நீ அஞ்சுகை தகா'தெனச் செப்பி 42

*மரச்சினை=மரக்கிளை, கோடு=கிளை, பொம்மெனல்=ஒலிக் குறிப்பு, மேவும்=பொருந்தும், பேரி=முரசு, அஞ்சுகை=பயப் படுதல்.*

'சென்று நானதை விரைவினில் தெரிந்திவண் மீள்வேன்,'
என்ற தன்விடை கொண்டு,சஞ் சீவக எருதை
நன்று கண்டு,நண் புற்று,மீண் டரசனை நண்ணி,
'ஒன்று பேரொலிக் கேற்றதவ் வுயிர்,'என உணர்த்தி 43

இவண் = இவ்விடம், விடை = உத்தரவு, ஒன்றுதல் = பொருந்துதல்.

'நினது நட்பினை விரும்பிய தது,'என நிருபன், [போய்த்
'அனைய தேல்,அதை அழைத்துவா,' என்னலும், அது
தனைநி கர்த்திடும் எருதினைத் தலைவன்முன் விடுத்தே
இனிய நண்பொடும் இருந்திட இருத்திய தன்றே. 44

நிருபன் = அரசன், இருத்துதல் = இருக்கச் செய்தல்.

சிங்க மன்னனும் இடபமும் உயிரெனச் சிறந்தே
அங்கி ருந்தர சாளும்நாள் பழையதன் அமைச்சர்-
தங்கள் நண்பெலாம் மறந்து,சஞ் சீவகன் தனையே
பொங்கும் மந்திரி யெனக்கொளப் போயது நெடுநாள். 45

பரிச னங்களும் மந்திரி கூட்டமும் பார்த்தே,
'அரச னும்தனை அடைந்தநம் மிடத்தில்அன் பற்றுன்!
இரைஅ ருந்துவ தேதுநாம் இனி!'என, விளங்கக்
கரட கன்றனை நோக்கியே தமனகன் கழறும்: 46

பரிசனம் = ஏவல் செய்பவர், கழறுதல் = சொல்லுதல்.

'காட்டி லேதனித் திருந்தசிங் கத்துடன் கலந்த
மாட்டை வங்கண மாகநாம் கூட்டிய மாண்பு,
கோட்டு வெங்களிற் றுனைதன் மத்தகம் கொத்தத்
தோட்டி பாகனுக் கீந்தவா றும்!'எனச் சொல்லி 47

வங்கணம் = சினேகம், மாண்பு = பெருமை, கோடு = தந்தம், வெங்களிற்றுனை = கொடிய ஆண் யானை, மத்தகம் = தலை, தோட்டி = அங்குசம், பாகன் = மாவுத்தன்.

## 4. மூவர் தாமே கேடு செய்துகொண்ட கதை

'முன்பு தங்களால் தாங்களே கெட்டனர் மூவர்
என்ப தோர்கதை உண்டெ'னத் தமனகன் இயம்ப,
அன்பொடு, 'அக்கதை யாது?'எனக் கரடகன் வினவ,
சம்பு வோடுசங் யாசிதூ தியது,'எனச் சாற்றும்: 48

**சம்பு = நரி, தூதியது = தூதியினுடையது.**

'சன்னி யாசியோர் **தேவசன் மா**அவன் தானே
முன்னி யாசகத் தனேகநாள் தேடிய முதலைத்
துன்னு கந்தையுள் பொதிந்துதோன் ருதுவைத் திருந்தான்
அன்ன செய்திஆ **ஷாடபூ** தியும்உளத் தறிந்து 49

**முன்னுதல் = நினைத்தல், யாசகம் = பிச்சையெடுத்தல், முதல் = பணம், பொதிந்து = முடிந்து.**

'சந்த தம்திரு டாமல்நாம் சன்னியா சியின்மேற் -
கந்தை ஒன்றினை எவ்வகை யாகிலும் கவர்ந்தால்,
நந்தம் வேசியர்க் கனேகநாள் நடக்கும்,'என் றெண்ணிப்
புந்தி கூர்ந்தொரு பிரமசா ரியின்அவண் பொருந்தி 50

**சந்ததம் = எப்போதும், நந்தம் வேசியர் = நம் தாசிகள், புந்தி கூர்ந்து = சிந்தித்து, பிரமசாரி = திருமணமாகாதவன், அவண் = அவ்விடம்.**

'அன்ன வன்றனை அடிபணிந்து, 'அடியனேன் தனக்கு
மன்னும் நற்கதி பெறுவழி அருள்!'என வழுத்திப்
பன்னும் இங்கிதத் தொடுபணி விடைபல இயற்றித்
துன்னும் நாளில்ஓர் அந்தணன் அமுதிடத் துய்த்தே 51

**வழுத்துதல் = சொல்லுதல், இங்கிதம் = குறிப்பு, பணிவிடை = தொண்டு, துன்னும் = தங்கியிருக்கும், அமுது = உணவு, துய்த்து = சாப்பிட்டு.**

‘ இருவ ரும்ஒரு பெருவழி நடந்தனர் ; இவன்தான்
ஒருது ரும்புதன் தலைமிசைக் கொண்டு,‘உண வளித்தோற்கு
உரிய நன்மனைத் துரும்பிதோ ஒட்டிவந் ததுபார்
குரவ! ஆங்கிதைச் செலுத்துவன்,’ என்றுகொண் டோடி 52

*தலைமிசை = தலைமேல், அளித்தோற்கு = கொடுத்தவனுக்கு, குரவன் = குரு, ஆங்கு = அவ்வீட்டில்.*

‘ அந்த வீட்டில்உய்த் தவனென மறைந்திருந் ததன்பின்
வந்த சீடனை நம்பியே தேவசன் மாதன்
கந்தை அன்னவன் கைக்கொடுத்து, ஒருகுளக் கரையில்
முந்து நீர்ச்சவு சாதிகள் முடித்துமீள் காலை 53

*உய்த்தவன்என = செலுத்தியவனைப்போல, சவுசாதிகள் = காலலம்புதல் முதலிய சுத்திகள்.*

‘ பொருக டாஇரண் டங்கெதிர்ப் பாய்ந்திடப் பொழியும்
குருதி பாரினில் வீழ்ந்தது பருகிடக் குறுகி
நரிஅத் தாக்கிடைப் பட்டுயிர் இழந்தது நாடிப்
பரிவி னேடவன் பார்த்துநின் றேகினன்; அதற்குள் 54

*பொருகடா = சண்டைக்கடா, எதிர்ப்பாய்ந்திட = எதிரெதிராக முட்ட, குருதி = இரத்தம், பார் = பூமி, பருகிட = குடிக்க, குறுகி = நெருங்கி, தாக்கு = இடி, பரிவு = துன்பம்.*

‘இந்த வேளைபோல் எய்தரிது!’ என்னஅச் சீடன்
கந்தை தான்கொடு நடந்தொரு காட்டினில் கரந்தான் ;
சிந்தை நைந்துசந் யாசியும் தேடிஓர் நகரில்
தந்து வாயன்வீட் டிடைஇராத் தன்னில்வந் தடைந்தான்.

*எய்தரிது = கிடைப்பது அருமை, கொடு = கொண்டு, கரந்தான் = மறைந்தான், சிந்தை = மனம், நைந்து = வருந்தி, தந்துவாயன் = கைக்கோளன் (துணி நெய்பவன்), வீட்டிடை = வீட்டில்.*

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

'தேடிய பொருள்இ ழந்த
தேவசன் மாதன் நெஞ்சம்
வாடியங் கிருப்ப, தந்து -
வாயன்றன் மனைவி யோடே
'கூடிய சோரன் ஆன
கொழுநன்தான் வந்தான்,' என்றே
நாடிய தூதி ஆன
நாவிதன் தேவி சொன்னாள். 56

**சோரன் = கள்ளப்புருடன், கொழுநன் = கணவன், நாடிய = ஆராய்ந்தறிந்த, நாவிதன் = அம்பட்டன், தேவி = மனைவி.**

'கேட்டலும் தந்து வாய்ச்சி
கெழுமுதன் கொழுநன் தங்கள்
வீட்டில்இல் லாதி ருக்கும்
வேளைபார்த் தவள்பின் சென்று,
கோட்டிசேர் தந்து வாயன்
குறுகிடக் கண்டு, நெஞ்சில்
வாட்டமாய்த் திரும்பி வீட்டில்
வந்தனள்; அவனும் கண்டான். 57

**தந்துவாய்ச்சி = கைக்கோளப்பெண், கெழுமுதல் = நெருங்குதல், கோட்டி = கூட்டம்.**

'கண்டவன், கண்கள் சேப்பக்
கடுஞ்சினம் கொடு,செந் தீயை
உண்டவன் போலச் சீறி,
உதாசினம் பலவும் வாயால்
விண்டு,அவள் தன்னைத் தூணில்
வெருவுறக் கட்டித் தூக்கம்
கொண்டனன்; தூதி தானும்
குறுகினின் றிதனைக் கண்டாள். 58

**சேப்ப = சிவக்க, உதாசினம் = இகழ்ச்சி வார்த்தை, விண்டு = சொல்லி, வெருவுதல் = அஞ்சுதல்.**

'என்னைநீ கட்டி வைத்தே
ஏகிஅங் கவனைக் கூடிப்
பின்னைவா,' என்றத் தூதி
பேசினள் ; கட்டி வைத்து
மின்னனாள் தந்து வாய்ச்சி
விளக்கினை நிறுத்திப் போட்டே
அன்னவன் அருகிற் சென்றே
அணைந்துபோ கித்தி ருந்தாள். 59

' விழித்தனன் தந்து வாயன் ;
வேண்டிய வாறு வைதே
பழித்தனன் ; அதற்குச் சற்றும்
பகர்ந்திடா திருத்த லாலே,
கழித்தனன் உறையைச் சூரிக்
கத்தியைக் கொண்டு கற்பை
அழித்தவள் மூக்கைப் பற்றி
அரிந்துபோட் டுறங்கும் போதில் 60

**வைதல் = திட்டுதல், பகர்தல் = சொல்லுதல்.**

' தந்துவா யன்ம டந்தை
தான்சுகம் கண்டு மெள்ள
வந்தனள் ; தூதிக் குற்ற
வண்ணங்கண் டவளை விட்டு,
முந்தவன் கட்டி வைத்த
முறைமைதப் பாள்போல் நின்றாள் ;
அந்தவே ளையில்வி ழித்தான்
அவனையே பழிக்க லுற்றாள் : 61

**மூந்து = முன்பு.**

'ஐயையோ! பாத கா! நீ
அரிந்தமூக் கும்வ ளர்ந்து
துய்யவள் ஆனேன் என்றன்
துகள் அறு கற்பி ஞலே!
வெய்யஉன் றன்னைப் போல
வேருெரு வரையான் தீண்டில்
வையகம் பழிக்கும்! எங்கள்
மரபுக்கும் ஈனம் ஆமே!' 62

**துய்யவள் = பரிசுத்தமானவள், துகளறு = குற்றமற்ற, வெய்ய = கொடிய, வையகம் = உலகம், மரபு = குலம், ஈனம் = இழிவு.**

'என்னலும், அவன்ப யந்தே
எழுந்திருந் தவளை நோக்கித்
தன்னைத்தான் பழித்துக் கொண்டு
தாளிணை தன்னில் வீழ்ந்தே
அன்னவள் கட்ட விழ்த்திட்டு
ஆரவே மோந்து புல்கி,
'மின்னிழை! பொறுப்பாய் நீஎன்
பிழை!' என வேண்டிக் கொண்டான். 63

**ஆர = திருத்தியாக, புல்கி = தழுவி, மின்னிழை = ஒளிவீசும் ஆபரணம் அணிந்தவளே.**

'அரிந்துமுன் விழுந்த மூக்கை
அவள்கையில் எடுத்துக் கொண்டே,
விரைந்துபோய்க் கணவன் தூங்கும்
வீட்டினிற் படுத்துக் கொண்டே
இருந்தனள் விசார மிட்டே,
'இவனுக்கென் சொல்வோம்!' என்று;
பொருந்திய கங்குற் போது
புலர்ந்துபுள் எழுந்த தார்த்தே. 64

**விசாரம் = ஆலோசனை, புலர்தல் = விடிதல், புள் = பறவை, ஆர்த்தல் = ஒலித்தல்.**

'நாவிதன் எழுந்தி ருந்து
நண்ணியே,'கத்திக் கூட்டைத்
தா,'எனக் கத்தி ஒன்று -
தன்னையங் கெடுத்துப் போட்டாள் ;
தேவிமேற் கோப மாகித்
திரும்பியங் கவனும் போட்டான் ;
'பாவி !நீ கெடுத்தாய் ! மூக்கைப்
பதைத்திடச் சிதைத்தாய் !' என்றாள். 65

'கையினில் எடுத்த மூக்கும்
கத்தியும் காட்டிக் காட்டி,
'ஐயகோ ! இந்த ஊரில்
அரசன்கே ளானோ ?' என்ன,
வெய்யவன் தூதர் கண்டு
விசித்துநா விதனைக் கொண்டு
தையலும் பின்னே செல்லத்
தரணிகா வலன்முன் போனார். 66

**ஐயகோ = ஐயோ, வெய்ய வன் தூதர் = மிகக் கொடிய தூதுவர், விசித்தல் = கட்டுதல், தையல் = பெண், தரணி = பூமி, காவலன் = அரசன்.**

'மன்னவன் தானும் மிக்க
மந்திரி மாரும், 'நீயார் ?
உன்னைமூக் கரிந்த வாறேது ?
உரை,'என, 'பரத்தை வீட்டில்
பொன்னணி மார்பீர் ! போனான் ;
புலந்திருந் தேன் ;இப் பாவி
என்னையோர் கத்தி யாலே
எறிந்துமூக் கரிந்தான்!' என்றாள். 67

*பரத்தை = தாசி, புலந்து = வருந்தி.*

'நாவிதன் தன்னைக் கேட்க,
'நானொன்றும் அறியேன்!' என்றான்;
'நீவிர்இங் கிவனைச் சூல
நிலைக்கழு ஏற்றும்,' என்ன,
கூவி,'அங்கு அவளை மூக்கைக்
குறைத்தவன் வேறே!' என்று
தேவசன் மாதி தெல்லாம்
செப்பினன் வலிய வந்தே. 68

**நீவிர் = நீங்கள், சூலநிலைக் கழு = மும்முனையாய் அமைந்த கழுமரம், கூவி = அழைத்து, இதெல்லாம் = நடந்த இச்செய்தியெல்லாம்.**

'தேவசன் மாவி னாலே
தெளிந்துமந் திரியோ டாய்ந்து,
நாவிதன் தனைவி டுத்து
நரபதி தந்து வாயன்
தேவியை முலையும் மூக்கும்
சிதைத்தனன்; தூதி யான
பாவியைப் புரியைச் சுற்றிப்
படர்எரி கொளுத்தி விட்டான்.' 69

**ஆய்ந்து = ஆராய்ந்து, சிதைத்தனன் = அறுத்தான், நரபதி = அரசன், புரி = வைக்கோற்புரி, எரி = நெருப்பு.**

இவ்வகை சொல்லக் கேட்டே
கரடகன், 'இதற்கு நாம்செய்து
உய்வகை ஏதிங்கு?' என்னத்
தமனகன், 'உபாயத் தாலே
அவ்விரு வரையும் வெவ்வே
றுகநட் புடைத்துக் காட்டைக்
கைவசம் ஆக்கிக் கொள்ளக்
கருதுவ துறுதி,' என்றே 70

**உய்வகை = பிழைக்கும் உபாயம், நட்பு உடைத்து = சினேகத்தைப் பிரித்து.**

'நந்திய காரி யத்தை
நாடியே எடுத்துக் கூட்டல்,
வந்துறும் இடரைத் தம்பால்
வாராமல் தடைப டுத்தல்,
முந்துற அருஞ்செல் வத்தை
முயற்சியால் தேடிக் கொள்ளல்,
மந்திர விசாரம் முற்றும்
வல்லவன் அமைச்சாம்,' என்றான். 71

**நந்திய = அழிந்த, முந்துற = முதலாவதாக, மந்திர விசாரம் = மந்திராலோசனை, அமைச்சாம் = மந்திரியாவன்.**

'ஏகமாய் இருக்கும் சிங்க
இடபநட் புடைக்க நம்மால்
ஆகுமோ?' என்ன, 'ஓகோ!
அருமையோ! உபாயத் தாலே
காகம்ஓர் அரவைக் கொன்ற
கதையறி யாயோ?' என்ன,
தாகமோடு, 'உரைநீ,' என்னத்
தமனகன் சொல்ல லுற்றான்: 72

**ஏகம் = ஒன்று, அரவை = பாம்பை, தாகம் = ஆவல்.**

## 5. காகம் நாகத்தைக் கொன்ற கதை

'கோடுறு சினையிற் காகம்
கூடுவைத் தனேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே
ஆடியல் கரும்பாம் பொன்றங்கு
அதுபெறும் முட்டை எல்லாம்
நாடியே குடித்துப் போட,
நலிந்துளம் மெலிந்து வாடி 73

**பேடு = பெண் பறவை, ஆடியல் = ஆடும் தன்மை.**

'தன்னுயிர்ப் பாங்க ஞன
சம்புகன் அருகு போய், 'இங்கு
என்னசெய் குவன்நான்!' என்ன,
'இதைக்கொலல் அரிதோ! நீபோய்
மன்னவன் தேவி ஆடும்
மஞ்சனச் சாலை புக்குப்
பொன்னணி கொண்டு வந்து
போடுக பொந்தில்,' என்ன 74

**பாங்கன் = நண்பன், சம்புகன் = நரி, மஞ்சனச்சாலை = குளியலறை, புக்கு = புகுந்து.**

'காகம்அப் படியே செய்யக்
காவலன் ஏவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை
ஈர்ந்தனர்; ஈரும் போதில்
நாகம்அங் கிருந்து சீற,
நறுக்கினர் இருதுண் டாக;
ஆகையால், உபாயத் தாகா-
திலை,'என அறையும் பின்னும்: 75

**காவலன் = அரசன், ஏவலாளர் = வேலைக்காரர், ஏகி = சென்று, மாமரம் = பெரியமரம், ஈர்தல் = அறுத்தல், அறைதல் = கூறுதல்.**

## 6. சிங்கத்தை முயல் கொன்ற கதை

'குறுமுயல் சிங்கந் தன்னைக்
கொன்றதொன் றுண்டே தென்னில்,
செறியுமோர் காட்டி லேயோர்
சிங்கமுண்டு; அந்தக் காட்டில்
உறுவிலங் கனைத்தும் வேட்டை
ஆடிஊன் மிகவும் தின்று
வெறிகொடு திரியும் நாளில்
விலங்கெலாம் ஒருங்கு கூடி 76

**செறியும் = அடர்ந்திருக்கும், ஊன் = இறைச்சி, விலங்கு = மிருகம்.**

‘ஆணிளஞ் சிங்க மே! உன்
அடவியில் விலங்கை எல்லாம்
வீணிலே கொல்ல வேண்டா;
விதத்தினில் தினமொன் றுக
ஊனனு களிப்போம்,’ என்ன,
உண்மையாக் கொண்டு சிங்கம்
ஆணையும் இட்டொவ் வொன்று
அருந்தியங் கிருக்கும் நாளில் 77

**ஊண் = உணவு, ஆணை = கட்டளை, அருந்துதல் = சாப்பிடுதல்.**

‘தனிமுயல் ஒன்றுக் கோர்நாள்
தன்முறை வருத லோடும்,
‘இனிஅது விடாது நம்மை!
எனினும், ஓர் எடுப்பெ டுத்து
வினையைஇப் போது செய்து
வென்றுநாம் உய்ந்தோ மாகில்,
நனிவிலங் கனைத்தும் உய்யும்;
நமக்கும்நற் புகழுண் டென்றே 78

**எடுப்பெடுத்தல் = உபாயம் செய்தல், வினை = செயல், நனி = மிகுதி, உய்யும் = பிழைக்கும்.**

‘கருதியச் சிங்கம் தின்னும்
கடும்பசி வேளை தப்பி
வருதலும் முயலை நோக்கி
மன்னன், ‘நம் பசிவே ளைக்குப்
பெருமத வேழ மேனும்
பிந்துவ தில்லை; பிந்தி
வருவதென்? உரைநீ,’ என்று
மனந்தனிற் சினந்து கூற 79

**வேழம் = யானை, பிந்துவது = காலம் தாழ்த்துவது.**

‘ஐய ! நின் பசிவே ளைக்கே
அடியனேன் வந்தேன் ; ஆங்கோர்
வெய்யசிங் கத்தைக் கண்டு
வெருவிஅங் கொளித்தி ருந்தேன் ;
பையவே சிங்கம் ஆங்கோர்
பருமுழை புகுந்த பின்னர்த்
துய்யஉன் பக்கல் வந்தேன்
சுவாமி !’என் றிறைஞ்சி நிற்க 80

வெய்ய = கொடிய, வெருவி = பயந்து, பைய = மெள்ள, பருமுழை = பெருங்குகை, துய்ய = பரிசுத்தமான, பக்கல் = பக்கம், இறைஞ்சுதல் = வணங்குதல்.

‘சிங்கம்நாம் அல்லால் வேறோர்
சிங்கம்நீ கண்டா யாகில்,
அங்கதைக் காட்ட வா,’ என்று
அழைத்தலும், அழைத்துப் போய், ஓர்
பங்கமும் புனலும் சேர்ந்த
பாழ்ந்துர வதனைக் காட்ட,
அங்கதை எட்டிப் பார்த்தது ;
அதன்நிழல் உருவம் தோன்ற 81

பங்கம் = சேறு, புனல் = நீர், பாழ்ந்துரவு = தூர்ந்த கிணறு.

‘தன்உரு நிழலைத் தானே
சத்துரு என்று பாய்ந்து
துன்னுபங் கத்த ழுந்தித்
துளங்கியே உயிர்இ ழந்தது
என்னலால், உபாயத் தாலே
யாவையும் வெல்ல லாம்,’ என்று
இன்னமோர் நண்டு கொக்கை
ஈர்ந்ததோர் கதையும் சொல்லும்: 82

சத்துரு = பகைவன், பங்கம் = சேறு, துளங்கி = சோர்ந்து.

## 7. நண்டு கொக்கைக் கொன்ற கதை

### சந்தக் கலி விருத்தம்

‘ மீனென்றறையு மேதின்றுடல்
மிகவேவளர் கொக்கு,
தானங்கொரு பால்நண்டு-
தனைக்கண்டிரை கொள்ள
ஞானந்தரு மோனங்கொடு
நண்ணும்படி கண்டப்-
பானண்டதை, ‘நீஇங்குறை
பண்பேதுரை,’ என்ன 83

**ஞானம் = அறிவு, மோனம் = பேசாதிருத்தல், கொடு = கொண்டு, பானண்டு = பால் நண்டு.**

‘ என்னென்றுரை செய்வேன்! இனி
யான் எங்ஙனம் உய்வேன் !
கொன்னுந்திய வலைகாரர்கள்
கூடிக்குளம் ஏரி
மன்னுந்தடம் எல்லாம்மிக
வளைந்தேவலை வீசிச்
சின்னஞ்சிறு பொடிமீன்முதல்
சேரப்பிடித் தாரே ! 84

**கொன்னுந்திய (கொல் + நுந்திய) = கொலைத் தொழிலைத் தூண்டிய, தடம் = குளம்.**

‘ இந்தக்குளம் நாளைக்கென
எண்ணிக்கொடு போனார்;
அந்தப்படி வந்தேபிடித்-
தவர்காவிலெ டுத்தே

சந்தைக்கடை தொறும்மீன்கடை-
தானேயென விற்பார்!
'எந்தப்படி இவர்த்தப்புவது!'
எனவெண்ணியி ருந்தேன்! 85

**கா=காவடி, இவர்த்தப்புவது=இவரைத் தப்பிப்பிழைப்பது.**

'அந்தப்பழி காரர்வரு
முனமேயொரு பாயம்
சிந்தித்தனன் நான்;அப்படிச்
செய்தால்,அவை உய்யும்:
எந்தப்படி யானும்அழைத்து
இங்கேவரு வாயேல்,
இந்தக்குளம் விட்டோர்குளம்
எய்தும்படி செய்வேன்.' 86

'என்றேபக ராசன்சொல,
இயல்நண்டதை நம்பிச்
சென்றேபல மீனோடுரை
செயவே,அவை கூடி,
'நன்றே!'என வர,ஒவ்வொரு
நடைக்கொன்றுகொண் டேகிக்
கொன்றேசில தின்றேசில
கொடும்பாறையில் உலர்த்தி 87

**பகம்=கொக்கு, இயல்=மென்மை, உரைசெய=சொல்ல, கொடும்பாறை=வட்டக்கல்.**

'அலவன்தசை தனையுண்டிட
அதையுங்கொடு செலஅங்-
கிலமெங்கணும் மீன்என்புகள்
நிறைகொண்டது கண்டே,

'நலதிங்கிது பலமீனையும்
நனிதின்றது! நமையும்
கொலவந்தது! நாமும்இது
கொலுமுன்கொலு வோமே. 88

**அலவன் = நண்டு, தசை = இறைச்சி, எங்கணும் = எவ்விடத்திலும், என்புகள் = எலும்புகள்.**

நம்மால்வரு பிழையேஇது;
நாமும்அந்த மீன்போல்
சும்மாஇருந் தனமேற்கொலும்;
அதிலேஒரு சூழ்ச்சி
எம்மால்வகை வருமாறினிச்
செய்வேம்,' என எண்ணி,
அம்மாபகம் கழுத்தைக்கவை
அடியால்நெருக் கியதே. 89

**அம்மா பகம் = அந்தப் பெரிய கொக்கின், கவை அடி = பிளவுபட்ட கால்.**

'நெருக்குண்டற வீழ்ந்தேபகம்
நீங்கிற்றுயிர்; அலவன்
இருக்குந்தலம் ஏகித்தன-
தினத்தோடிருந் ததுவே;
செருக்கும்பகை பெரிதாகிலும்
சிலதந்திர வகையால்
முருக்கும்படி நினைத்தால்,அதின்
முடியாததும் உளதோ?' 90

**செருக்கும் = அகங்கரிக்கும், முருக்குதல் = அழித்தல்.**

எனவேதம னகன்ஓதிட,
இசைந்தேகர டகன்,'இம்
மனம்ஏகம தெனவேதினம்
வாழும்இவர் நட்போ,

கனமானதந் திரத்தாலன்றிக்
கலையாததற் கேற்ப
நினைவாய்தம னக!நீ,'என
நிகழ்த்திக்கர டகனே 91

**கனமான = பெரிய, நிகழ்த்தி = சொல்லி.**

### *அறுசீர் ஆசிரிய விருத்தம்*

இன்னன பலவு பாயம்
இயம்பவே, தமன கன்தான்
தன்னிகர் இலாத சிங்கம்
தனித்ததோர் வேளை பார்த்தங்கு
அன்னவன் பக்கல் சென்றே-
அடிபணிந் திருகை கூப்பி,
'மன்ன!ஓர் தீங்கு கண்டு
வந்தனன் நின்பால்,' என்ன 92

**இன்னன = இவை போல்வன, இயம்ப = சொல்ல, கூப்பி = குவித்து.**

'யாதுதீங் கினைநீ கண்டிங்கு
எய்தினை? உரைத்தி,' என்ன,
'ஓதருங் கருமம் சொல்லின்,
உனதுசித் தத்தில் வைத்த
காதலால் மெய்யும் பொய்யாக்
காணுமோ! தெரியா தென்றே
ஈதுநான் சொல்ல அஞ்சி
இருந்தனன் இன்று காறும். 93

'அவ்வகை எண்ணி ஞலும்,
அல்லது கோபித் தாலும்,
எவ்வகைத் தண்டித் தாலும்
இறைவருக் கிடர்வா ராமல்

செவ்வைதேர் புத்தி சொல்லிச்
செய்கரு மஞ்செய் வித்தால்,
வவ்விய தெவ்வர் ஆவி
மாய்ந்திடும் திண்ணம் மன்னு! 94

**செவ்வை தேர் = நேர்மையை ஆராய்கின்ற, வவ்வுதல் = அபகரித்தல், தெவ்வர் = பகைவர், ஆவி = உயிர், திண்ணம் = உண்மை.**

'மந்திர விசாரத் தாலே
மன்னவன் மயக்கம் நீக்கல்,
தந்திர உபாயத் தாலே
சத்துரு நாசம் பண்ணல்,
முந்திய செங்கோல் நூலின்
முறைதவ றுதி யற்றல்,
இந்தவா றமைச்சர் நீதி;
இவைசெயார் நரகில் வீழ்வார். 95

**செங்கோல் நூல் = ஆட்சி நூல்.**

'ஐய! நின் பழைய சேனை
அமைச்சரை நீக்கி விட்டே
வெய்யகோட் டிடபந் தன்னை
விரும்பிநீ உறவு கொண்டு
மையலுற் றிருத்த லால், அம்-
மாடர சாள எண்ணிப்
பையவே அதற்கு வேளை
பார்த்திருக் கின்ற தென்ன 96

**மையல் = செருக்கு, கோட்டு இடபம் = கொம்பையுடைய எருது.**

'மடங்கலும் நகைத்து,' ஈ தென்ன
வார்த்தைநீ சொன்னாய்! நம்மை
அடைந்துமுன் நமக்குச் சொன்ன
ஆணையும் வார்த்தைப் பாடும்

கடந்து,நம் அரசை ஆளக்
கருதுமோ ? கருதாது !' என்ன,
'தொடர்ந்துநான் விசாரி யாமற்
சொல்லுவ தில்லை,' என்றே 97

**வார்த்தைப்பாடு=உறுதி மொழி.**

'என்னெதி ராகத் தானே
இகழ்ந்துநின் சத்தி எல்லாம்
தன்னது சத்திக் கீடு
தானல என்று, மற்றும்
பன்னுவாய் மதங்கள் பேசிப்
பகைநினைத் திருந்த தென்றால்,
பின்னையும் இதிற்சந் தேகம்
பேசில்யான் சொல்வ தென்னே! 98

**வாய்மதம்=வாய்க் கொழுப்பால் மதியாமல் பேசுதல்.**

***'அரசரை இகழ்ந்து வாழும்***
***அமைச்சரை, அமைச்சர் தம்மைப்***
***புரைபடத் துரத்தி வாழும்***
***புரவலர் தம்மை என்றும்***
***திருமகள் எனும்ம டந்தை***
***சேர்ந்தினி திருந்து வாழாள் ;***
***இருநிலக் கிழத்தி தானும்***
***இவரைவிட் டகலப் போவாள். 99***

***புரைபட=வருந்த, புரவலர்=அரசர், திருமகள்=இலட்சுமி, இருநிலக்கிழத்தி=பெரிய பூமிதேவி.***

***'கொற்றவர், காரி யத்தில்***
***குல்ம்மதி யூகந் தன்னால்***
***உற்றவர் தம்மை நீக்கி***
***ஒருவனை முதலா வைப்பின்,***

மற்றவன் அரசை எல்லாம்
வௌவியே கொண்டு பின்னும்
செற்றமுங் கூர்ந்து வேந்தைச்
செறுத்திட நினைப்பன் அன்றே? 100

கொற்றவர் = அரசர், செற்றம் = தணியாத கோபம், கூர்ந்து = மிகுந்து, செறுத்தல் = அழித்தல்.

'மூடருக் குபகா ரந்தான்
முந்துறச் செய்து, தம்மைப்
பீடுசெய் தவர்க்குத் தாமும்
பெரிதுகைம் மாறு செய்யார்
நீடிய உபகா ரங்கள்
நிகழ்த்தியே தமக்குத் தாமே
கேடுகள் தேடிக் கொள்வார்
கேண்மையை நினைக்கொ ணாதே. 101

கைம்மாறு = பதில் உதவி, நிகழ்த்தி = செய்து, கேண்மை = சினேகம்.

'நஞ்சொடு கலந்த சோற்றை,
நடுக்குற அசைந்த பல்லை,
வஞ்சகர் நட்பை, மிஞ்சும்
மந்திரி தன்னைச் சற்றும்
எஞ்சிட வைத்தி டாமல்
எடுக்கவே வேண்டும்; வைத்தால்,
அஞ்சிய துன்பம் எல்லாம்
ஆக்கும்,' என் றறையக் கேட்டு 102

நஞ்சு = விஷம், மிஞ்சிட = ஓங்க, எஞ்சுதல் = மிகுதல்.

'யாதுசஞ் சீவ கன்நம்
இடத்தினிற் செய்த குற்றம்?
ஓதுநீ,' என்னச் சிங்கம்,
தமனகன் உரைக்கும்: 'ஓர்நின்

போதனை அன்றி யேதன்
புத்திமேற் கொண்டு சொல்லும்
தீதுடன் உனையி கழ்ச்சி
செய்தல்போ தாதோ ?' என்ன 103

'தஞ்சம்என் றடைந்த பேர்க்குத்
தான் அப யங்கொ டுத்தே
வஞ்சகம் நினைத் துக் கோறல்
வண்மையன் று ; உலகிற் சொல்லும்
பஞ்சபா தகத்தின் முந்தும்
பாதகம் இதுவே ; மேலும்
கொஞ்சம்இல் நிரயந் தோறும்
குளிப்பவர் இவரே கண்டாய். 104

**தஞ்சம் = அடைக்கலம், அபயம் = அடைக்கலம், கோறல் = கொல்லுதல், வண்மை = தருமம், பஞ்சபாதகம் = (கொலை, பொய், களவு, கள்ளுண்ணல், குருநிந்தை என்னும்) ஐம்பெரும்பாவங்கள், முந்தும் = முதன்மையாகும், நிரயம் = நரகம்.**

'நாமதை விரும்பிக் கொண்ட
நட்பலால் பிறிதொன் றில்லை ;
தீமையங் கதுசெய் யாது ;
செய்யினும், பொறுப்ப தன்றி,
யாமிடர் செய்தல் தீதே,'
என்றுபிங் கலன்தான் சொல்ல,
'சாமி !இங் கிதுவேந் தற்குத்
தகாதெ'தனப் பின்னும் சொல்லும் : 105

'அன்னிய ரேனும், தொல்லை
அமைச்சர்க ளேனும், மற்றும்
மன்னிய சுற்ற மேனும்,
மைந்தர்க ளேனும், வேந்தன்

முன்னியே ஒருவர் மீதில்
மோகம்வைத் திடில்,அ வன்பால்
துன்னிய அரசும் மிக்க
சுகமும்தாம் கொள்வர் மன்னோ. 106

தொல்லை = பழைமை, மன்னிய = நிலை பெற்ற, முன்னி = நினைத்து, மோகம் = விருப்பம், துன்னிய = பொருந்திய, மன்னோ = அசைநிலை.

'செல்வத்தில் ஆசை இல்லார்
செகத்தினில் ஒருவர் உண்டோ?
நல்வினை இல்லா ஏற்றை
நம்பிஉன் செல்வ மான
பல்வகை விசாரிப் பெல்லாம்
பரிந்துநீ அளித்தாய்; உன்னைக்
கொல்வகை உபாயம் நெஞ்சிற்
குறித்திருக் கின்ற தன்றே. 107

செகம் = உலகம், ஏற்றை = எருதை, பரிதல் = அன்பு காட்டல், அன்றே = அசைச் சொல்.

'நல்லறி வமைச்சர் புத்தி,
நஞ்சுபோல் இருந்து, பின்னர்
எல்லைஇல் செல்வம் ஆவி
இன்பமும் உதவும்; நல்லோர்
அல்லவர் புத்தி, முன்னம்
அமுதெனத் தோன்றிப் பின்னர்
ஒல்லையிற் செல்வம் இன்பம்
உயிரையும் இழக்கப் பண்ணும். 108

எல்லை = அளவு, ஆவி = உயிர், ஒல்லை = விரைவு.

'தனக்குரி யாரை விட்டுத்
தான்பிறர்க் கமைச்சு நல்கும்
மனத்தனும் அரசன், பின்னை
வறுமையாம் பரவை வீழ்ந்து,

கனக்கவெங் துயர மான
கராவின்வாய்ப் பட்டு மாழ்கி,
இனத்தராம் புணைகா ணுமல்
இழப்பன்ஆ ருயிரை மன்னே! 109

நல்குதல் = கொடுத்தல், வறுமை = தரித்திரம், பரவை = கடல், கரா = முதலை, மாழ்குதல் = மயங்குதல், இனத்தர் = சுற்றத்தார், புணை = தெப்பம், மன்னே = அசைச் சொல்.

'நச்சுமா மரத்தை வைத்து
நளிகடல் அமிர்தம் பெய்தும்,
பச்சிலை முதலாக் கொல்லும்;
பாம்பு,பால் பெய்திட் டாலும்,
குச்சித விடத்தை நல்கும்;
குவித்தசர்க் கரைமேல் நட்டு
மிச்சமாத் தேன்பெய் தாலும்,
வேம்புதன் கசப்பு மாரு. 110

குச்சிதம் = இழிவு, நல்கும் = கொடுக்கும், வேம்பு = வேப்ப மரம்.

'இன்னவை போலும் துட்டர்க்கு
இதம்பல விதம்செய் தாலும்,
பின்னும்அங் கவர்துன் மார்க்கம்
பெருகும்;நற் குணத்தர் ஆகார்;
அன்னரை மூலத் தோடே
அழிக்கினும், சயமாம்; துட்டர்
மன்னுயிர் அழித்தா லேதுன்-
மார்க்கமும் அழியும் தானே. 111

இதம் = நன்மை, துன்மார்க்கம் = தீய வழி, அன்னர் = அப்படிப்பட்டவர், மூலம் = வேர், சயம் = வெற்றி.

'வேந்தனுக் கபாயம் வந்தால்
விளையுமுன் அறியப் பண்ணல்,
போந்தஅவ் வபாயந் தன்னைப்
புத்தியி னலே நீக்கல்,

ஏந்தல்ஓர் மோகத் தாலே
எண்ணம்அற் றிருந்தா னேனும்
ஆந்தக உறுதி சொல்லல்,
அமைச்சர்கள் நீதி ஆமே. 112

போந்த = வந்த, ஏந்தல் = அரசன்.

'எத்தனை விதஞ்சொன் னாலும்
எள்ளள வேனும் நின்றன்
சித்தமும் அறிய இல்லை!
செய்வதொன் றறியேன்! வேந்தர்
மத்தவெங் களிறு போல
மனஞ்செலும் வழியே சென்று
மெத்தவம் விளைந்த தென்றால்
வெறுப்பர்மந் திரியை!' என்ன 113

மத்தவெங்களிறு = மதம்பிடித்த கொடிய ஆண்யானை, மெத்து அவம் = பெருங்கேடு.

'ஆயின்இவ் வாறு சஞ்சீ-
வகனைநான் கேட்பேன்,' என்று
சீயம்அங் குரைப்ப, 'நல்ல
சிந்தனை செய்தாய்! சூழ்ச்சி
ஏயும்மந் திரிவி சாரம்
இதயத்தில் வைப்ப தல்லால்,
வாயுறப் புறத்திற் சொன்னால்
மரணமே திண்ணம் ஆமால்! 114

சீயம் = சிங்கம், சூழ்ச்சி = தந்திரம், ஏயும் = பொருந்தும், விசாரம் = ஆலோசனை, இதயம் = மனம், திண்ணம்-உண்மை.

'குருஉப தேசம், மாதர்க்
கூடிய இன்பம், தன்பால்
மருவிய நிதியம், கல்வி,
வயது, தான் செய்யும் தன்மம்,

அரியமந் திரவி சாரம்,
ஆண்மைஇங் கிவைகள் எல்லாம்
ஒருவரும் அறிய ஒண்ணு ;
உரைத்திடில், அழிந்து போமே. 115

மருவுதல்=பொருந்துதல், நிதியம்=செல்வம், தன்மம்=தருமம், ஆண்மை=வலிமை.

'கடன்படிற் கொடுத்த சேடம்,
கனல்படில் விடுத்த சேடம்,
விடம்தொழில் மீட்ட சேடம்,
மேவலர்ச் செற்ற சேடம்
படர்ந்துபின் கெடுக்கும் ; முன்னே
பற்றறக் களைந்து போட்டால்,
திடம்பெறச் செல்வம் துய்த்துச்
செருக்கிவாழ்ந் திருக்க லாமே!' 116

சேடம்=கழித்த மீதி, கனல்=நெருப்பு, மேவலர்=பகைவர், துய்த்தல்=அனுபவித்தல், செருக்கி=மகிழ்ந்து.

என்பன சொல்ல, 'நம்மை
இடபம்என் செய்யும்?' என்றே
வன்பொடு சிங்கம் கூற,
'மாட்டைநாம் நம்பப் போகாது!
அன்புடன் அருகிற் சேர்க்கில்
அழிவதே திண்ணம்! ஐயா!
முன்பொரு சீலைப் பேனுர்
முகட்டினுல் அழிந்த வாறே.' 117

முகடு=மூட்டுப்பூச்சி, வன்பு=கடுமை, திண்ணம்=நிச்சயம்.

## 7. சீலைப்பேன் மூட்டுப்பூச்சியால் அழிந்த கதை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

‘இக்கதை யாது? சொல்வாய்,’
என்றுபிங் கலனுர் கேட்க,
‘மிக்கதோர் நகரில் மந்த
*விசர்ப்பணி*, அரசன் மெத்தை
புக்கொளித்து, அன்னுன் மின்னுர்ப்
புணர்ச்சிசெய் துறங்கும் அந்தப்
பக்குவம் பார்த்தி ரத்தம்
பருகிஅங் கிருக்கும் நாளில் 118

*புக்கு = புகுந்து, மின்னுர் = பெண்டிர்.*

‘கொள்ளிவாய் அடியிட் டாற்போல்
குறுமுகடு ஒன்று சேர்ந்தங்-
குள்ளுறை சீலைப் பேனை
உறவுகொண்டு, ‘உனக்கு நானே
தெள்ளிய நண்ப ணுகிச்
சேர்ந்தினி திருப்பேன்!’ என்ன,
‘முள்எயிற் றினில்து டுக்கா
முன்னைநீ கடிப்பாய்!’ என்ன 119

*கொள்ளிவாய் = நெருப்பைக் கக்கும் வாயையுடைய பேய், அடியிடல் = நடத்தல், குறுமுகடு = சிறு மூட்டுப்பூச்சி, தெள்ளிய = சிறந்த, முள்ளெயிறு = கூரிய பல்.*

‘துடுக்குநான் செய்கி லேன்;நீ
சொன்னது கேட்பேன்,’ என்று
பொடுக்கெனக் காலில் வீழ,
புந்தியில் இரங்கி, ‘நீதான்

வெடுக்கெனக் கடிக்க வேண்டா ;
வேந்தனும் மனையாள் தானும்
படுக்கையில் உறக்க வேளை
பார்த்துநீ பசிதீர்,' என்ன 120

பொடுக்கென = விரைவாக, புந்தியில் இரங்கி = மனமிரங்கி.

'நல்லதென் றடைந்து பின்டிண்-
டிபன் எனும் நாம மூடு,
மெல்லிய லுடனே தானும்
விழித்திருக் கின்ற போதில்
பல்லினற் கடிக்க, வேந்தன்
பதைபதைத் தெழுந்'தே தீ'தென்று
சொல்லலும் தீபம் கொண்டு
சோதனைக் காரர் பார்க்க 121

நாமம் = பெயர், மூடு = மூட்டுப்பூச்சி, மெல்லியல் = பெண் (மனைவி), ஏது ஈது = இது யாது, தீபம் = விளக்கு.

'முகடனர் ஒளித்துப் போனர் !
முன்னம்அங் கிருந்து வாழும்
விகடம்இல் லாத மந்த
விசர்ப்பணி தன்னைக் கண்டே,
'அகடுநீ செய்தாய்!' என்றங்கு
அதனுயிர் அழித்துப் போட்டார் ;
வகையறி யாமற் செத்து
மாய்ந்தது சீலைப் பேனே !' 122

முகடனர் = மூட்டுப்பூச்சி, விகடம் = தொந்தரவு, அகடு = பொல்லாங்கு.

என்றொரு கதையும் சொல்லி,
'எருதுனைப் பொரவ ருங்கால்
துன்றிய மழையும் காற்றும்
சூழ்ந்திடு வேளை தன்னில்

தன்தனி வால்மு றுக்கித்
தலையொடு கொம்ப சைத்து
மன்றகம் நடுங்க வந்து
மார்பினிற் பாயும் மன்னே! 123

**வேளை தன்னில் = சந்தர்ப்பம்போல, மன்றகம் = பொதுவிடம், மன்னே = அசைச் சொல்.**

'சீயமாம் அரச னே! நான்
செப்பினேன் உனக்கு நன்மை;
நீயிதை வெளியி டாமல்
நெஞ்சில்வைத் திடபம் உன்னைப்
பாயவந் துற்றால், ஆவி
பதைத்திட வதைத்தி! நானும்
போயிவண் வருவேன் பின்னர்ப்
புனித!' என் றேகிற் றம்மா. 124

**சீயம் = சிங்கம், வதைத்தி = கொல்வாயாக, இவண் = இங்கு, புனித = பரிசுத்தனே.**

ஏகியே தமன கன்தான்
இடபசஞ் சீவ கன்பால்
போக, அங் கதுவும் கண்டு
புகழுடன், 'சுகமோ?' என்ன,
'நாகிளங் காளை வேந்தே!
நமக்குமோர் சுகமும் உண்டோ!
ஆகமே துயிரே தென்றும்
அரசரைச் சேவிப் போர்க்கே! 125

**நாகிளங்காளை = மிக்க இளமையுடைய எருது, ஆகம் = உடல், சேவிப்போர் = வேலை செய்பவர்.**

**'செல்வமும் செல்வம் அல்ல,**
**சிந்தையும் சிந்தை அல்ல,**
**சொல்வதும் சொல்வ தல்ல,**
**சுகிப்பதும் சுகிப்ப தல்ல,**

கல்வியும் கல்வி அல்ல,
கடுங்கொலைப் பாம்பு போலக்
கொல்வளர் அரசர் சேவை
குறித்துவாழ் பவர்க்குத் தானே !' 126

கொல்=கொலை, சேவை=தொண்டு.

எனத்தம னகனும் சொல்ல,
'இறைவர்நெஞ் சேற்கு மாறு
மனத்தில்வஞ் சகம்இ லாமல்
மகிமையா நடந்து கொண்டால்,
சினத்தமன் னவரா னாலும்
சினேகமாய், நமக்கு வேண்டும்
இனத்தினில் இனத்த ராக
எண்ணியே நடத்து வாரே.' 127

மகிமை=சிறப்பு, சினத்த=கோபித்த.

எனவிடை கூறச் 'செல்வம்
எய்தின்இன் புருதார் இல்லை;
வனிதையர் காமம் துய்த்து
வலியிழ வாதார் இல்லை;
அனகவெஞ் சமனைத் தப்பி
ஆவியுற் றிருப்பார் இல்லை;
மனதொடு வேந்தர் சித்தம்
வரநடப் பாரும் இல்லை. 128

விடை=எருது, வனிதையர்=பெண்டிர், அனகன்=குற்ற மற்றவன், வெஞ்சமன்=கொடிய யமன், ஆவி=உயிர்.

'துர்ச்சன ருடனே கூடிச்
சுகமடைந் தாரும் இல்லை;
இச்சையா சகத்தி னாலே
இடருரு தவரும் இல்லை;

குச்சிதக் களவி னாலே
கொழுநிதி அடைந்தார் இல்லை;
அச்சம்இல் அரச ராலே
அழிபடா வாழ்வும் இல்லை. 129

துர்ச்சனர் = தீயவர், குச்சிதம் = இழிவு, கொழுநிதி = பெருஞ் செல்வம்.

'நல்லிடம் நல்ல காலம்
நற்பொருள் நல்ல தோழர்
சொல்லும்இவ் வகையும் சற்றும்
துளக்கம்இல் லாத நெஞ்சும்
இல்வயின் யாவும் பெற்றூர்
எய்துவர் சிலநாள் வாழ்க்கை;
அல்லவர் இன்ன நாளில்
அழிவரென் றறிய லாகா.' 130

துளக்கம் = நடுக்கம்.

'இவைகள்நீ சொல்ல வந்த
தென்ன? பிங் கலன்தான் உன்பால்
தவறுதான் நினைந்த துண்டோ?
சாற்றெ'ன்ன இடபம் கூற,
'கவடமாய்ச் செயும்இ ராச
காரியந் தன்னைச் சொன்னால்,
அவமதி; வேந்தன் சற்றே
அறியினும் நமைக்கொல் வானே! 131

கவடம் = வஞ்சனை, அவமதி = அவமானம்.

'என்னினும், நீயும் நானும்
இதயம்ஒன் றாகை யாலே
உன்னது கருமம் சொல்ல
உற்றனன்; மற்றென் றல்ல;

மன்னவன் சேனைக் கெல்லாம்
மகிழ்விருந் தளிக்க நாளை
நின்னையே கொல்லு மாறு
நினைந்தனன் மனத்தில்,' என்ன 132

அஞ்சியே மிகவும் சஞ்சீ-
வகனும்மெய் கலங்கி, 'வேந்தன்
நெஞ்சினில் என்னைக் கொல்ல
நினைத்தகா ரணம்யாது?' என்ன,
'எஞ்சினோர் மீதிற் கோபம்
யாவர்க்கும் எய்தும் என்பார்;
வெஞ்சின வேந்தர்க் குற்ற
வெகுளியார் அறிய வல்லார்? 133

எஞ்சினோர் = மிஞ்சியவர், வெகுளி = கோபம்,

'பரவையை அளவிட் டாலும்,
பாரெலாம் அளவிட் டாலும்,
வரைமுழு தளவிட் டாலும்,
மாதர்நெஞ் சளவிட் டாலும்,
இரைதனைக் கருதித் தன்பால்
எய்தினர் தம்மைக் கொல்லும்
அரசன்நெஞ் சொருவ ராலும்
அளவிட முடியா'தென்ன 134

பரவை = கடல், வரை = மலை, மாதர் = பெண்.

'மின்னனார் தங்கள் நெஞ்சம்
விடரையே விரும்பி நிற்கும்;
பொன்னெலாம் உலுத்தர் தேடும்
பொருளையே சேர்ந்து நிற்கும்;
மன்னிய மழையும் ஓத
வாரியிற் பெய்து நிற்கும்;
அன்னபோல் வேந்தர் தாமும்
அபாத்திரம் விரும்பி நிற்பார். 135

மின்னனூர் = பெண்டிர், விடர் = கள்ளப் புருஷர், உலுத்தர் = உலோபிகள், ஓதவாரி = நீர் நிரம்பிய கடல், அன்ன = அவை, அபாத்திரம் = அருகதையில்லாதவன்.

'காரணத் தாலே வேந்தன்
கனன்றனன் ஆகில், மற்ருேர்
காரணத் தாலே அன்னுன்
கருத்தினைத் திருத்த லாகும்;
காரணம் யாதும் இன்றிக்
கனன்றன ஞகில், மற்ருேர்
காரணத் தாலே அன்னுன்
கருத்தினைத் திருத்த லாகா.' 136

கனலுதல் = கோபித்தல்.

### கலி விருத்தம்

என்றுசஞ் சீவகன் இயம்ப, 'மன்னவன்
அன்றுனை அழைத்ததும், ஆணை இட்டதும்,
இன்றுனைத் தனக்குளார்க்கு இரைவ ழங்கவே
கொன்றிட நினைத்ததும் கொடிய பாவமே! 137

'மந்திரி, பண்டிதர், மருத்து வம்செய்வோர்
சிந்தையும் மன்னவன் சிந்தைக் கேற்றிடில்,
தந்திர உபாயமும் தரும நீதியும்
அந்தமில் இன்பமும் அவனுக் காகுமே. 138

பண்டிதர் = அறிஞர், மருத்துவம் = வைத்தியம், அந்தம் = முடிவு.

'துட்டர்பால் நன்றியே தொடர்ந்து செய்யினும்,
முட்டர்பால் சுபாடித மொழிகள் பேசினும்,
ஒட்டிய மூங்கைமுன் உசிதம் சொல்லினும்
நட்டமே அல்லது நன்மை இல்லையே. 139

நன்றி = நன்மை, முட்டர் = மூடர், சுபாஷித மொழிகள் = இனிய பேச்சுகள், மூங்கை = ஊமை, உசிதம் = தகுதி, நட்டம் = கஷ்டம்.

'நல்லறிவு அசேதனற் குரைப்ப தும், கொடும்
புல்லர்முன் தன்கலி புகன்று இரப்ப தும்,
அல்லல்நோய் ஆக்கும்மா தரைஅ ளிப்ப தும்
கல்லின்மேல் எறிந்திடு கழங்குக்கு ஒக்குமே. 140

அசேதனற்கு = அறிவில்லாதவனுக்கு, புல்லர் = அற்பர், கலி = தரித்திரம், புகன்று = சொல்லி, அல்லல் = துன்பம், அளிப்பது = காப்பது, கழங்கு = சூது.

'பெருங்களர் நிலத்தினிற் பெய்த மாரியும்,
திருந்திலாச் செவிடர்பால் செய்உப தேசமும்,
அருங்கொடி யோர்களுக்கு அளித்த தானமும்,
ஒழுங்குற ஓர்ந்திடில் ஒக்கும் என்பவே. 141

களர்நிலம் = உப்பு நிலம், மாரி = மழை, ஓர்தல் = ஆராய்தல், என்ப = என்று சொல்லுவர்

'சந்தன மரங்களைச் சலச வாவியைப்
பந்திகொள் தாழையைப் பாம்பு வெங்கரா
நந்துமுள் சூழ்வபோல் நாட்டு வேந்தரைத்
தொந்தமாய் விடாமலே துட்டர் சூழ்வரே. 142

சலசவாவி = தாமரைக்குளம், பந்தி = வரிசை, தாழை = தாழஞ்செடி, வெங்கரா = கொடிய முதலை, நந்துமுள் = வளர்கின்ற முள், தொந்தம் = தொடர்பு.

'ஆதலின், மன்னவர் அருகு நல்லமெய்ப்-
போதமே அடைந்தவர் பொருந்தி டின்மிகப்
பேதகம் ஆக்கியே பின்னும் கொல்லவும்
சூதுகள் நினைப்பது துட்டர் நீதியே. 143

அருகு = சமீபம், மெய்ப்போதம் = உண்மையறிவு, பேதகம் = மாறுபாடு.

வேறு

'அரசன் இன்சொலும் அபய வார்த்தையும்
பரவும் இங்கிதப் பார்வை இன்பமும்
திரம தாமெனச் சிந்தை ஆரவே,
கருதி னேம்;அது கனிட்டம் ஆனதே! 144

கனிட்டம் = டிவுமு.

'ஐயை யோ!இவன் அபய வார்த்தையும்
மெய்ய தாம்என விரும்பி னேம்!கொலை
செய்ய எண்ணினன் சிங்க மன்னவன்!
கைய லாஅது கருதல் நீதியோ? 145

கையலா=ஒழுங்கு அல்லாத.

'தூரக் கண்டு,நீ தொழுமு னேதொழுது,
ஆரப் புல்லி,மோந் தருகில் வைத்துப-
சாரத் தால்உனைத் தருக்கச் செய்தது,
சேரத் தான்கொலை செய்தற் கெண்ணியே. 146

தருக்கல்=மகிழ்தல், புல்லி=தழுவி.

வேறு

'இருளை நீந்த விளக்கும், எழுதிரைப்
பரவை நீந்தப் புணையும் படைத்தும், இக்
கரவர் நெஞ்சினில் வஞ்சம் கடக்கவே
உரிய தொன்றையுண் டாக்கிலன் வேதனே! 147

எழுதிரைப் பரவை=எழுகின்ற அலைகளையுடைய கடல், புணை=தெப்பம், கரவர்=வஞ்சகர், வேதன்=பிரமன்.

'ஆனை வேகம் அடங்கிடும் தோட்டியால்;
வேனில் வெம்மை அடங்கும் விசிறியால்;
ஈனர் வேகம் இயம்பில், அவருயிர்
போன போதடங் கும்புவி மீதிலே. 148

தோட்டி=அங்குசம், வேனில்=வெயில், புவி=பூமி.

'வண்டு பூமது விட்டுக் கரிமதம்
உண்டு காதடி பட்டுயிர் மாய்வபோல்,
துண்டை வேந்தர்நல் லோர்சொல் மறுத்து,மால்
கொண்டு தீயர்சொல் கொண்டுயிர் மாய்வரே! 149

பூமது=தேன், கரிமதம்=யானை மதநீர், துண்டை=துடுக்குத் தனம், மால்=மயக்கம்.

'துட்ட நண்பு தொடங்கில்,நல் லோர்களும்
நட்டம் எய்துவர் ; நன்மை அவர்க்கிலை ;
இட்ட மாக இருந்தொரு காக்கைஓர்
ஒட்ட கத்தின் உயிரை அழித்ததே.' 150

## 8. காக்கை ஒட்டகத்தை அழித்த கதை

### கலி விருத்தம்

'உரைசெய் அக்கதை,' என்றெரு தோதலும்,
'இருள்செய் காட்டில் **மதோற்கடன்** என்னும்ஓர்
அரசு சிங்கம் ; அதற்குள மந்திரி
நரியும் வேங்கையும் காக்கையும் நண்ணும்நாள் 151

'ஒட்ட கம்வழி தப்பிஅங் குற்றிடக்
கிட்டி வாயசம் 'யார் ?' எனக் கேட்டலும்,
ஒட்டை உண்மை உரைத்திட, ஆணையும்
இட்டு வாயசம் தானழைத் தேகியே 152

**வாயசம் = காக்கை, ஆணை = கட்டளை, ஏகி = சென்று.**

'மன்ன னுன மதோற்கடன் முன்விட,
அன்ன வேந்தன் அபயம் கொடுத்து,'நீ
இன்னல் இன்றி,மந் **தானகன்** என்றுபேர்
மன்னி, மந்திரி மாரொடு வாழ்'கென 153

**இன்னல் = துன்பம், மன்னி = பொருந்தி.**

'சம்பு வும்,புலி யும்,கொடி யும்,'எமை
நம்பு'கென்று சொலிச்சில நாளெலாம்
தம்பு லத்தில் சகோதர ராமென
இம்பர் போற்ற இருந்துடன் வாழ்ந்தவே. 154

**சம்பு = நரி, கொடி = காக்கை, புலம் = இடம், இம்பர் = இவ்வுலகம், வாழ்ந்த = வசித்தன.**

'உரைசெய் சிங்கம் ஒருதினம் நோய்கொடு,
விரைசெய் வேட்டையின் மேற்செல வேறிருந்து,
இரைசெய் வேட்கையை எய்தி, அமைச்சரைப்
புரைசெய் அன்பொடு நோக்கிப் புகலுமால்: 155

**வேட்கை = விருப்பம், புரை = குற்றம், புகலும் = சொல்லும்.**

'பொங்கு வெம்பசி யேற்கிரை போய்க்கொணர்ந்து
இங்கு நல்குமின்,' என்றுரை செய்திட,
அங்கு நான்கும் அடவியெ லாம்திரிந்து,
'எங்கும் இல்லை இரை,'என வந்தவே. 156

**வெம்பசியேற்கு = கொடிய பசியையுடைய எனக்கு, நல்குமின் = கொடுங்கள், அடவி = காடு.**

'உற்ற நான்கனுள் ஒட்டகம் ஒன்றலால்
மற்றி ரண்டையும் 'வம்மின்கள்' என்றுதான்
கற்ற பாடையிற் காகம் அழைத்துப்போய்க்
கொற்ற வேந்தன் சமுகம் குறுகியே 157

**வம்மின்கள் = வாருங்கள், பாடை = பாஷை, சமுகம் = முன்னிலே.**

'மன்ன னே!இவ் வனங்கள் எலாம்திரிந்து
இன்னல் உற்றும், இரையொன்றும் இல்லையால்,
உன்அ ருட்கொடு போய்ப்பிழைப் போமென
முன்னி வந்தனம்,' என்று மொழியவே 158

**இன்னல் = துன்பம், முன்னி = நினைத்து, மொழிய = சொல்ல.**

'யாது நும்கருத்து?' என்றுசிங் கம்சொல,
'கோதில் வேந்த!மங் தானகற் கொன்றிடின்
போதும்,' என்று புகலச் 'சிவசிவ!
ஈது பாவம்!' எனச்செவி மூடவே 159

**கோதில் = (கோது + இல்) குற்றமில்லாத, சிவசிவ = ஓர் இரக்கக் குறிப்பு.**

‘வாய சம்அது கண்டு,‘அடல் மன்ன!கேள்:
ஆய மன்னவர் செய்கைஇ தாகும்;நி-
யாயம் என்று நவில்குவன் யான்;முனம்
மாய வன்சொலும் வாய்மைஇவ் வாறரோ: 160

அடல்=வலிமை, நவில்குவன்=சொல்வேன், மாயவன்= கிருஷ்ணன், வாய்மை=உண்மை, அரோ=அசைச்சொல்.

‘ஒருவ னைக்கெடுத் தோர்குடி காக்கலாம்;
ஒருகு டிகெடுத் தோர்நகர் காக்கலாம்;
ஒருந கர்கெடுத் தோர்பெரு நாடெலாம்
ஒருபெ ருந்துன் புருவகைக் காக்கலாம்.’ 161

துன்பு=துன்பம், உருவகை=அடையாதபடி.

‘என்று பஞ்சவர் முன்னம் இயம்பவே,
‘நன்றி கொ’தன்றவர் நன்மகன் தன்னையும்
கொன்று நின்று களப்பலி கூட்டியே
வென்றி எய்தினர்,’ என்று விளம்பவே. 162

பஞ்சவர்=பாண்டவர் ஐவர், நன்மகன்=அரவான், களப் பலி=போர்க்களப்பலி, வென்றி=வெற்றி, விளம்ப=சொல்ல.

‘அபயம் வாங்கி அடைக்கலம் புக்கதை
அபயம் மாற்றி அழிப்பார்க ளோ?’என,
‘அபயம் ஈந்தஉன் னுலழி யாமல்,உன்
அபயம் காத்து,அத னுலதைக் கொல்வமால்.’ 163

அதனுல்=அதன் உடன்பாட்டினலேயே.

என்று காகம் இயம்ப, மதோற்கடன்
ஒன்றும் உத்தரம் ஓதில னுல்,அதை
‘நன்றி கொ’தன்ன நயந்தநெஞ் சொட்டகம்
நின்ற தோரிடம் நேடிவந் துற்றதே. 164

உத்தரம்=பதில், ஓதிலனுல்=சொன்னுனில்லை ஆதலால், நேடி=தேடி.

'அரசன் வெம்பசி யால்வருந் துற்றனன் ;
இரைமற் றியாதும் இனிக்கிடை யாது;நாம்
உரைசெய் வோம்,' என நான்கும் ஒருமையாய்
அரசன் முன்சென் றடிகள் வணங்கியே 165

ஒருமை = ஒற்றுமை.

"மன்ன னே!இவ் வனத்தில் இரையிலை ;
என்னை நீகொன் றிரைஅருந்து,' என்றுமுன்
சொன்ன காகத்தை நோக்கி மதோற்கடன்,
"என்ன ! நின்னுடல் சின்னவெ'தன் றேசொல 166

"ஆயின் என்னை அருந்து,'எனச் சொன்னகோ-
மாயு ஓத,அவ் வாறு மறுத்திட,
பாயும் வெம்புலி 'என்னைப் பருவெ'கன்,
"நீயும் எற்கு நிரம்பிரை யோ?'என 167

கோமாயு = நரி, ஓத = சொல்ல, எற்கு = எனக்கு.

"கதன கன்இதைக் கண்டு, 'நமைக்கொல
விதனம் வைத்தனர் !' என்று விரைந்து,'நான்
அதிகன்; என்னை அருங்வெ'தனச் சொல்லுமுன்
பதறி வெம்புலி பாய்ந்திட மாய்ந்ததே. 168

கதனகன் = ஒட்டகம், விதனம் = விசனம்.

"சிங்கம் எண்ணி அறிந்துசெங் நீருண,
துங்க வெம்புலி மூளையைத் துய்த்திட,
எங்கள் சம்புகன் ஈரல் விருந்துண,
தங்கு காகம் தசைகள் அயின்றதே. 169

செங்நீர் = இரத்தம், துய்த்திட = தின்ன, சம்புகன் = நரி, தசைகள் = இறைச்சிகள், அயின்றது = தின்றது.

'கொடிய ரோடெவர் கூடினும், ஆங்கவர்
மடிவர் திண்ணம்இவ் வாறென்று சொல்லுவார்;
கொடிய வேந்தர்கை யிற்கொலை யுண்ணலின்,
நெடிய போரில் உயிர்விடல் நீதியே. 170

திண்ணம் = உண்மை.

'போரில் ஆவியைப் போக்கின் சுவர்க்கமும்
போரில் வென்று பிழைத்திடின் பூமியும்
சேரும்; வீணில் உயிர்விடின் சொர்க்கமும்
பாரும் இல்லை: நிரயம் படிவரே. 171

நிரயம் = நரகம்.

'பொருந ரோடு பொருதுயிர் மாய்பவர்
இருநி லத்தில் இறந்தும் இறந்திலார்:
வெருவி ஆவி விரும்பி இருப்பவர்
தரையில் மேவுசஞ் சாரப் பிரேதமே. 172

பொருநர் = போர் புரிபவர், பொருது = போர் செய்து, இருநிலம் = பெரிய உலகம், வெருவி = அஞ்சி, ஆவி = உயிர், சஞ்சாரப் பிரேதம் = நடைப்பிணம்.

'அறிவி லார்,தம தாண்மையி னுற்பிறர்
சிறியர் என்றுதம் சிந்தை நினைப்பது,
மறிதி ரைக்கடல் மன்னவன் முன்னம்ஓர்
குறிய சிட்டைக் குறித்தது போலுமால்.' 173

கடல் மன்னவன் = வருணன், குறிய = சிறிய, சிட்டை = சிட்டுக்குருவியை, குறித்தது = கருதியது, போலும் = ஒப்பாகும்.

## 9. கடலைச் சிட்டு வென்ற கதை

### கலி விருத்தம்

விடையது, 'ஏதக் கதை?' என, 'வேலையின்
புடையில் மேய்ந்திடும் சிட்டுப் பொருந்திய
பெடையும் தானும் பிரிவின்றி ஆங்கொரு
செடியின் கீழிற் சிலநாள் இருந்ததே. 174

விடை = எருது, வேலை = கடல், புடை = பக்கம், பெடை = பெட்டை.

'அன்ன நாளிற் பெடைசினை யாய்முதிர்ந்து,
'என்ன புத்தி? எனக்கிடம் ஏதெ'தன,
'மன்னும் இவ்விடம் அன்றி மற் றோரிடம்
பின்னை இல்,' எனச் சேவலும் பேசவே 175

சினை = கரு.

'பொருக டற்கரை தன்னில் பொருந்தியே
அருகு முட்டையை இட்டுவைத் தால், அதைத்
திரைஎ டுத்துக்கொண் டேகில்என் செய்குவோம்?
உரை,'எ னச்சிறு பேடுநின் றோதவே 176

திரை = நீர் அலை.

'பேடி போ!என பெண்புத்தி! இக்கரை
நாடி அக்கடல் நம்மைஎண் ணுமலே
ஆடி முட்டைகொண் டேகில், அதுபடும்
பாடு நாயும் படாதெ'தன்று சாற்றவே 177

பேடி = பயங்கொள்ளி, என = என்ன.

'என்ன புத்திநீ எண்ணி உரைத்தனை!
அன்னம் முற்படச் சொன்னதை விட்டுயிர்-
தன்னை ஆமை தரையில் விடுத்ததால்!'
என்ன, 'அக்கதை ஏது? உரை,' என்றதே. 178

## 10. ஆமை சொற்புத்தி கடந்து இறந்த கதை

*எண்சீர் ஆசிரிய விருத்தம்*

'**விகடசங் கடம்**என்னும்-அன்னத் தோடே
மேவு**கம்புக் கிரீவன்**எனும் ஆமை முன்னர்ச்
சுகமுடனே ஒருகுளத்தில் அனேக நாளாய்த்
தோழமையாய் இருக்க,மழை சொரிவி லாமல்,
அகல்குளமும் புனல்வற்றிப் போகை யாலே
அப்புறமோர் குளம்நாடிப் போக அன்னம்
பகரரிய ஆமைதனை அழைத்து,'இக் கோலைப்
பற்றிவாய் திறவாதே வருக,' என்றே 179

தோழமை=நட்பு, புனல்=நீர், பகரரிய=சொல்வதற்கு அருமையான.

' இருபுறமும் தாம்கவ்விக் கொண்டு வானில்
எழுந்துபறந் ததுகொடுபோம் வழியிற் கண்டோர்
கருதி,'இது புதுமை!'என நகைத்து நின்று
கைகொட்டிப் பார்க்க,அந்தக் கமட னரும்,
'மருவுநகை ஏது?'என்று கேட்க எண்ணி,
வாய்திறந்து கீழ்விழுந்து மடிந்து போனர்!
ஒருமையுளார் சொன்னதுகே ளாத பேர்கள்
உறுங்கருமம் இவ்வாறெ'றன் றேதிப் பின்னும் 180

கமடனர் = ஆமை, நகை = சிரிப்பு, ஒருமை = ஒற்றுமை.

## 11. மும்மீன் கதை

*எண்சீர் ஆசிரிய விருத்தம்*

' சேவல்அது கேட்க'மற்றோர் கதையுண் டென்ன,
'செப்புகஅக் கதை,'என்னப் பேடு கூறும் :
வாவுபுனற் குளமொன்றங் கதிலே மும்மீன்
வாழ்ந்த;அவை தம்முளொன்று வருமுன் காப்போன் ;

தாவுசெயல் மற்றென்று வருங்காற் காப்போன் ;
சாற்றிடின்மற் றென்றுவந்த பின்காப் போன்ஆம் ;
ஓவறவே அனேகநாள் இருந்து, பின்னர்
ஒருநாளில் வலைஞர்புகல் உரையைக் கேட்டே 181

வாவுபுனல் = தாவும் நீர், வாழ்ந்த = வசித்தன, ஓவற = நீக்கமின்றி, வலைஞர் = செம்படவர்.

'இந்தவிடம் விட்டுமற்றோர் இடத்திற் செல்வோம்,'
என்றுவரு முன்காப்போன் இசைப்ப அம்மீன்,
'வந்தபொழு தாக ;அதற் கிப்போ தேநாம்
வழிபார்க்க வேண்டுமோ? இடைச்சி தானே
அந்தமுடன் சோரர்இரு வரையும் வீட்டில்
அவள்கணவன் கண்டும்,அவன் அறியா வண்ணம்
தந்திரம்ஒன் றால்அவரைத் தப்ப விட்டுத்
தானும்அவ னைப்புணர்ந்து தருக்கி னாளே. 182

இசைப்ப = சொல்ல, ஆக = ஆகட்டும், அந்தம் = அழகு, சோரர் = கள்ளப் புருடர், தருக்கினள் = மகிழ்ந்தாள்.

## 12. இடைச்சி சோரபுருடரைக் காத்த கதை

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

'கள்ளமாப் பிளையிருவர் அவரார் என்றால்,
கருதுதண்ட பாசன்அவன் காளை தன்னோடு
உள்ளம்மகிழ்ந் தவள்கூடி யிருக்கும் நாளில்
ஒருநாளில் அவன்தந்தை உற்ற வேளை
மெள்ளஅவன் காணுமுன்அங் கவனைத் தொம்பை
மேவுவித்தங் கவனுடனே மேவுங் காலை
வள்ளல்எனும் புருடன்வரச் சண்டை போல
வைதுகொண்டு 'போ!'என்றே வழிவிட் டாளே. 183

காளை = மகன், தொம்பை = நெல்லுக் குதிர்.

'அப்படியே வைதுகொண்டு விரைந்து போனுன்;
அகத்திடையன் 'இவன்வரக்கா ரணம்ஏ தெ'ன்றுன்;
'எப்படியோ! இவன்ஆரோ! அறியேன் கையில்
எடுத்ததடி யுங்கொண்டு துரத்தி வந்தான்;
தப்பிஒரு பயல்ஓடி வந்து வீழ்ந்து,
'தாயே!உன் தஞ்சம்!'என்றிங் கொளித்துக் கொண்
கைப்பிடித்த தடியுடனே தேடித் தேடிக் [டான்;
காணுமற் கறுவிக்கொண் டேகி னுனே.' 184

**பயல்=சிறுவன், தஞ்சம் = அடைக்கலம், கறுவிக்கொண்டு = கோபித்துக்கொண்டு.**

'என்றுசொல, 'நன்றுசெய்தாய்!' என்னக் கூட்டில்
இருந்தவனே அழைக்க, அவன் வெளியே வந்தான்;
'ஒன்றுமிலே; அவன்போனுன்; நீயும் போ,'என்
றுரைத்தனன் ;அங் கவனும்மெள்ள ஓடிப் போனுன்;
இன்றுநமக் கென்னதுன்பம்? வந்த வேளேக்
கேற்றபடி செய்வம்,'என வருமுன் காப்போன்
அன்றுமற்றேர் தடம்ஏக, மற்றை மீன்கள்
அகலாமல் அச்சுனேயில் இருக்கும் போது 185

**கூட்டில் = நெல்லுக் குதிரில், தடம் = குளம், சுனே = நீர் நிலே.**

'மற்றைநாள் வலேபோட்டார்; வருங்கால் காப்போன்
வலேதனிலே அகப்பட்டு மரித்த தேபோல்
உற்றது;மற் றதையெடுத்துக் கரைமேற் போட்டே
ஒருதரம்பின் வீச,வந்த பின்னே காப்போன்
கொற்றவலேக் குள்ளாகிப் பதைத்துப் பாயக்
கொன்றுவிட்டார் ; அதற்குள்ளே குளத்து நீர்தான்
வற்றும்வாய்க் காலுடனே புனலிற் பாய்ந்து
மறுகுளத்திற் புகுந்திருந்து வாழ்ந்த தன்றே.' 186

'என்றுசொலச் சேவல்,'நமக் கிடமும் ஈதே;
இவ்விடத்தே நீமுட்டை இடுவாய்,' என்ன,
தன் துணையும் முட்டையிட, இவைகள் எல்லாம்
சமுத்திரரா சனும்கேட்டுச் 'சமர்த்தைப் பார்ப்போம்!'
என்றுமுட்டை தனையெடுத்துப் போனன்; அப்போது,
'எமதுமுட்டை யினைச்சும்மாத் தந்தால் உய்ந்தாய்!
இன்றுதரா திருந்தாயேல், கடலே! துன்பம்
எய்துவிப்பேன்!' எனப்பேசா திருந்த தன்றே. 187

**சமர்த்து = வல்லமை, உய்ந்தாய் = பிழைத்தாய்.**

'அக்கணமே தன்இனங்கள் எல்லாம் கூட்டி,
அகிலத்திற் பலபறவைச் சாதி எல்லாம்
ஒக்கவரச் சென்றுபட்சி ராசன் முன்போய்,
'உவணதே வா!பறவைக் குலங்கட் கெல்லாம்
மிக்கதொரு பெரும்பழியாச் சமுத்ர ராசன்
மிகையுடனே முட்டைகொண்டான்; அந்த முட்டை
இக்கணமே அழைப்பித்தால் அன்றி, யாரும்
எண்ணார்நம் குலத்தை,'என்றே இரங்கிக் கூற 188

**கணம் = விநாடி, அகிலம் = உலகம், ஒக்க = ஒன்றாக, பட்சி ராசன் = கருடன், உவணதேவா = கருட தேவனே, மிகை = செருக்கு, இக்கணம் = இந்த விநாடி, இரங்கி = வருந்தி.**

'கருடனும்அங் கதைஅபிமா னித்துக் கொண்டு
கண்ணர்திருச் சந்நிதியிற் கழறக் கேட்டே
பொருகடல்வேந் தனையழைத்து, 'முட்டை கொண்டு
போனதென்ன? இந்நேரம் கொண்டு வந்தே
குருவிகையிற் கொடுத்தாலே நல்லது! இன்றேல்,
குறையுனக்குண் டெ'னக்கூறக் குலைந்து, நெஞ்சம்
வெருவிமுட்டை கொண்டுவந்து கொடுத்தான் என்றால்,
மேதினியில் தந்திரம்போல் வேறே தென்றும்?' 189

**அபிமானித்து = ஆதரித்து, கண்ணர் = திருமால், கழற = சொல்ல, வெருவி = பயந்து, மேதினி = உலகம்.**

இப்படியே நரிசொல்லும் புத்தி எல்லாம்
இடபம்உண்மை எனமனத்தில் எண்ணிக் கொண்டே,
'ஒப்பரிய சிங்கத்தைப் பொருது கொல்லும்
உபாயமெவ்வாறு?' என,'சிங்கம் உன்னைக் கொல்ல
வெப்பமுடன் கண்சிவந்தே உடல்கம் பித்து
வெள்வாயும் திறந்துசண்டை முடுகில், நீயும்
அப்பொழுதுன் வாலெடுத்துத் தலையும் கொம்பும்
அசைத்துக்கொண் டெதிரேசென் றமர்செய்வாயே.'190

**கம்பித்து = நடுங்கி, முடுகில் = தொடங்கினால், அமர் = போர்.**

என்றுபுத்தி சொல்லிவைத்துக் கரட கன்பால்
ஏகிஅதற் குரைத்தரசன் பக்கல் சென்றே,
"இன்றுகொல்ல வருதிடபம்; நீயும் மெத்த
எச்சரிக்கை யாய்இருத்தி!' என்று மீள,
குன்றுநிகர் இடபம்எதிர் வந்தே அந்தக்
கொடியசிங்கம் பொரஇருந்த கொள்கை கண்டே,
'வென்றிதைநாம் கொல்வோம்,'என் றெண்ணித் தானும்
வெகுண்டுதுள்ளி வந்துசமர் விளைத்த தன்றே. 191

**இருத்தி = இருப்பாயாக, பொர = சண்டையிட, வெகுண்டு = கோபித்து, சமர் = போர்.**

விண்ணதிர மண்ணதிரக் கடலி னோடு
வெற்பதிர ஒன்றொடொன்று பொருதல் கண்டு
துண்ணெனநெஞ் சகம்நடுங்கி, 'அரசர்க் கிந்தத்
துன்பம்விளைத் ததுசுவாமித் துரோகம் அன்றோ?
கண்ணெதிரே கண்டும்மனம் களித்தாய்!' என்று
கரடகன்றன் தமனகனைக் கழறிப் 'பேதம்
பண்ணினது போதும்;இனி விலக்கி நட்புப்
பண்ணுவது கருமம்,' என்றே பகர்ந்து, பின்னும் 192

**விண் = ஆகாயம், வெற்பு = மலை, துண்ணென = திடுக்கிட, நெஞ்சகம் = மனம், பொருதல் = சண்டையிடுதல், சுவாமி = தலைவன் கழறி = இடித்துக்கூறி.**

'பிரித்திடுதல், பிரியாமற் பேணிக் கொள்ளல்,
பிரிந்தவரை முன்போலப் பேதம் இன்றிப்
பொருத்திடுதல் இவைமூன்றும் வல்ல பேரே
புவிமீதில் அமைச்சர்களாய்ப் புகழ்கொள் வார்கள் ;
பெருத்தரசர் இன்பமுற்ருல், அமைச்சர் இன்பம்
பெறுவர்;அவர் துன்பம் இவர்க் காகும் ; பின்னைக்
கருத்தில்அவர் மர்மம்வைத்தால், அவர்சே னைக்கும்
காவலருக் கும்தமக்கும் வருங்கேடு அன்றே ? 193

பேணுதல் = பாதுகாத்தல், பொருத்திடுதல் = கூடச்செய்தல், புவி = உலகம், மர்மம் = இரகசியம், அன்றே = அல்லவா ?

'ஒருமையிலா மல்தருமம் தேடு வாரும்,
உற்ருரைக் கெடுத்துநிதி தேடு வாரும்,
மருவுசுகத் தால்வித்தை தேடு வாரும்,
வலுமையினுல் மாதர்இன்பம் தேடு வாரும்,
'இருவர்உயிர் ஒன்றெனவே கூடி வாழ்ந்தங்கு
இருப்பவரை நாம்கெடுப்போம்,' என்று நெஞ்சில்
கருதிஅவர்க் கின்னல்பல தேடு வாரும்
காசினியில் இன்பம்எய்தார், கதியெய் தாரே. 194

ஒருமை = உண்மை, வலுமை = பலாத்காரம், காசினி = பூமி, கதி = மோட்சம்.

## 13. துட்டபுத்தி கெட்ட கதை

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

'துட்டபுத்தி என்பவன்தன் பிதாவும் தானும்
துஞ்சினுன்,' என்னலும்,'அக் கதைஏது ?' என்ன,
'பட்டணம்ஒன் றுண்டதிலே வணிகர் ஈன்ற
பாலர்இரு வோர் ;ஒருவன் தரும புத்தி;

**துட்டபுத்தி** மற்றொருவன் ; இவர்கள் கூடித்
தூரத்தில் நிதிதேடப் போனார் ; அங்கே
இட்டமுடன் தருமபுத்திக் காயி ரம்பொன்
எய்தஅவன் தனக்கெய்தா திடருற் றானே. 195

**துஞ்சினன் = இறந்தான், ஈன்ற = பெற்ற, வணிகர் = செட்டிகள், இட்டம் = விருப்பம், எய்த = கிடைக்க, இடர் = துன்பம்.**

'ஆயிரம்பொன் கிடைத்திருந்தும் விசாரம் என்ன ?
ஐந்நூறைந் நூறாகப் பகுந்து கொள்வோம்;
நீயிரங்கல்,' என்றுதர்ம புத்தி வைத்த
நேசத்தால் அங்கவனைக் கூட்டிப் போக,
'ஞாயமல்ல இதைஊரிற் கொண்டு போதல் ;
நாம்இந்த மரத்தின்கீழ்ப் புதைத்து வைத்துப்
போய்இதனை மற்றொருநாள் எடுத்துப் போதல்
புத்தி,'என்றே துட்டபுத்தி போதித் தானே. 196

**விசாரம் = ஆலோசனை, இரங்கல் = வருந்தாதே, ஞாயம் = நியாயம்.**

'அன்னவன்சொற் படிகேட்டோர் மரத்தின் கீழே
ஆயிரம்பொன் னையும்புதைத்து வைத்துப் போனார் ;
பின்னிரவில் துட்டபுத்தி கொண்டு போனான் ;
பிறகொருநாள் இருவருமாய்க் கூடிக் கொண்டு
பொன்னிருந்த இடம்பார்த்தார், காணார் ; துட்ட
புத்தி,'நீ இதையெடுத்துப் போக லாமோ ?'
என்ன,அவன், 'நீயெடுத்துப் போனாய்,' என்ன,
இருவரும்போய் வழக்கர்முன்னம் இயம்பி னாரே. 197

**வழக்கர் = பஞ்சாயத்தார்.**

'ஒருவர்மே லேஒருவர் சாற்ற அந்த
ஊர்வழக்கர், 'சாட்சிபிறர் உண்டோ ?' என்ன,
'இருவருமே அறிந்ததல்லால், பிறர்அங் கில்லை,'
என்றுதர்ம புத்திசொல்ல, 'இதற்குச் சாட்சி

மரம்உரைக்கும்,' என்றுதுட்ட புத்தி சொல்ல,
வழக்கரெலாம் அதிசயமாய், 'மரத்தைக் கேட்போம்
இருள்விடிந்த பின்வாரும் நீவிர்,' என்ருர் ;
இல்லிடத்துக் கவரவரும் ஏகி ஞரே. 198

"துட்டபுத்தி தன்னுடைய பிதாவை, 'அந்தத்
தொன்மரப்பொந் தொளித்திதுநீ கூறு'கன்ன,
"நட்டம்வரும் நீநினைத்த நினைவி ஞலே
நமக்கின்று; முன்னம்ஒரு நாகம் கொக்கின்
முட்டைதனைக் களவுகொள்ளக் கொக்கு நண்டின்
மொழிப்படியே கீரிவளை தொடுத்துப் பாம்பின்
வட்டவளை மட்டாக மீனைப் போட
வந்தொருகீ ரியும்பாம்பை வதைத்த'தன்ன 199

**தொன்மரம் = ஆலமரம், தொடுத்து = தொடங்கி, வதைத்தது = கொன்றது.**

'தந்தையுரைத் ததுங்கேளான் வலிமை யாலே
தானிழுத்துப் போய்இருளில் தருவின் ஆழ்ந்த
பொந்தினுள்ளே அங்கவனை வைத்து மீளப்
பொழுதுவிடிந் ததன்பின்பு வழக்கர் கூடி
வந்துநின்று கேட்க,அவன், 'தர்ம புத்தி
வணிகன்எடுத் தான்,'என்றே கூற லோடும்
சிந்தைஅதி சயமாகி வழக்கர், 'ஈது
செப்பினது புதுமை!'என்றே செப்பி ஞரே. 200

**தரு = மரம், சிந்தை = மனம், செப்பினது = சொன்னது.**

'இதுகபடம்' என்றுதர்ம புத்தி எண்ணி
ஏறிமரப் பொந்தில்எரி தழலை மூட்ட
அதிலிருந்த கிழவணிகன் பதைத்து வீழ்ந்தே,
'ஐயகோ! துட்டபுத்தி கெடுத்தான்!' என்ன,

மதியுடைய வழக்கரும்போய் அரசர் முன்னே
வகுத்தலும்அங் கவன்றன்னை வதைத்தார் ; தந்தை
குதிகொள்அன லால்வெதும்பி மாய்ந்தான் ; பொன்னும்
குறையாமல் தர்மபுத்தி கொடுபோ ஞனே. 201

கபடம் = வஞ்சனை, தழல் = தீ, ஐயகோ = ஐயோ, மதி = புத்தி, வகுத்தலும் = சொன்னதும், வதைத்தார் = கொன்றார்.

## 14. 'இரும்பை எலி தின்றது,' என்ற கதை

'என்றுமொரு பட்டிணத்திற் செட்டி மார்கள்
இருவரவர் சினேகமாய் இருக்கும் நாளில்
ஒன்றுதுலாம் ஆயிரமாம் இரும்பு கொண்டே
ஒருவணிகன் வசத்தொருவன் வைத்துப் போய்நாள்
சென்றுவந்தான் ; ' வருமுன்னே இரும்பை யெல்லாம்
தின்றுவிட்ட தெலி,'என்றே செப்பக் கேட்டு,
'நன்றதற்கு வந்ததென்ன ! போகு வெ'தன்று
நண்புகொண்டு முன்போல நண்ணி ஞனே. 202

ஒன்றுதல் = பொருந்துதல், துலாம் = ஐந்து வீசையளவு.

'விருந்துசமைத் தார்கள் ;எண்ணெய் தேய்த்துக் கொண்டு,
மிக்கஅவன் பிள்ளைதனக் கெண்ணெய் தேய்த்துப்
பொருந்துகுளந் தனில்மூழ்க என்றே அந்தப்
புதல்வனையும் தான்கூட்டிப் போனன் ; அங்கே
திருந்தியதோர் இடத்தொளித்து வைத்து மூழ்கித்
திரும்பிவந்தான்; ' பிள்ளையெங்கே ?' என்ருன் ; 'பிள்ளை
பருந்தெடுத்துப் போச்சுவெ'தன்ருன் ; சண்டை யாகிப்
பட்டணத்து வழக்கர்முன்னே பகர்ந்தான் ஈன்ருேன். 203

'பருந்துபிள்ளை தனையெடுத்துப் போமோ? என்ன
பரிகாசம்?' என்றுவழக் காளர் சொல்ல,
'இரும்புதுலாம் ஆயிரத்தைக் குறைவை யாமல்
எலிதின்றால், பிள்ளைபருந் தெடாதோ?' என்ன,
'கரும்பொன்ஆ னதைமுழுதும் கொடுத்தா யாகில்,
கடுகஅவன் உன்பிள்ளை கொடுப்பான்,' என்றார்;
இரும்புவிலை குறைந்ததனால் ஆஸ்தி விற்றே
இனியபெண்டிர் பிள்ளையும்விற் றிழந்து போனான். 204

'ஆகையினால், கவடுசெய்வார்க் காவ தில்லை;
அறிவுடையார்க் கொருதரஞ்சொன் னாற்போ தாதோ?
நீகருத்தில் ஒருசிறிதும் எண்ணாய் சொல்லும்
நீதிகல்லுக் குரைத்தவா றாக்கும்!' என்று
வேகமுடன் கரடகன்கோ பிக்க, அந்த
விகடநெஞ்சத் தமனகனும் வேந்தன் பக்கல்
போக,அதற் குள்ளேபிங் கலன்தான் அந்தப்
பொலியெருதைக் கொலைசெய்து புலம்பி நின்றான். 205

புலம்பியபிங் கலன்முன்னே தமன கன்போய்ப்
'பொரும்அவனைக் கொன்றுபுலம் புவதேன்?' என்ன,
*'நலம்பயன்இ லாதநச்சு மரமா னாலும்*
*நாம்வளர்த்து நாம்தறிக்க லாமோ?' என்றும்,*
*'நிலம்புகழும் மந்திரியைக் கெடுத்தால், அந்த*
*நிருபனுக்குக் கேடுவரும்,'* என்றும் கூற,
*'குலம்பெறுதன் பிள்ளைபிதா தமையன் மந்த்ரி*
*கொலைகருதில், அவர்தமையும் கொல்ல லாமே. 206*

*'கிருத்தியத்தில் நடவாதார் தம்மைத் தன்சொல்*
*கேளாத மனையாளைக் கவடு தானே*
*கருத்திலெண் ணி யிருக்குமொரு தோழன் தன்னைக்*
*கடும்போரிற் புறங்கொடுக்கும் சேனை தன்னைப்*

*பெருத்தமதம் பிடித்திருக்கும் அமைச்சன் தன்னைப்*
*பின்முன்பா ராதழித்தல் பெரிய நீதி ;*
*உரைத்தஇவ ரால்மருவு சுகத்தை எண்ணுர்*
*உலகாளும் வேந்தர்என்பர் ஓதுங் காலே.* **207**

கிருத்தியம் = தொழில், கவடு = வஞ்சனை, தோழன் = சினேகன், புறங்கொடுத்தல் = தோற்றேடுதல்.

'என்றுதம னகன்பிங்க லன்தன் நெஞ்சில்
இரக்கமெலாம் தவிர்வித்தே இகலி அன்னுன்
கொன்றஇட பத்தினுடல் தன்னை அப்பால்
கொண்டுபோய்க் கரடகனும் தானு மாகத்
தின்று,பல நரிகளுக்கும் விருந்தும் இட்டுச்
சிந்தைகளித் திருந்தது ;என்றும் தேயத் தார்கள்
வென்றிபெறல் மந்திரியூ கத்தில்,' என்றே
வேந்தன்மகா ருடன்மறையோன் விளம்பி னுனே. 208

*மகார் = பிள்ளைகள்.*

II

# சுகிர்ல்லாபம்

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

பொன்னலம் திகழும் தில்லைப்
பொதுவில்நின் றாடும் எந்தை-
தன்னடி பணிந்து பஞ்ச
தந்திர வுபாயந் தன்னில்
முன்னரே மித்ர பேத
முறைபல உரைத்தோம்; இப்பால்
பன்னருஞ் சுகிர்ல்லா பத்தின்
பகுதியின் தகுதி சொல்வாம்: 1

மித்திர பேத மார்க்கம்
வேதியன் கூற, மைந்தர்,
'இத்திறம் நமக்கு முன்னுள்
யாவரும் உரைப்பார் இல்லை;
உத்தம! நீயே மேலும்
ஓதிய சுகிர்ல்லா பந்தான்
எத்திறம்? உரைத்தி,' என்ன,
இயம்புவான் சோம சன்மா: 2

## 1. காகமும் எலியும் ஆமையும் மானும் வேடனை வென்ற கதை

'காகம்ஒன் றெலியும் ஒன்று
கமடமும் ஒன்று மானும்
ஏகம்இங் கிவைகள் நட்பாய்
இருந்துவே டனைமுன் வென்று

மோகமாய் அனேக காலம்
முயங்கியே ஒருவ னத்தில்
ஓகைகூர்ந் திருந்த,' என்ன,
'உரைத்திடக் கதையேது?' என்றார். 3

**கமடம் = ஆமை, ஏகம் = ஒன்று, முயங்கி = சேர்ந்து, ஓகை = மகிழ்ச்சி, இருந்த = இருந்தன.**

தெள்ளிய திரைநீர்க் கோதா -
விரிநதித் தீரம் சூழும்
கள்ளவிழ் வனத்துக் குள்ளோர்
கருக்குமுள் இலவில் வாழும்
புள்ளினுக் கதிக மான
புத்தியுத் தியின தாகி
எள்ளல்இல் லாதி ருக்கும்
**இலகுபதன்** என்றோர் காகம். 4

**தெள்ளிய = தெளிந்த, நதித்தீரம் = ஆற்றங்கரை, கள் = தேன், இலவு = இலவமரம், புள் = பறவை, யுத்தி = தந்திரம், எள்ளல் = இகழ்ச்சி.**

வைகறை எழுந்து தங்கள்
வகையினத் துடனே ஆங்கோர்
பொய்கையில் மூழ்கி ஏறிப்
புணர்சிற குலர்த்தும் போது
கைகளில் வலையும் வில்லும்
கணைகளும் கொண்டு வேடன்
செய்கொலை பயில ஆங்கே
சேர்ந்தனன் ; அவனைக் கண்டே 5

**வைகறை = அதிகாலை, பொய்கை = குளம், புணர் சிறகு = சேர்ந்த சிறகு, கணைகள் = அம்புகள், பயில = பழக.**

பறந்தன காகம் எல்லாம் ;
இலகுபதன் ஒன்றும் ஆங்கே
மறைந்து,'இவன் கொடியோன் ; செய்யும்
வகையெலாம் அறிவோம்,' என்ன
அறைந்தொரு பொதும்பர்க் குள்ளே
ஒளிந்துபார்த் திருப்ப, ஆங்கே
சிறந்ததோர் வலையைச் சூழ்ந்து
தீனியும் தெளித்து வைத்தான். 6

**இலகுபதன் = எளிதாகப் பறப்பவன், பொதும்பர் = சோலை, சூழ்ந்து = விரித்து.**

வைத்தவன் மறைந்தி ருக்கும்
சமயத்தில் மன்ன னை
**சித்திரக் கிரீவன்** என்னும்
புறஒன்று சேனை சூழப்
பைத்தஅவ் வனத்திற் போந்து
பாங்கொரு மரத்தில் தங்கி
மொய்த்தஅத் தானி யத்தை
முற்படக் கண்ட தன்றே. 7

**சித்திரக்கிரீவன் = அழகிய கழுத்தையுடையவன், பைத்த = பசுமையான, பாங்கு = பக்கம், அன்றே = அசைச்சொல்.**

கண்டஅப் புறவின் வேந்து
கருத்தினில் ஆய்ந்து தன்பால்
கொண்டநற் பரிவா ரத்தைக்
குறித்தது கூறும் : 'இந்த
உண்தகு தானி யந்தான்
உற்றதெவ் வாறிக் கானில்?
எண்தகும் ஒருவர் யாரோ
இறைத்துவைத் திருக்க வேண்டும் ! 8

**புறவின் வேந்து = புறவரசு, ஆய்ந்து = ஆராய்ந்து, பரிவாரம் = கூட்டம், எண்தகும் = சிந்தித்தற்குரிய.**

'ஈதுநாம் அறியு முன்னே
இவ்விரை விரும்பு வோமேல்
தீதுவந் திடும்;பொன் காப்பிற்
சிந்தைவைத் தந்த ணாளன்
காதுவெம் புலியால் மாய்ந்த
கதைஉளது,' எனப்பு ருக்கள்,
'ஓதுக அதனை,' என்ன,
உரைத்திடும் கபோத வேந்தன் : 9

காதுதல்=கொல்லுதல், கபோதம்=புறு.

## 2. புலியால் பிராமணன் மரணமடைந்த கதை.

' மூப்புடைப் புலிதான் ஒன்று
மூழ்கிஓர் ஏரி யின்கீழ்க்
காப்புடன் தருப்பை தன்னைக்
கையில்வைத் திருக்கும் போது
நாப்புடை மறைவல் லாளன்
நண்ணிஅவ் வழியிற் செல்லக்
கூப்பிடல் செய்தன் னோனைக்
குறித்தந்தப் புலிதான் கூறும் : 10

மூப்பு=கிழத்தன்மை, நாப்புடை=நாவில், மறை வல்லாளன்=வேதத்தில் வல்ல பார்ப்பனன், நண்ணி=அடைந்து.

' அந்தணா ! இந்தக் காப்பை
அளிப்பன்;நீ வா,'என் றேதச்
சிந்தையில் வேட்கை கூர்ந்து
செப்புவான் : 'புலியா ரே!நீர்
வெந்துயர்க் கொலைமாந் தர்க்கு
விளைப்பது விட்டுத் தானம்
எந்தநல் வழியிற் செய்வீர்?
எனக்கதைக் கூறு'கென் றான். 11

வேட்கை=விருப்பம், மாந்தர்=மனிதர்.

‘புலி அது கேட்டு, ‘நானே
பூசுரா! நகமும் பல்லும்
இலன்;கிழம் ஆனேன்; பாவம்
இழைப்பது விடுத்து, நாளும்
பொலிதரு தானம் செய்கை
பொருளெனக் கொண்டேன்; அஞ்சேல்!
சலமதில் மூழ்கி வந்து
தரும்இதைக் கொடுபோ,’ என்ன 12

*பூசுரா = அந்தணனே, பொலிதரு = விளங்கும், அஞ்சேல் = பயப்படாதே, கொடுபோ = கொண்டுபோ.*

நன்றென மறையோன் மூழ்க
நண்ணினன் ஏரி நீரில்;
அன்றவன் கால்கள் சேற்றில்
அழுந்திடத் திகைத்து நின்றான்;
சென்றது புலி,‘நான் உன்னைச்
சேற்றினின் றெடுப்பேன்,’ என்னக்
கொன்றது; குருதி தன்னைக்
குடித்ததெ’தன் றுரைத்த தன்றே. 13

*அன்று = அப்பொழுது, குருதி = இரத்தம், அன்றே = அசை.*

அப்படிச் சொலப்பு றாவொன்
றகஞ்செருக் குற்றுக் கூறும்:
‘இப்படி யெல்லாம் பார்க்கில்
இரைபெறு திறக்க வேண்டும்;
எப்படி எக்கா லத்தில்
எய்துவ தெய்தும்,’ என்று
செப்பலும், புறாக்க ளெல்லாம்
சென்றந்த வலையிற் பட்ட. 14

*செப்பல் = சொல்லுதல், பட்ட = அகப்பட்டன.*

ஆங்கது கபோத வேந்தன்
அல்லலின் நோக்கி, 'அந்தோ!
ஈங்கிவை யெல்லாம் மாள
இருந்துயிர் வாழ்வ னோநான்!
தாங்கிய வலையிற் பட்டுச்
சாவதே தக்கது!' என்று
போங்கடு விசையிற் சென்று
பொள்ளென வீழ்ந்த தன்றே. 15

அல்லலின் = துன்பத்தோடு, பொள்ளென = விரைவாக, அன்றே = அசை.

'இடுக்கண்வந் துற்ற தென்ன
இதையினித் தப்பு மாறு?
பொடுக்கென வலையைக் கொண்டு
போவதே கருமம்,' என்று
திடப்படச் சொலக்க போதச்
சேனைகள் ஒருங்கு கூடி
எடுத்துநீள் வலையைக் கொண்டே
ஏகின விசும்பின் அம்மா! 16

இடுக்கண் = துன்பம், பொடுக்கென = விரைவாக, விசும்பு = ஆகாயம், அம்மா = இது அதிசயம்.

வேடனும் அதிச யித்து,
'விரைந்துபின் நடந்தோ மாகில்,
ஓடியே இளைத்து வீழும்;
ஒருங்குடன் வளைந்து கொண்டு
சாடலாம் எல்லாம்,' என்று
தன்மனத் தெண்ணிக் கொண்டே
ஓடினன்; கண்ணிற் காணு-
தோடின புருக்கள் அன்றே. 17

சாடலாம் = கொல்லலாம், அன்றே = அசை.

காகமும் கூடி ஓடக்
கானவன் களைத்து மீண்டான்;
ஏகின கபோத மன்னன்,
'எமதுநற் றோழ னை
ஆகுவாம் இரணி யன்வாழ்
அடவியிங் கிதுவே; அப்பாற்
போகலா கா'தென் றங்கே
பொருந்திவந் திறங்கும் போது 18

கானவன் = வேடன், ஆகு = எலி, இரணியன் = பொன்னிற மானவன், அடவி = காடு.

இரணியன் கண்டு, 'கூட்டம்
ஏ'தென வளையிற் செல்லக்
கரவுறு வளையில் அந்தக்
கபோதமும் மூக்கை வைத்து,
'விரகுள நண்பா!' என்று
விளித்தலும், தெரிந்து வந்து
பரவி,'ஈ தேது! கண்ணி
பட்டவா றெவனோ? அந்தோ! 19

கரவு = மறைவு, விரகு = தந்திரம், விளித்தல் = கூப்பிடுதல், பரவுதல் = துதித்தல்; வணங்குதல், கண்ணி = வலை, எவனோ = என்ன காரணமோ? அந்தோ = ஐயோ!

'இறந்ததும் நிகழ்ந்த தும்பின்
எதிர்வதும் ஆன காலம்
அறிந்தநீ ஏதி னாலே
அடர்வலைப் பட்டாய்?' என்ன,
'சிறந்தபே ரறிவி னாலும்
செப்பிய சமர்த்தி னாலும்
துறந்தவர் யாவர் சொல்லாய்
தொல்லைவல் வினையைத் தானே! 20

'எவ்விடத் தெக்கா லத்தின்
எவ்வகைக் கார ணத்தின்
எவ்வள வெவரா லேதான்
இருவினை அனுப வங்கள்
அவ்விடத் தக்கா லத்தின்
அவ்வகைக் கார ணத்தின்
அவ்வள வவரா லேதான்
அனுபவம் எய்தும் அன்றே?' 21

இருவினை = நல்வினையும் தீவினையும், அன்றே = அல்லவா ?

என்றுதான் கபோதம் சொல்ல,
இரணியன், 'கடலில் மீனும்
துன்றும்ஆ காயப் புள்ளும்
தொடர்வலைப் படுத லாலும்,
குன்றுநேர் களிறும் வெய்ய
கொலைபயில் அரவு தானும்
நின்றுகட் டுண்டு நெஞ்சம்
நிலைதளர் திறத்தி னாலும் 22

புள் = பறவை, களிறு = ஆண் யானை, அரவு = பாம்பு.

'வானுறு சுடர்கள் பாம்பால்
வருந்துத லானும், மிக்கோர்
ஆனநற் புலவர் தாரித்
திரத்தினால் அழுங்க லானும்,
ஈனராம் அறிவி லார்பால்
இருநிதி சேர்த லானும்
தானிரு வினையை யாரும்
தள்ளுதல் அரிதே!' என்று 23

வானுறு சுடர்கள் = சூரிய சந்திரர்கள், பாம்பால் = இராகு கேதுக்களால், மிக்கோர் = சிறந்தோர், புலவர் = அறிஞர், அழுங்கல் = வருந்துதல், இருநிதி = பெருஞ்செல்வம்.

இன்னநன் னீதி சொல்லி
இரணியன் இரங்கி, நண்பன்
தன்னிரு காலிற் பூண்ட
தளையுடன் சேனைக் காலில்
பின்னிய வலையும் சின்ன-
பின்னமாக் கடித்து விட்டே
பன்னிய உபசா ரங்கள்
பகர்ந்துபின் அனுப்பிற் றம்மா! 24

இன்ன = இவை போல்வன, இரங்கி = வருந்தி, தளை = கட்டு. சின்னபின்னம் = கண்டதுண்டம், பன்னிய = சொல்லிய.

ஏகின புறுக்கள்; மற்றவ்
விரணியன் வளையிற் செல்ல,
காகம்இங் கிவைகள் எல்லாம்
கண்டெலி நண்பன் மேலே
மோகமாய், வளையின் வாயில்
மூக்கைவைத் தழைத்த லோடும்,
ஆகு,'நீ யாரே? என்னை
அழைத்தகா ரியம்ஏ தெ'ன்ன 25

'யானொரு காகம்; என்பேர்
இலகுபத னன்தான் என்பார்;
கானவ னாலே நைந்த
கபோதமன் னவன்பின் வந்தேன்;
மானமும் குணமும் நட்பும்
வரிசையும் உறவும் கண்டு
நானும்உன் நண்பு கொள்ள
நாடியே அழைத்தேன்,' என்ன 26

கானவன் = வேடன், நைந்த = வருந்திய, மானம் = பெருமை, வரிசை = மரியாதை, நாடி = விரும்பி.

'தின்னிரை நானும், கொன்று
　　தின்பவன் நீயும் கூடி
இங்கிலந் தன்னில் நட்பாய்
　　இருந்திடல் ஆபத் திற்கே
மன்னிய இடம தாகும்;
　　வருநரி நட்பு தன்னால்
முன்னமோர் வலையி லேமான்
　　பட்டிடும் முறைமை போன்றே　　27

'தீங்கெனக் கெய்தும்,' என்று
　　செப்பலும், 'சிறுமை எய்தி
ஓங்குமான் வலையிற் பட்ட
　　விதந்தனை உரைத்தி,' என்று
ஏங்கல்இல் காகம் என்னும்
　　இலகுபத னன்றுன் கேட்கத்
தேங்கிய உவகை யோடும்
　　சீறெலி உரைக்கும் அன்றே.　　28

**உரைத்தி = சொல்லு, ஏங்கல் = வருந்தல், தேங்கிய = நிரம்பிய, உவகை = மகிழ்ச்சி, சீறெலி = சிறிய எலி.**

## 3. நரியால் மான் வலையிற்பட்ட கதை

'வளமுறு மகத நாட்டில்
　　சண்பக வனத்தில் மன்னி
உளம்மகிழ் கொடியும் மானும்
　　உறவுகொண் டிருக்குங் காலைக்
கொளும்இளம் புல்லால் மான்மெய்
　　கொழுத்திடும் இயல்பு நோக்கிக்
களம்மிகு நரியொன் றுள்ளக்
　　கபடத்தால் கொல்ல எண்ணி　　29

**வளம் = செழிப்பு, மன்னி = நிலைபெற்று, கொடி = காக்கை, மெய் = உடல், களம் = விஷமத்தனம், கபடம் = வஞ்சகம்.**

'துன்னிய மான்பாற் சென்று,'என்
நண்ப!நீ சுகமோ?' என்ன,
அன்னதைக் கேட்டு, 'நீயார்?'
என்றலும், 'அரியோய்! யான்இக்
கொன்னுறு வனத்தில் வாழ்வேன்;
**குத்திர புத்தி** என்பேர்;
பன்னிய கிளையொன் றில்லாப்
பாவியாய்த் திரிந்து நின்றேன். 30

**துன்னுதல் = பொருந்துதல், அரியோய் = அருமையானவனே, கொன் = அச்சம், குத்திரபுத்தி = வஞ்சகன், கிளை = சுற்றம்.**

'இன்றுனைக் கண்டு நெஞ்சத்து
எய்தினேன் உவகை! இப்போது
உன்திருப் பணிசெய் துன்பால்
உற்றிட விழைந்தேன்,' என்ன,
'நன்'றென இசைந்தி ரண்டும்
நண்ணுசண் பகத்தின் கீழே
துன்றின; அதன்மேல் உற்ற
**சுபுத்தி**யாம் காகம் கண்டே 31

**விழைதல் = விரும்புதல், இசைதல் = சம்மதித்தல், சண்பகம் = சண்பக மலர் மரம், துன்றின = தங்கின, சுபுத்தி = நல்ல புத்தி.**

'மித்திர மானே! நின்பால்
மேவினோன் யாவன்?' என்ன,
'பத்தியின் சினேகம் செய்யப்
படர்ந்த**சம் புகன்**'என் றோத,
'அத்தகை யான்தன் செய்கை
குலத்தொடும் ஆரா யாமல்
மத்தியத் திடம்நாம் ஈகை
தகாது;அது வழங்கல் செய்தால் 32

**மித்திரன் = சினேகன், மேவினோன் = சேர்ந்தவன், பத்தி = அன்பு, படர்தல் = வருதல், சம்புகன் = நரி, மத்தியம் = நடு, வழங்கல் = கொடுத்தல்.**

'தழுவுறும் ஒருபூ ஊனக்குச்
சரற்கவன் என்று கூறும்
கழுகிடம் கொடுத்தி றந்த
கணக்குப்போல் முடியும்,' என்ன,
'வழுஇல்அக் கதைஎ னக்கு
மரபினில் சொல்லு கென்று
பழுதறு மான்வி னுவப்
பகர்தரும் காகம் அன்றே: 33

தழுவு = ஆதரவு, சரற்கவன் = மங்கிய பார்வையுடையவன், கணக்கு = முறைமை, வழு = குற்றம், மரபினில் = முறையாக, பழுது = குற்றம், பகர்தரும் = சொல்லும்.

## 4. பூனைக்கு இடம் கொடுத்துக் கழுகு இறந்த கதை

'திரைகெழு கங்கா தீரத்
திரிகூட மலைப்பால் இத்திப்
பருமரப் பொந்தில் கண்ணும்
பைத்தகூர் நகமும் இல்லா
ஒருகிழக் கழுகு மற்றைப்
பறவைகள் உணவு நல்க
மருவும்நாள் பார்ப்பை உண்பான்
மார்ச்சாலம் வந்த தாங்கே. 34

திரைகெழு = அலைகள் பொருந்திய, கங்காதீரம் = கங்கைநதிக் கரை, திரிகூடம் = மூன்று சிகரம், இத்தி = கல்லால மரம், பைத்த = பசுமையான, பார்ப்பு = குஞ்சு, உண்பான் = தின்பதற்காக, மார்ச்சாலம் = பூனை.

'அதைச்சிறு பார்ப்பெ லாங்கண்டு
அஞ்சியே இரைதல் கேட்டுப்
பதைப்புறு கழுகு, 'நீர்ஏன்
பயமுறு கின்றீர்?' என்ன,

இதற்குளே பூனை உய்வது
எண்ணிஅக் கழுகின் பாற்போய்
விதிர்ப்பொடு வணங்க, 'நீயார்?
விளம்பெ'னப் பூனை கூறும் : 35

இரைதல்=கத்துதல், பதைப்பு=துடிப்பு, உய்வது=பிழைப்பது, விதிர்ப்பு=நடுக்கம், விளம்பு=சொல்.

## தரவு கொச்சகம்

'எனதுபெயர் நெடுஞ்செவியன்,'
எனக்கழுகு, 'நீஇவண்விட்டு
உனதிடத்திற் கோடு!இலையேல்
சாவாய்!'என் றுரைத்திடலும்,
'நினதிடத்தில் வரும்என்றன்
வரலாற்றை நீகேட்டுச்
சினவுகினும் நன்றெ'ன்னச்
செப்புமால் அப்பூனை : 36

இவண்=இவ்விடம், வரலாறு=சரித்திரம், சினவுதல்=கோபித்தல், செப்புதல்=சொல்லுதல்.

'பேதமாம் சாதியினுல்
பிராணிகளைக் கொல்லுவதும்
நீதியால் உபசாரம்
நிகழ்த்துவதும் நன்றன்ருல் ;
ஆதலால், அவனவன்றன்
ஆசாரந் தனைக்கண்டே
யாதுசெயத் தக்கதோ
அதுசெய்தல் இயல்பெ'ன்ன 37

பேதம்=வேறுபாடு, நிகழ்த்துதல்=செய்தல், நன்றன்ருல்='ஆல்' அசை, ஆசாரம்=ஒழுக்கம், இயல்பு=முறை.

‘ ஆக்கம்மிகும் கழுகரசன்
அதைக்கேட்டப் பூனேயினே
நோக்கி,‘ஆ ஞல்நீஇங்கு
உற்றபடி நுவல்,’என்ன,
‘ தேக்குபுனல் கங்கைநதி
தீரத்தில் தினங்தோறும்
ஆக்கைஅமிழ்ந் திடமூழ்கிச்
சாந்திரா யணம்ஆற்றி 38

ஆக்கம்=வல்லமை, நுவல்=சொல், தேக்குதல்=நிறைதல், புனல்=நீர், ஆக்கை=உடல், சாந்திராயணம்=பௌர்ணமி தொடங்கி அமாவாசை வரை ஒவ்வொரு பிடி சோறு குறைத்தும், அமாவாசை முதல் பௌர்ணமி வரை ஒவ்வொரு பிடி அதிகப் படுத்தியும் சாப்பிட்டுச் செய்யும் ஒரு விரதம்.

‘ தங்குற்றேன்; நீமிகவும்
தருமவான் எனக்கேட்டே
இங்குற்றேன்; ‘ஏன்?’என்னில்,
‘வயதுமுதிர் இயற்புலவர்
எங்குற்ருர்?’ எனவினவி
எய்திஅறம் கேட்டிடுதல்
பொங்குற்ற மரபென்று
புகலுவர்எங் நூலோரும். 39

இயற்புலவர்=அறிஞர், நூலோர்=அறிஞர், அறம்=தருமம்.

‘ அறம்விடுத்திட் டெனேக்கொல்ல
அகம்துணிந்தாய்! இல்லறத்தின்
திறம்அடுத்தோர் நடைநின்போல்
கண்டதிலே! தெவ்வரும்தம்
புறம்அடுத்து வந்தவர்க்குப்
புரிந்திடுவர் உபசாரம்:
மறம்அடுத்து வெட்டுகின்ற
வருக்கும்நிழல் செயும்மரமே. 40

நடை=ஒழுக்கம், தெவ்வர்=பகைவர், மறம்=பகை.

'அதிதிஎவன் பால்எய்தி
முகம்வாடு மோ,அவன்றன்
பதிதருபுண் ணியம்கொண்டு
பாவத்தை அவற்கீவான்;
மதிகொடிய சண்டாளன்
மனைக்கண் ணும் கதிர்எறிப்பான்;
புதியர்எவர் வந்திடினும்
பூசிப்பார் பெரியோரே,' 41

**அதிதி = விருந்தினன், வாடுமோ = வாடுவனே, மதி = சந்திரன், சண்டாளன் = கீழ்மகன், கதிர் = ஒளி, பூசிப்பார் = உபசரிப்பார்.**

என்றிசைப்பக் கழுகதைக்கேட்டு
இயம்பும்:"இறைச் சிகள்அருந்திக்
கொன்றுழல்வது உமதுகுலக்
குணமெனமுன் குறித்தவெ"தன,
நின்றுஅவண்மற் றதைக்கேட்ட
நெடுஞ்செவியன் தரைதொட்டு,
'நன்று!சிவ சிவ!'என்று
நற்கரத்தாற் செவிபொத்தி 42

**அவண் = அவ்விடம், செவி = காது, பொத்தி = மூடி.**

'தருமநூல் பலதெரிந்து
சார்ந்துவை ராக்கியம்தீக்
கருமமெலாம் நீக்கினன்யான்;
கடுங்கொலையே பாதகத்திற்
பெரிதாகும்; அதுபுரியின்
நரகடைவர்; பெருங்கானில்
மருவுபலா திகள்உண்பார்
மருவுவரோ பாவம்?"என 43

**வைராக்கியம் = விடாப்பிடி, தீக்கருமம் = கெட்ட செயல், பலாதிகள் = பழம் முதலியவை, மருவுதல் = சேர்தல்.**

‘ கடுங்கழுகு தெளியுமாறு
இவ்வாறு கட்டுரைத்து,
நெடுஞ்செவியன் எனும்பூனை
நிலைத்துஅதன் வீடு உற்றதன்பின்
மடம்படுபார்ப் பினைஉண்டு
வைகுதலும், பறவையெலாம்
ஒடுங்குபறழ் காணுமல்
தேடல்அறிந்து ஓடியதே. 44

**கட்டுரைத்தல்=உறுதியாகச் சொல்லுதல், மடம்படு= இளமை பொருந்திய, பார்ப்பு=குஞ்சு, வைகுதல்=தங்குதல், பறழ்=குஞ்சு, ஒடுங்குதல்=மறைதல்.**

‘ புள்ளுகள்அக் கழுகிருக்கும்
பொந்தடைந்து பார்த்திடலும்
வெள்ளெலும்பும் சிறகுகளும்
விழுந்துறக்கண்டு, ‘இதுகொன்றது
எள்ளல்இல்நம் பார்ப்பை!’ எனக்
கொன்றதால் அதை;இதனுல்
உள்ளகுணம் தெரியாமல்
இடங்கொடார் ஒருவருக்கும்.’ 45

**புள்=பறவை, எள்ளல்=இகழ்தல்.**

‘ என்னலும்,அந் நரிஅதுகேட்டு,
‘இவற்குநீ நட்புச்செயும்
முன்னமே நின்னியல்பு
தெரியுமோ? மொழிதி!’என,
பின்னர்மான் காகத்தின்
மனம்ஒருமை பெறப்புரிய,
துன்னியஇம் மூன்றும்அருத்
தொடர்புகொடு நின்றனவே. 46

**மொழிதி=சொல்லு, ஒருமைபெற=சம்மதிக்க, தொடர்பு= சினேகம்.**

'ஆயதினந் தனில்ஒருநாள்
மானைப்பார்த் தந்தநரி,
'மேயும்இளம் பயிர்உனக்கு
வேண்டுமட்டும் அருந்துமிடம்
நீயறிதி,' எனக்காட்ட,
அன்றுமுதல் நெடியமான்
போயதனை மேய்ந்துபசி
போக்கியிருந் திட்டதுவே. 47

"பயிரிட்டோன் இதுகண்டு
வலைகட்டப் பாராது
செயிர்இட்ட மான்வழக்கப்
படிசென்று சிக்குண்டு,'என்
உயிர்இட்ட நண்பன் அலாது
உயச்செய்வார் யார்?'என்று
தயிர்இட்ட மத்தென்னத்
தனதுமனம் சுழல்காலை 48

*செயிர் = வருத்தம், இட்டநண்பன் = பிரிய சிநேகிதன், உயச்செய்வார் = பிழைக்கச் செய்பவர்.*

வன்பினொடு நரிகண்டு,'இன்று
எண்ணமெலாம் வாய்த்தது! இனித்
துன்பறஇன்று இதன்எலும்பைத்
தசையினொடு சுவைத்துண்டே
இன்பினொடும் உறலாம்!'என்று
எண்ணிவா ளாதிருப்ப,
அன்புறுமான் கண்டு,'இங்கென்-
றனைவிடுவி,' எனஅறைய 49

*வன்பு = கொடுமை, வாளாது = மௌனமாய், அறைய = சொல்ல.*

நரிஅதுகேட்டு, 'இன்றைக்கோர்
விரததினம்; நாளையெனில்
பரிகரிப்பன் நினதுதளை
பகர்தருதோல் ஆதலினல்;
பிரியமுறு நட்பினர்க்கென்
பிராணனையும் விடவல்லேன்!
தெரிகிலையோ நீ?' என்ருேர்
செடியில்மறைந் திருந்ததுவே. 50

**பரிகரித்தல் = நீக்குதல், தளை = கட்டு, பிராணன் = உயிர்.**

காகமது மித்திரனைக்
காணுமல், அன்றிரவு
சோகமுற்றெங் கணுங்தேடித்
தோல்வலையிற் பட்டதறிந்து,
'ஊகமுடை மானே! இங்கு
உற்றுழல்வ தென்?' எனலும்,
'நீகழறும் உரைகேளா
மையின்வந்த நிலையிதுவே.' 51

**சோகம் = துக்கம், பட்டது = சிக்கியது, ஊகம் = ஆலோசனை, கழறுதல் = சொல்லுதல்.**

'நண்புகொண்ட நரியெங்கே?'
என, 'எனது நல்லிறைச்சி
உண்பதற்கோர் செடியின்கீழ்
ஒளித்திருந்தது!' எனப்புகல,
பண்புறுகா கம்கேட்டுப்
'பயிர்க்கதிபன் உறுகின்ருன்!
மண்படும்ஆ ருயிர்கழிந்த
வடிவம்போல் உறு'கெனலும் 52

**அதிபன் = தலைவன்.**

நண்ணியஅப் பயிர்க்கதிபன்
உயிர்கழிந்த நௌவியென,
எண்ணிஇதை இழுத்தங்கு
வலைகட்டும் எல்வையினில்
மண்ணின்விரைந் தோடுதலும்
தண்டம்அவன் வலிந்தெறியத்
திண்ணியதோர் செடியின்கீழ்
இருந்தநரி சிதைந்ததுவே. 53

நௌவி = மான், எல்வை = சமயம், தண்டம் = தடி, திண்ணியது = வலியது, சிதைதல் = அழிதல்.

'ஆதலால், புண்ணியமும்
பாவமும்இங் கதிகரித்தால்
ஈதல்செயும் தம்பயன்,' என்று
இசைத்தெலியும், 'இவ்வாறு
சாதல்அகல் மானுக்குச்
சம்புகன்றன் நட்பினைப்போல்
ஓதரிய நின்னுறவும்
உபயோகம் அன்று,' எனவே 54

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

அன்னது கேட்ட காகம்
அகங்கரைந் துரைக்கும்: 'ஐயோ!
என்னைநீ உரைத்தாய்? என்றன்
இயல்பினைச் சிறிதும் தேராய்;
உன்னையான் கொன்று தின்றல்
ஒருகணப் பசிதீ ராதே!
மன்னிநட் பாய்இ ருக்கில்
வாழலாம் அனேக காலம். 55

தேராய் = ஆராயமாட்டாய், கணம் = விநாடி.

'சித்திரக் கிரீவ னைப்போல்
சேர்ந்தெனை நட்புக் கொண்டால்
எத்தனை நாளென் ஆவி
இருக்கும்!உள் ளளவும் உன்மேல்
வைத்தநண்பு ஒழிவ தில்லை;
மற்றிது கபடம் அல்ல;
சத்தியம்!' என்று காகம்
சாற்றியே மேலும் கூறும்: 56

ஆவி = உயிர், உள்ளளவும் = உயிர் உள்ள காலம் வரையி லும், கபடம் = வஞ்சனை, சத்தியம் = உண்மை.

'எறிதிரைப் பரவை நீரில்
எரியும்ஓர் கொள்ளி புக்கால்
செறிபுனல் வற்றிடாது;
தீஅவிந் திடும்! அவ் வாறே
அறிவுளா ரிடத்திற் கோபம்
அடைந்திடாது; அடைந்த தேனும்
உறுதியா மனத்தி லேதான்
ஒறுத்ததை அவிப்பர்.' என்றே 57

எறி திரை = வீசுகின்ற அலை, பரவை = கடல், கொள்ளி = நெருப்புக்கட்டை, புக்கால் = புகுந்தால், செறிபுனல் = நிறைந்தநீர், ஒறுத்து = கண்டித்து, அவிப்பர் = தணியச் செய்வர்.

உரைசெய்கா கத்தை நோக்கி,
'உன்னது புத்தி என்றும்
திரமிலை; உன்னைச் சேர்க்கின்
செய்கரு மங்கள் ஆகா;
புரைபடும்; எனவே, என்றன்
புத்திஉன் புத்தி ஊடே
வரையறக் கலந்தே எந்த
வகையில் நட்பாவேன் இன்று? 58

திரமிலை = நிலையில்லை, புரைபடும் = கெடும்.

'கடலின்மேல் ஓடும் கப்பல்
கரையின்மேல் ஓட்டல் ஆகா;
புடவிமேல் ஓடும் தேரைப்
புணரிமேல் ஓட்டல் ஆகா;
திடமுடன் கூடா தென்றும்
சேர்வதும் இல்லை; சேர்ந்தால்
கெடுவதே உறுதி அல்லால்
கேண்மையா தொன்றும் இல்லை. 59

புடவி = பூமி, புணரி = கடல், கேண்மை = சினேகம்.

'நாரியர் விருத்த சீலர்
ஞாயமும் துட்டர் செய்யும்
காரிய நலமும் மெய்யாக்
கருதியே நட்புக் கொண்டே
பேருல கத்தின் இன்பம்
பெற்றவர் இல்லை; துன்பம்
சேருவர் மடியிற் பாம்பைச்
சேர்ப்பவர் போல,' என்ன 60

நாரியர் = பெண்டிர், விருத்த சீலர் = ஒழுக்கங் கெட்டவர்.

'உள்ளது தானே! துட்டர்
உறவுஒருக் காலும் ஆகா;
தெள்ளியோய்! 'ஈதோர் காக்கை'
என்றுநீ செப்பி டாதே!
வள்ளலே! நினக்கு நான்றுன்
மன்னும்நட் பாவேன்; நீதான்
தள்ளினல் உயிர்இ ழப்பேன்!
சத்தியம்!' என்று கூறி. 61

உள்ளது = உண்மை, தெள்ளியோய் = அறிஞனே, வள்ளலே தருமவானே.

'மாந்தருக் கெல்லாம் நட்பு
வரும்திர வியத்தி னாலே ;
போந்திடும் பறவைக் கெல்லாம்
புசித்திடும் நிமித்தத் தாலே ;
காய்ந்திடு துட்டர்க் கெல்லாம்
கண்டிதப் புத்தி யாலே ;
தேர்ந்திடு பெரியோர்க் கெல்லாம்
தெரிசனத் தாலே எய்தும். 62

திரவியம் = பொருள், போந்திடும் = வரும், நிமித்தம் = காரணம், கண்டிதம் = கண்டித்தல், தெரிசனம் = காட்சி.

'நல்லவர் கண்ட போதே
நட்பின ராவர் ; பொல்லாப்
புல்லியர் தண்டத் தாலே
பொருந்திநட் பாய்இ ருப்பர் ;
மெல்லிய ஊசி காந்தம்
மேவிடும் ; துண்ட மான
வல்லிரும்பு எரியில் வெந்து
வருந்தியே ஒட்டும் அன்றே! 63

புல்லியர் = அற்பர், தண்டம் = தண்டனை.

'நின்னுடை அறிவும் நெஞ்சில்
நேயமும் உபாய முங்கண்டு
உன்னுடை நட்பு வேண்டி
உற்றுன தருகே வந்தேன் ;
என்னுடை அறிவும் நெஞ்சில்
இரக்கமும் சகாய மும்நீ
மன்னியிங்கு அறிதி,' என்று
வாயச வேந்தன் கூற 64

நேயம் = அன்பு, வாயசம் = காக்கை.

நன்றென இரணி யன்ருன்
　　நகைமுக மாகி, 'நட்பால்
என்றும்நாம் இடைவி டாமல்
　　இருப்பம்,'என் றனுப்பக் காகம்
வென்றிகொள் புலியி ரத்தம்
　　வீந்தமான் இறைச்சி தானும்
தின்றெலி தனக்கோர் பங்கு
　　தினந்தினம் அளித்து வாழ 65

**வீந்த = இறந்த.**

அந்தநாள் தம்முள் ஓர்நாள்,
　　'அடவியில் இரைகள் இல்லை;
முந்தவே எனக்கு நட்பாய்
　　முயங்கிடும் ஆமை யின்பேர்
**மந்தரன்;** அவன்பாற் செல்லின்
　　வாவியில் மீன்கள் எல்லாம்
தந்திடும்; நாமும் தின்று
　　தருக்கியங் கிருக்க லாமே.' 66

**வாவி = குளம், தந்திடும் = தருவான், தருக்கி = மகிழ்ந்து.**

என்னவே, எலியும், 'நெஞ்சில்
　　எனக்கொரு கருமம் உண்டாங்-
கன்னது தனைநின் னேடே
　　ஆங்குவந் துரைப்பேன்,' என்னத்
தன்னிரு காலாற் கொண்டு
　　தானும்வான் நெறியாற் செல்ல,
மன்னிய ஆமை கண்டு
　　வந்தெதிர் கொண்டி ருந்தே 67

**கருமம் = காரியம், வான்நெறி = ஆகாயவழி, எதிர்கொண்டு = வரவேற்று.**

'இற்றைநாள் வரையும் நன்ருய்
இருந்தையோ நண்ப!' என்றே
உற்றநற் கருமம் பேசி
உபசரித் திருக்கும் போழ்தில்
'மற்றெலி யாது?'என் ருமை
வினவ,'யாம் வருந்தி முன்செய
நற்றவப் பயனல் வந்த
நலந்தரும் நண்பன் காணே! 68

**இற்றைநாள் = இந்நாள், நற்கருமம் = க்ஷேமலாபம்.**

'இங்கிவன் பெருமை சொல்லல்
யாவரால் முடியும்! சேடன்
தங்கும்ஆ யிரநா வாலும்
சாற்றினும் முடியா தெ'ன்று
துங்கமாம் கபோத ராசன்
தொடர்வலைப் பட்ட வாறும்
அங்கதை விடுத்த வாறும்
அடைவுடன் சொல்லிற் றம்மா. 69

**சேடன் = ஆதிசேஷன், அடைவு = முறை, அம்மா = வியப்பைக் குறிக்கும் இடைச்சொல்.**

சொல்லலும் கமட வேந்தன்,
'தோழன்இங் கிவனே!' என்று
நல்லுப சாரம் சொல்லி
நண்புகொண் டிருகை ஆரப்
புல்லிமோந் தருகி ருத்திப்
பொருந்திய விருந்தும் இட்டே
எல்லைஇல் களிப்பி னேடும்
இருந்திர ணியனை நோக்கி 70

**கமடம் = ஆமை, புல்லி = தழுவி, இருத்தி = இருக்கச் செய்து, எல்லை = அளவு.**

## 5. எலி தன் வரலாறு சொல்லிய கதை

'உன்னிடம் ஏது? நீஇங்கு
உறைசரித் திரந்தான் ஏது?
நின்னிடம் விட்டும் இங்கே
நேர்ந்தகா ரணம்ஏது?' என்ன,
என்னிடம் நகரம் சம்ப
காவதி என்பது; ஈது
தன்னில்ஓர் தவசி மேவும்
தனிமடம் ஒன்றுண்டு; என்றும் 71

**உறைசரித்திரம் = வாழும் வரலாறு, நேர்ந்த = வந்து சேர்ந்த, மேவும் = தங்கும்.**

'பெருவளைக் குள்இ ருப்பேன்;
பிஞ்ஞகன் சன்னி யாசி
தெருவெலாம் பிச்சை தேர்ந்து,
சிறிதுதான் புசித்து, மீதி
ஒருசிறு பாத்தி ரத்துள்
பெய்துவே றொன்றால் மூடி
வருபர தேசிக் கென்று
வைத்தவன் உறங்கும் போதில் 72

**பிஞ்ஞகன் சந்நியாசி = சைவத் துறவி, பரதேசி = ஆண்டி.**

'வந்துநான் அந்தச் சோற்றில்
வயிறுகொண் டதைஅ ருந்தி
அந்தமா யோகி கையில்
அகப்படா தொளித்துக் கொள்வேன்;
இந்தவா றனேக காலம்
இருக்கும்நாள் களிலே ஓர்நாள்
புந்திகூர் ஞானி தன்பால்
பொருந்தினன் ஒருசன் யாசி. 73

'பொருந்திய அவனும் தானும்
பொருவில்சாத் திரங்கள் பேசி
இருந்தனர் அனேக நேரம் ;
யானும்வெம் பசியி னலே
வருந்திஎன் வளையை விட்டு
வந்துபாத் திரத்திற் சோற்றை
அருந்திய சத்தம் கேட்டே
அதட்டியே துரத்தி விட்டான். 74

**பொருவில் = ஒப்பற்ற, சாத்திரங்கள் = மதநூல்கள்.**

'துரத்திய **சூடா கன்னன்**
தோழன்அங் கவனை நோக்கி,
'விரத்தனய் இருந்து ஞானம்
வினவிய உனக்கிப் போது
கருத்துவேறு உற்ற தென்ன
காரணம் ?' என்று கேட்க,
'தெரித்திடும் உனது சொல்யான்
அனுதரம் செய்ய கில்லேன். 75

**சூடாகன்னன் = காதின்மேல் தொங்கும் முடியை உடைய வன், விரத்தன் = பற்றில்லாதவன், தெரித்திடும் = தெரிவிக்கும், அனுதரம் = அசட்டை, செய்யகில்லேன் = செய்யத்துணியேன்.**

'எலிக்கிந்தக் குதிப்பைக் கண்டே
என்மனம் வேரு யிற்று ;
பலிக்குநான் உழன்றெ டுத்த
பாத்தெலாம் தின்று கொண்டே
கெலிப்புடன் உளதிங் கையா !
கிட்டினும் பிடிக்கக் கூடாது ;
எலிக்குள்இப் படிநான் கண்ட
தில்லை !'என் றிரங்கிச் சொன்னன். 76

**பலி = பிச்சை, பாத்து = சோறு, கெலிப்பு = மகிழ்ச்சி.**

‘ அன்னவன் றன்னை நோக்கி
அதிதி,‘அவ் வெலிஒன் றேயோ,
பின்னையும் உண்டோ ?’ என்னப்
‘ பேரெலி ஒன்றே,’ என்ருன் ;
‘ மன்னுகா ரணம்வே றுண்டு :
மறையவன் தேவிக்கு அன்னுன்
சொன்னகா ரணம்போல்,’ என்று
சொல்ல;‘அக் கதைஏது ?’ என்ன 77

***அதிதி = விருந்தாளி, தேவி = மனைவி.***

## 6. திதி செய்த கதை

‘ முன்னம்ஓர் நகரந் தன்னில்
முழுமறை உபாத்தி யாயன்
தன்னுடை மனையா ளான
***சவுண்டிலி*** தன்னை நோக்கி,
‘ தென்அமர் பருவந் தன்னில்
திதிசெய வேண்டும்,’ என்ன,
அன்னவள், ‘ செலவுக் கில்லை ;
அரிசியும் இல்லை,’ என்ருள். 78

***தென் = அழகு, திதி = இறந்தவர்க்கு ஆண்டுதோறும் செய்யும் சிரார்த்தம்.***

‘ என்றலும், உபாத்தி யாயன்,
‘இருந்தது கொண்டு செய்தல்
நன்று;அது வைத்து வேறே
நாடினல், வேடன் ஓரி
பொன்றினற் போலப் பொன்றும் ;
பொருளையும் இழப்பம்,’ என்ன,
‘ வென்றிகொள் வேடன் ஓரி
விளிந்தவாறு எவன் ?ஓது,’ என்ன 79

***ஓரி = நரி, விளிதல் = சாதல், எவன் = என்ன ?***

'வேடுவன் ஒருவன் காட்டில்
வேட்டைகள் கிடையா மற்போய்
வாடியே அனேக நாளாய்
வனத்திலே திரிய, ஓர்நாள்
ஓடிய மானின் பின்னே
உலேந்துஅதை எய்து கொண்டு
நாடினன் சேரி; ஆங்கோர்
நற்பெரும் பன்றி கண்டான். 80

உலேந்து = அலேந்து, சேரி = இருப்பிடம்.

'இத்தைநாம் எய்தோ மாகில்
இரண்டுநாள் தீனி உண்டென்று
அத்தையும் எய்தான்; பன்றி
அவனேயும் கொன்று சாதல்
உற்றது; நரியும் கண்டு,
'மூன்றுநாள் இரையுண்டு!' என்று
கொத்துவில் நாண்க டிப்ப,
குத்திடச் செத்தது,' என்முன். 81

இத்தை = இதனே, எய்தோமாகில் = அம்புவிட்டுக் கொன்ருே மாலுல், நாண் = கயிறு.

'உள்ளது கொண்டு தன்மம்
உதவிநாம் புசிப்போம்,' என்று
தெள்ளிய மறையோன் சொல்ல,
தேவியும் மகிழ்ந்து, 'வீட்டில்
எள்அலாது ஒன்றும் இல்லே;
இதைஇனிக் கழுவி ஆட்டி
வள்ளலார் மறையோர்க் கெண்ணெய்
வழங்கிநீ ராட்ட,' என்றே 82

தன்மம் = தருமம், தெள்ளிய = அறிவுடைய, தேவி = மனேவி, ஆட்டி = செக்கிலிட்டு அரைத்து, நீராட்ட = நீராடச் செய்க.

‘திலத்தைஆய்ந் தெடுத்து நீரில்
செப்பமாக் கழுவிப் பாயில்
உலர்த்தினுள் ; உலர்த்த, அந்த
ஊரினிற் காகம் தின்று
நிலத்தினில் இறைப்பக் கண்டு
நெஞ்சகம் கலங்கி ஓடிப்
**புலத்தியன்** என்னும் வேத
பூரணன் மனையிற் சென்றே 83

திலம் = எள், வேதபூரணன் = வேதம் முழுதும் கற்றவன்.

‘அங்கவன் தேவி தன்னை
அழைத்து,‘நான் பருப்பது ஈவேன் ;
மங்கையே! எள்ளுத் தந்து
மாற்று,’எனும் மாற்றம் கேட்டே,
‘இங்கொரு கார ணத்தால்
எள்ளுக்கு மாற்ற வந்தாள்
நங்கையே !’ என்றவ் வேதன்
நாடியே விசாரித் தானே. 84

*மாற்றம் = சொல், வேதன் = பிராமணன்.*

‘ஆரணன் அறிந்து கொண்டான் ;
அப்படி நாமும் இந்தக்
காரணம் அறிவோம்,’ என்று
கடுகியே கொட்டெ டுத்துப்
பாரளை அகழ்ந்து வெட்டிப்
பார்க்க, நான் ஓடிப் போனேன் ;
சேரஅங் கிருந்த செம்பொன்
திரளெலாம் எடுத்துக் கொண்டார். 85

*ஆரணன் = பிராமணன், கொட்டு = மண்வெட்டி, பாரளை = (பார் + அளை) பூமியிலுள்ள வளை.*

'வேறொரு வளையில் வைகி
வெம்பசி தனக்கு முன்போல்
சோறுநான் அருந்தப் போனேன் ;
துரத்திவந் தடித்தான் ; இன்று-
காறும்அங் கவர்ம டத்தைக்
கருதவும் பயந்து, திங்கள்
ஆறும்ஓர் ஆறும் வேறோர்
அடவிபுக் கிருந்தேன் யானே. 86

இன்றுகாறும் = இந்நாள் வரை, திங்கள் = மாதம், திங்கள் ஆறும் ஓர் ஆறும் = ஒரு வருடம், அடவி = காடு.

'திரவியந் தானே புத்தி?
திரவியந் தானே வித்தை?
திரவியந் தானே சுத்தம்?
திரவியந் தானே சித்தி?
திரவியந் தானே சத்தி?
திரவியந் தனே முத்தி?
திரவியந் தானே யாவும்
செய்வதல் லாதும் உண்டோ? 87

திரவியம் = செல்வம், சித்தி = வெற்றி, சத்தி = வல்லமை, முத்தி = மோட்சம்.

'சத்துவம் புத்தி வித்தை
சதுர்விதார்த் தங்கள் ஆன
இத்தனை விதமும் செல்வம்
இல்லையேல், இல்லை ஆகும் ;
சத்துவம் புத்தி வித்தை
சதுர்விதார்த் தங்கள் ஆன
இத்தனை விதமும் செல்வம்
எய்திடில் எய்தும் அன்றே? 88

சத்துவம் = வலிமை, சதுர்விதார்த்தங்கள் = (அறம் பொருள் இன்பம் வீடு என்னும்) நால்வகைப் பொருள்கள்.

'சுதியிலார் பாட்டும், தங்கள்
சுற்றம்இல் லாத நாடும்,
மதியிலார் கவியும், நல்ல
மனைவியில் லாத வீடும்,
பதியிலார் அழகும் பாழே;
பார்க்கில்இங் கிவைபோல் அல்ல,
நிதியிலார்க் கெவையும் பாழே
நினைக்கின்மூ வுலகி னுள்ளும். 89

சுதி = இசையைச் சிறப்பிக்க அதனுடன் ஒத்து எழுப்பப் படும் துணை ஒலி, பதி = கணவன், மூவுலகு = சுவர்க்கம், மத்தியம், பாதலம் என்னும் மூன்று உலகங்கள்.

'கதிரவன் இலையேல் கண்ணில்
காண்பன மறையு மாபோல்,
நிதியம்ஒன் றிலையேல் யார்க்கும்
நீதி,மா ஞானம், போதம்,
துதிபெறு கீர்த்தி, ஆண்மை,
சூழ்ச்சி,மந் திரவி சாரம்,
சதுர்,அபி மானம் எல்லாம்
தன்னிலே மறைந்து போமால். 90

கதிரவன் = சூரியன், நிதியம் = செல்வம், போதம் = அறிவு, கீர்த்தி = புகழ், விசாரம் = ஆராய்ச்சி, சதுர் = சாமர்த்தியம், அபிமானம் = தன்மதிப்பு.

'வறுமையா லேயா சிக்க
வருமவர் தமக்கும், ஆவி
இறுமவர் தமக்கும் செய்யும்
இயற்கைஒன் றும்;ஏ தென்னில்,
உறுதிபோம் ; கைகால் சோரும் ;
உள்ளமும் கலங்கும் ; மெய்யும்
குறுகியே நடுங்கும் ; வாயும்
குழறும்; நல் லறிவும் போமே. 91

‘ பொன்னின்மேல் இருந்து சோற்றைப்
புசித்தனை ! பொன்னும் போச்சே !
இன்னமும் உனக்கு வெட்கம்
இல்லையோ ?’ என்று சூடா-
கன்னன்முன் சொன்ன தென்றன்
கருத்துளே வருத்த லாலே
நின்னைவந் தடைந்தேன் ; என்னை
நீஇனிக் காப்பாய் !’ என்ன 92

**கருத்து = மனம்.**

இரணியன் தன்னை நோக்கி,
‘ இலகுபத னன்கண் நீயும்
திரமுடன் வந்து சேர்ந்த
செல்வம்,முற் பிறப்பிலேயான்
பரவிய தெய்வம் தந்த
பாக்கியம் அன்றோ ?’ என்று
புரைவற நண்பு கொண்டு
பொருந்திஅங் கிருந்து கொண்டே 93

**பரவிய = வணங்கிய, புரைவு = குற்றம்.**

மந்தரன் மீன்கள் கொண்டு
வர,லகு பதனன் போகி
எந்தடை வேனும் நல்ல
இறைச்சிகள் கொண்டு செல்ல,
சுந்தர இரணி யன்போய்ச்
சோறுகொண் டேக, மூன்றும்
சந்ததம் கூடி உண்டு
தருக்கிஅங் கிருக்கும் நாளில் 94

**சுந்தரம் = அழகு, சந்ததம் = எப்போதும்.**

## கலி விருத்தம்

கான வேடனைக் கண்டு நடுங்கிய
மானின் ஓர்கலை மான்அவண் எய்தலும்,
'ஞானந் தன்னம்இ லாநண்ப னே!உளம்
ஏன்ந டுங்கினை ?' என்று வினவவே 95

தன்னம் = சிறிதும்.

'வெஞ்ச மன்புரை வேடன் ஒருவனே
நஞ்ச அம்புகொண் டெய்ய நடுங்கியே
தஞ்சம் இங்கின்மை யால்உமைச் சார்ந்தனன் !
'அஞ்சல்!' என்றப யந்தரு வீர்!'என 96

வெஞ்சமன் புரை = கொடிய யமனையொத்த, நஞ்சம் = விஷம், தஞ்சம் = புகலிடம்.

'நல்லது ! உன்பெயர் யாது ? நவில்,'என,
'எல்லை மன் **சித்தி ராங்கன்** எனச்சொல்வார் ;
சொல்லும் தாய்தந்தை சுற்றம்ஒன் றின்மையால்
புல்லு கானம் புகுந்து வருந்தினேன் ! 97

நவில் = சொல், எல் = பெருமை, மன் = பொருந்திய, சித்திராங்கன் = அழகிய உடலையுடையவன்.

'தந்தை தாய்தமர் நீவிர்; நும் தஞ்சமாய்
வந்த என்மிசை நண்புவைத் தீர்எனில்,
எந்த நாளும் உமைப்பிரி யேன் !'என
மந்த ரன்முதல் மூன்றும் வகுக்குமால்: 98

தமர் = சுற்றத்தார், வகுக்கும் = சொல்லும்.

'நன்று ! நாம்இனி நால்வரும் கூடியே
ஒன்று சிந்தைய ராகி ஒருமையாய்
என்றும் வாழ்வ தியல்பு,'என எண்ணியே
அன்று மூன்றும் அபயம் அளித்தவே. 99

ஒன்றுதல் = பொருந்துதல், ஒருமை = ஒற்றுமை.

'நான்கும் இப்படி நல்லுற வாகியே
ஆங்கு வைகும் அளவினில் ஓர்பொழுது
ஓங்கு மாறிரைக்கு ஓடிஓர் காட்டினில்
தேங்கு வேடன் வலையினிற் சிக்கியே 100

**வைகுதல்=வசித்தல், ஓங்கும் ஆறு = நெடுந்தூரம்.**

சித்தி ராங்கன் திகைத்தது கண்டுதான்
கத்து காகத்தின் பாடைதம் காதுற
மொத்தும் ஆமையும் மூடிக மும்விரைந்து
அத்தி சைக்கண் அடைந்துஅதைக் கண்டவே. 101

**பாடை=மொழி, மொத்தும்=மந்தகுணம் பொருந்தும், மூடிகம்=எலி, கண்ட=பார்த்தன.**

காக்கை சென்றெதிர் கூவிக் கதறியே,
'தீக்கண் வேடன் வலையினிற் சிக்கியே
நோக்கும் நவ்வி நுடங்கும் வருத்தத்தை
நீக்க வேண்டும் நிமிடத்தில்!' என்னவே 102

**நவ்வி=மான்குட்டி, நுடங்கும்=சோர்வடையும்.**

கூடி மூன்றும் குறுகி வலைக்குளே
வாடி நின்ற மறிமுகம் நோக்கியே,
'பீடு லாவும் அறிவிற் பெரியைநீ
ஓடி இவ்வலை உற்றதென் னோ?' என 103

**மறி=மான்குட்டி, பீடு=பெருமை, உலாவு=பொருந்திய.**

'பின்னை வேண்டின பேசுதும்; வேடன்வந்து
என்னை ஆவி இறுத்திடும் முன்னமே
மன்னு காலில் வலையை விடுத்தி'டென்று
உன்னு மூடிகத் தோடுரை செய்யவே 104

**பேசுதும்=பேசுவோம், இறுத்திடும்=கொல்லும், உன்னும்=ஆலோசிக்கும், மூடிகம்=எலி.**

'என்ன பீதி உனக்கு?' என் றெலிசொல,
'முன்னை நான்குரு ளைப்பரு வத்திலே
அன்னை யோடும் அடவியில் வைகினேன் ;
துன்னு வேடன் பெருவலை சூழ்ந்தனன். 105

பீதி = பயம், குருளை = குட்டி, சூழ்ந்தனன் = விரித்தான்.

'தாவி அந்த வலைதனைத் தாண்டி, ஓர்
காவில் வீழ்ந்தனன் ; கண்டு கடுங்கொலைப்
பாவி என்னைப் பிடித்துப்போய்ப் பட்டணக்
காவ லன்மகிழ் காணிக்கை ஈந்தனன். 106

கா = சோலை, காவலன் = அரசன், காணிக்கை = கடவுளுக்காவது பெரியோர்க்காவது மரியாதையுடன் அளிக்கும் பொருள்.

'அந்த மன்னன் குமாரர்க் களித்தலும்
மைந்தர் சிந்தை மகிழ்ந்து, களிப்பினல்
சந்த தம்விளை யாடித் தருக்கியே
பந்தம் இட்டுவைத் தார் ; அப் பகலிலே 107

தருக்கி = கர்வித்து, பந்தம் = கட்டு.

'மழைமு ழக்கி வருதலும், 'நாமும்நம்
உழைஇ னத்துடன் ஓடித் திரிந்துபைங்-
குழைமு றிப்பதெந் நாள்!' எனக் கூறிநின்று
அழுத ரற்றினன் ; அன்னது கேட்டலும் 108

உழை = மான், பைங்குழை = பசுமையான தழை, அன்னது = அது.

''என்ன காரண மோஅறி யோம்! இது
தன்னை நாம்தடை செய்வது தன்மமன்று,'
என்ன எண்ணி எனைவிடுத் தார்இள-
மன்னர் ; நான்இவ் வனத்தினில் உற்றனன்.' 109



என்று கூறி இரங்க, இரணியன்,
வென்றி வேடன் விரைந்து வருமுனம்
சென்று காலில் வலையைச் சிதைத்தலும்
கன்றும் மானும் கடுகி நடந்ததே. 110

வென்றி = வெற்றி, சிதைத்தல் = அறுத்தல், கன்றும் = வருந்தும்.

தீமை வேடன் விரைந்துசென் றுன்;எலி
பூமி வாய்வளை புக்கங் கொளித்தது ;
வாமம் மேவு கொடிமரத் தேறவே
ஆமை தான்நடை யால்முட்ட டானதே. 111

வாமம் = அழகு, கொடி = காகம்; முட்டு = தடை.

வந்த வேடன் மனது மயங்கியே
அந்த மானின் அடிதொடுத் தோடலும்
முந்தும் ஆமை முடங்கிக் கிடந்ததைப்
பந்தம் ஆர்வலைப் பையினிற் கட்டியே 112

மானின் மேல்மனம் வைத்து மயங்கியே
ஆன வேடுவன் ஆமைகொண் டோடவே
ஞானம் ஆர்கொடி யைக்கண்டு நண்பனைக்
கானம் நீங்குமுன் மீட்கக் கருதியே 113

ஆகு வேந்தன்,'நம் ஆமையைக் கொண்டவன்
போக நாம்கண் டிருத்தல்பொல் லாது;முன்
ஏகி மானொடு கூடி இதற்குவேறு
ஊகம் எண்ணுவம் ; வா,'என் றுரைத்ததே. 114

என்றுரைத்தலும் கேட்டு,'இகல் வேடனை
வென்று நண்பன் இடர்விலக் காமலே
சென்று நாம்உயிர் வாழ்வது தீ'தென
ஒன்றும் நண்பிற் கொடியும் உரைத்ததே. 115

இகல் = பகை.

கோலம் ஆர்எலி 'நன்றெ'னக் கூறலும்
காலி னல்அங்கி டுக்கிக் கணத்தினில்
சால வேபறந் தக்கலை தன்னுடன்
ஓல வேஒரு நன்மை உரைசெயும்: 116

**கோலம் = அழகு, கணம் = விநாடி, சால = மிக, கலை = கலை மான், ஓல = சத்தமாக.**

'தத்தும் நீர்க்கரை தன்னில் விழுந்துநீ
செத்த தென்னக் கிடந்திடு ; சேர்ந்துனைக்
கொத்து வேன் ;அது கொண்டவன் ஆமையை
வைத்து நின்னை எடுக்க வருவனே. 117

**தத்துதல் = தாவிக் குதித்தல்.**

'அந்த வேளை இரணியன் ஆமையின்
பந்தம் நீக்கி வளைபுகும் ; பைம்புனல்
மந்த ரன்புகும் ; நான்பறப் பேன் ;அவன்
முந்த நீயும் ஒளித்திடு வாய்,' என 118

**பந்தம் = கட்டு, பைம்புனல் = தெளிந்த நீர்.**

'நல்ல சூழ்ச்சிசொன் னாய் !' என நண்ணியே
மெல்ல நீர்க்கரை மான்கலை வீழ்ந்தது ;
புல்லிக் காகம் புசிக்க விழுந்தபோல்
மெல்ல வேஅதன் மீதில் விழுந்ததே. 119

கண்டு வேடன் கலக்கம் தெளிந்து,'இதைக்
கொண்டு போதும் !' எனக்குலத் தாமையை
மண்டும் நீர்க்கரை தன்னில்வைத் தோடினன் ;
பண்டு போல்எலி பாசம் கடிக்கவே 120

**போதும் = போவோம், குலத்தாமை = சிறந்த ஆமை, பாசம் = கயிறு.**

மானே வேடன் குறுக,அம் மான்ஒரு
கானில் வீழ்ந்தது ; காகம் பறந்தது ;
கூனல் ஆமை குளத்தினில் வீழ்ந்தது ;
ஞான மூடிகம் நல்வளை புக்கதே. 121

**கானில் = காட்டில், கூனல் = கூன், புக்கது = புகுந் தது.**

வேடன் ஓடி விடாய்த்தவண் மீளவே
கோடு லாவிய வாயசம் கூறவே
நாடி நான்கும்அங் கோரிடம் நண்ணியே
கூடி வாழ்ந்து குலாவி இருந்தவே. 122

**கோடு உலாவிய = கிளையில் தங்கிய, வாயசம் = காக்கை, குலாவி = மகிழ்ந்து.**

‘ஆத லால்நல் லவர்கள் உறவுபோல்
ஊதி யம்பிறிது இல்லை உயிர்க்கு,’என
வேதி யன்சொல, வேந்தன் குமாரரும்
‘நீதி யாம்,’என நேயம்வைத் தார்களே. 123

**ஊதியம் = இலாபம், நேயம் = அன்பு.**

## III

# சந்தி விக்கிரகம்

### *அறுசீர் ஆசிரிய விருத்தம்*

இளம்பிறை ஆடக் கங்கை
இருநதி ஆட மன்றில்
வளம்பெற நடிக்கும் எந்தை
மலரடி கருதி, மேலோர்
உளம்புனை மித்ர பேத
உபாயநற் சுகிர்ல்லா பம்யாம்
விளம்பினம்; இப்பாற் சந்தி
விக்கிர கம்சொல் வோமே: 1

*பிறை = பிறைச்சந்திரன், இருநதி = பெரிய ஆறு, (ஆகாய கங்கை), மன்று = சபை, எந்தை = எம் தந்தை.*

அந்தணன் சுகிர்ல்லா பத்தின்
அடைவெலாம் உரைப்ப, வேந்தன்
மைந்தர்கள் வினவி, மிக்க
மகிழ்வுடன் இருந்து, 'மூன்றும்
தந்திரம் என்று சொன்ன
சந்திவிக் கிரகம் யாது ?
புந்திகூர்ந் துரைக்க!' என்று
புகல,வே தியன்உ ரைப்பான் : 2

சத்துரு ஆன பேர்கள்
சரணம்என் றடைந்தா ரேனும்.
மித்திர ராக எண்ணி
விரும்பிநட் பாக ஒண்ணாது ;

'எத்திறம்?' என்னில், காகம்
இளைத்தது போல வந்து,
குத்திர மாகக் கோட்டான்
குலமெலாம் அழித்த தன்றே? 3

**எத்திறம் = எவ்வாறு, குத்திரம் = வஞ்சனை.**

## 1. காக்கை கோட்டானை வென்ற கதை

### *அறுசீர் ஆசிரிய விருத்தம்*

என்ன,'அக் கதைஏது?' என்றார்;
இருள்குடி கொண்ட காடொன்று
அன்னதில் பெரிய தான
ஆலமா மரத்தில் என்றும்
துன்னிய காக வேந்தன்
துகள்அறு **மேக வண்ணன்;**
அன்னவன் சேனை கோடி;
அமைச்சர்ஓர் ஐவர் ஆவார் 4

திகழும்**உத் தீபி தன்,சந்-**
**தீபி தன்** தேசம் எல்லாம்
புகழ்**புரோத் தீபி தன்,**பின்
புகலும்**ஆத் தீபி தன்,**மேல்
நிகழ்**சிரஞ் சீவி** என்பார்
நீதிமந் திரிகள் சூழ
மகபதி போல மேக
வண்ணன்வீற் றிருந்த நாளில் 5

**மகபதி = இந்திரன்.**

அடுக்கஓர் மலைமு ழைக்குள்
அலகிலாக் கூகை தாழ
நடுக்கம்ஒன் றனும் இன்றி
நல்லமந் திரிகள் சூழ

இடுக்கண் இல் லாமல் எங்கும்
இரவெலாம் வேட்டை யாடத்
தடுக்கலா உலூக மன்னன்
தானும்அங் கிருந்து வாழும். 6

முழை = குகை, அலகிலா = அளவில்லாத, கூகை = கோட்டான், தாழ = வணங்க, உலூகம் = கோட்டான்.

பகலெலாம் காகம் கூகை
பதைத்திட வதைக்கும் ; கூகை
இகலிரா முழுதும் காகம்
எழும்பிடா தடிக்கும் ; இந்த
வகையிலே கிடந்து சிந்தை
வருந்தும்நாள் தன்னில் ஓர்நாள்
தகஇரா அதனில் யாமந்-
தனில்அமைச் சர்களை நோக்கி 7

இகலி = பகைத்து, யாமம் = நள்ளிரவு.

'கதிரவன் எழுந்தால், அந்தக்
காக்கையை வெல்லக் கூடாது ;
இதுநல சமயம் ; இந்த
இரவிலே வளைந்து கொண்டு
சதியினல் அடித்தி ழுத்துச்
சத்துரு நாசம் செய்வோம் ;
மதியுடன் சேனை கூட்டி
வருக,' என் றெழுந்த தம்மா. 8

கதிரவன் = சூரியன், சதி = வஞ்சனை, நாசம் = அழிவு.

'நன்'றென மகிழ்ந்த மைச்சர்,
'நமக்கிது வேளை தானே ?
வென்றிநாம் பெறுவோம்,' என்று
விரைவுடன் படைகள் கூட்டிச்

சென்றுபே ராலைச் சூழ்ந்து
சினத்துடன் அடித்துக் கொத்திக்
கொன்றுதான் வெற்றி கொண்டு
கூகைவேந்து அடைந்த தன்றே. 9

அழிந்தன காக சேனை ;
ஆலெலாம் குருதி வெள்ளம்
வழிந்தது ; சிறகும் காலும்
வயிற்றினில் குடரும் அற்று
விழுந்துபின் மற்ற தற்குள்
வேந்தனும் விழுந்தொ ளித்தான் ;
இழிந்தது கங்குற் போழ்தும் ;
எதிர்ந்தது பரிதி மன்னே. 10

குருதி = இரத்தம், கங்குல் = இரவு, பரிதி = சூரியன், மன்னே = அசைச்சொல்.

இருள்விடிவு அளவில் மன்னன்
எழுந்து,தன் படைகள் பட்டுக்
கருமலை போல்கு விந்த
கணமெலாம் பார்க்க, அங்கே
பெரியமந் திரிகள் ஐந்தும்
பிழைத்தன ; சிலகா கங்கள்
தருவொடும் இனத்தை நீத்துத்
தப்பியே பிழைத்த ; ஆங்கே 11

படை = சேனை, பட்டு = அழிந்து, கணம் = கூட்டம், தரு = மரம், இனம் = கூட்டம். நீத்து = விட்டு.

பிழைத்தகா கங்க ளோடு
பெரியமந் திரிகள் தம்மை
அழைத்து,‘ நம் காகம் எல்லாம்
அழிந்திட என்ன வேதன்

இழைத்தநாள் இதுவோ!' என்றங்கு
இரங்கியே அழுது, காயத்து
உழைத்தகா கத்துக் கெல்லாம்
உற்றகா யங்கள் கட்டி 12

**வேதன் = பிரமன், இழைத்தல் = செய்தல், உழைத்த = வருந்திய.**

செத்தகா கங்கட் கெல்லாம்
செய்யுமா றுரிமை செய்து,
தத்துநீர் ஆடி, வேறோர்
தருவினில் இருந்து, வேந்தன்
துய்த்தலும் துறந்து, 'மிக்க
சூழ்ச்சிமந் திரிகாள்! என்ன
புத்திநாம் உய்யு மாறு?
புகலுமின்,' என்று கூற 13

**உரிமை = கடமை, துய்த்தல் = உணவருந்தல், புகலுமின் = சொல்லுங்கள்.**

*'சத்துரு வினும்மிக் காரைச்*
*சார்ந்துசத் துருவை வெல்லல்,*
*அத்திரம் கூடா தென்னில்*
*அவரையே தொழுது நிற்றல்,*
*சித்தம்அங் கிரங்கார் ஆகில்*
*தேசம்விட் டப்பாற் போதல்,*
*இத்திறம் உபாயம் மூன்றே,'*
*என்றுத்தீ பிதன்ந வின்றான்.* 14

*'தன்னிடத் திருக்கும் நாய்க்கும்*
*சௌரியம் உண்டு; சிங்கம்*
*என்னினும், தானம் விட்டால்*
*எவரும்அங் கதைஎண் ணார்கள்;*

துன்னுபாற் பசுவும் தன்பால்
சுரந்திடாது இடம்பே தித்தால்;
மன்னிடத் திருந்தே வெல்லும்
வகைநினைத் திடுதல் நன்றே.' 15

சௌரியம் = வீரம், தானம் = இருப்பிடம், பேதித்தல் = வேறு படுதல்.

என்றுசந் தீபி தன்தான்
இயம்பலும், அதுமறுத்து
நின்றுநற் குணமே தென்று
நிகழ்புரோத் தீபி தன்,'முன்
வென்றிகொண் டவர்கள் நம்மை
மேவிஇங் கிருக்க ஒட்டார்;
இன்றினிச் சமாதா னத்தால்
இருப்பதே நல்ல'தென்றான். 16

'வெங்கதிர்ப் பகலில் கண்கள்
விளங்குதல் குடிஞைக் கில்லை;
கங்குலின் பொழுது கண்கள்
கருங்கொடிக் குலத்துக் கில்லை;
எங்கினிச் சமாதா னத்தால்
இருப்பது? கூகைக் கூட்டம்
மங்கஇப் பகலே சென்று
வளைந்துகொண் டடிப்போம்,' என்று 17

குடிஞை = கோட்டான், கங்குல் = இரவு, கருங்கொடி = கரிய காகம், மங்க = அழிய.

ஓதஆத் தீபி தன்,மற்
றுரைத்தமந் திரிகள் நால்வர்
போதனை பலவும் கேட்டுப்
புத்தியும் உபாய முஞ்சொல்

நீதியும் விறலும் என்று
நிகழ்சிரஞ் சீவி தன்னை,
'ஓதுநீ,' என்ன மன்னன்
உரைத்திட உரைக்கும் அன்றே. 18

'வித்தொடு மந்தி ரஞ்சேர்
விசாரமும் நிகரே ; அந்த
வித்தினை விதைத்தால் அன்றி
விளைபயன் கொடாது; அவ் வாறு
புத்திமந் திரிகள் சொல்லும்
போதனை தனையும் நெஞ்சில்
வைத்திருந் தாலே அன்றி
மன்னர்தம் கருமம் வாயா. 19

வித்து = விதை, விசாரம் = ஆராய்ச்சி, போதனை = கற்பனை, வாயா = கைகூடமாட்டா.

'கூடுவ தொன்று, கூடிக்
குறைவறக் கெடுப்ப தொன்று,
நாடுவிட் டேகல் ஒன்று,
நல்லரண் சேர்தல் ஒன்று,
வீடுவிட் டேகா தொன்று,
மித்திர பேதம் ஒன்று:
நீடுசொல் வேந்தர் தம்பால்
நிகழ்குணம் இருமூன் றாகும். 20

அரண் = கோட்டை.

'காரிய முயற்சி பண்ணல்,
காலமும் இடமும் ஓர்தல்,
சீரிய தனமும் ஆளும்
தேடுதல், ஒருவன் செய்த
காரியம் அதனுக் கொத்த
காரியம் தானும் செய்தல்,
பாரிலே சமாதா னங்கள்
பண்ணல்ஐந் தாகும் அங்கம். 21

ஓர்தல் = ஆராய்தல், சீரிய = சிறந்த.

'சாமமும் பேதந் தானும்
 தானமும் தண்டந் தானும்
ஆமுபா யங்கள் நான்காம் ;
 அறியும்உற் சாகம் மந்த்ரம்
பூமியிற் ப்ரபுத்வம் என்று
 புகன்றிடு சத்தி மூன்றே.
சாமி! இங் கிவைகள் எல்லாம்
 தானறிந் தவனே வேந்தன். 22

சாமம் = சமாதானம், பிரபுத்வம் = தலைமை.

'மூவிரு குணமும், அங்கம்
 மொழிந்திடும் ஐந்தும், நெஞ்சில்
மேவிய உபாயம் நான்கும்,
 மிக்கசத் திகள்ஓர் மூன்றும்
ஓவற விசாரித் தேற்ற
 உசிதமா னவைகள் எல்லாம்
காவலர் கருத்தில் எண்ணிக்
 கருமம்அங் கியற்று வாரே. 23

'பெலத்தவர் தம்மைச் சேரார்
 பேசிய சமாதா னத்தால்
நலத்தக இருப்ப தில்லை ;
 நாம்இனிப் பொரவு மாட்டோம் ;
சலத்தர்சே வகமும் ஆகா ;
 சந்ததம் சிந்தை நீங்காக்
குலப்பகை நமக்கும் அந்தக்
 கூகைக்கும்,' என்று கூற 24

நலத்தக = நன்மையுண்டாக, சலத்தர் = பகைத்தவர்.

'என்னகா ரணத்தி னாலே
 இருவரும் பகைத்தது ?' என்ன,
'மன்னவா! காக்கை யார்தம்
 வாக்குத்தோ டத்தி னாலே

பன்னும்நம் குலங்கள் அந்தப்
பகையினுல் பட்ட பாடு
துன்னிய கழுதை வாக்குத்
தோடத்தால் பட்ட வாறே.' 25

**வாக்குத் தோடம் = பேச்சுக் குற்றம்.**

## 2. வாய்க் குற்றத்தால் கழுதை கெட்ட கதை

எனச்சிரஞ் சீவி கூற,
'யாதந்தக் கதை? சொல்,' என்ன,
'மனக்கப டான வண்ணுன்,
வளர்த்ததோர் கழுதை மேலே
கனப்பொதி ஏற்றி, வாவிக்
கரையிலே தள்ளி, பாசந்-
தனைக்கொடு கட்டிப் போட்டுத்
தப்புவன் பகலில் எல்லாம். 26

**வாவி = குளம், பாசம் = கயிறு.**

'கங்குலில் புலித்தோ லாலே
கழுதையை மறையப் போர்த்தே
அங்கொரு பயிர்ப்பு லத்தில்
அனுதினம் விடுவன் மேய;
தங்கிய செங்நெல் காப்பார்
தனிப்புலி எனப்ப யந்தே
அங்கொளித் தோடிப் போவார்;
அதுவும்மேய்ந் தோடிப் போமே. 27

**புலம் = வயல்.**

''புலிமிகப் பசித்த தேனும்,
புற்களைத் தின்னு தென்பார்;
கலியினிற் புதுமை தானே,
கபடமோ!' என்ன எண்ணி,

வலியவன் ஒருவன் கையில்
வல்லையந் தனைக்கைக் கொண்டு
பொலிதரு கம்ப ளத்தால்
பொதிந்துகொண்டு ஒளித்தி ருந்தே 28

**வல்லையம் = ஈட்டி, பொதிந்து = மூடி.**

'விரைவொடு கழுதை வந்த
வேளையில் எழுந்தி ருக்க,
கரம்அது கண்டு பெட்டைக்
கழுதையென் றெண்ணிக் கொண்டு
குரல்முழக் கிடவே, சத்தம்
குறித்து,'இவர் கழுதை யாரோ!
வரவர !' என்று சொல்லி,
வாட்டினன் ஈட்டி யாலே. 29

**கரம் = கழுதை, வர வர = வருக வருக.**

'கழுதைதன் வாக்கி னாலே
கடுங்கொலை உற்ற தந்தோ !
முழுவதும் பறவை கூடி
முன்னம்,'ஓர் கூகை தன்னைப்
பழுதறும் அரசன் ஆகப்
பட்டமே கட்டி வைத்துத்
தொழுதினி வாழ்வோம்,' என்று
சூழ்ந்துவந் திருக்கும் போது 30

'பலபல சாதி ஆன
பறவைகள் அனைத்தும் கூடி
நலம்அது தானே என்ன,
நனிமுது காகம் ஒன்று,
'குலம்இது நல்ல தல்ல ;
குணங்களும் தீக்கு ணங்கள் ;
நிலமிசைக் கோட்டான் என்று
நிசிசரம் எனுஞ்சொற் சொல்லும். 31

**நிசிகரம் = இரவிலே சஞ்சரிப்பது, கோட்டான்.**

'பகற்கெலாம் குருட்டுக் கண்கள் ;
பார்வைக்கும் பிடிப டாவாம் ;
முகத்திலே அழகும் இல்லை ;
மொழியிலும் மதுரம் இல்லை ;
அகத்தில்நல் லறிவும் இல்லை ;
ஆரும்இங் கிதைஎண் ணார்கள் ;
சகத்திலே இதன்பேர் சொன்னால்
சத்துரு மிகுதி ஆமே. 32

**மதுரம் = இனிமை, அகம் = மனம், சகம் = உலகம்.**

''பெரியவன் பெயரைச் சொன்னால்
பெரும்பகை தனையும் வென்றே
உரியதன் இனமும் தானும்
உய்யலாம் ; அதற்குச் சாட்சி,
அரியசந் திரன்பேர் சொல்லி
ஆனையின் படையை வென்றே
ஒருமுயல் இனங்க ளோடே
உகந்துவாழ்ந் திருந்த தொன்றே. 33

### 3. முயல் யானையை வென்ற கதை

" துன்னரும் அடவி தன்னில்
தும்பிகள் அனேகம் சூழப்
பன்னருஞ் ***சதுர தந்தன்***
எனும்இறை பண்பின் வாழ்நாள்
அன்னநாள் மழையில் லாமல்
அருஞ்சுனை எல்லாம் வற்ற
உண்ணும்நீர் எங்குண் டென்ன
ஒற்றர்பார்த் தோடி வந்தே 34

**தும்பி = யானை, இறை = அரசு, சுனை = நீர்நிலை, ஒற்றர் = உளவறிபவர்.**

'சந்திர சரசு தண்ணீர்
ததும்பிட நிற்கு மென்ன,
அந்தநற் சுனையை நாடி
ஆனைகள் அனைத்தும் செல்ல,
முந்திஅச் சுனையைச் சூழும்
முயல்சிலீ முகவேந் தஞ்சி,
மந்திரி விசயன் தன்னை
வரவழைத் துரைக்கும் அன்றே: 35

**சரசு = நீர் நிலை.**

'இற்றைநாள் வரையில் நாமும்
இனமும்இச் சுனையைத் தானே
சுற்றியிங் கிருந்தோம்; இந்தத்
தும்பிகள் வந்து புக்கால்
மற்றுநாம் இருக்க லாகா;
வனத்தில்வே றிடமும் இல்லை;
உற்றிவண் இருக்க வேறோர்
உபாயம்நீ நினைப்பாய்,' என்ன 36

**இற்றை = இன்று, புக்கால் = புகுந்தால்.**

'ஆனையை வெல்லு மாறிங்
கருமையோ? விடைதா,' என்று
ஞானமந் திரவி சாரம்
நனிபெறு விசயன் கூறிச்
சேனைகா வலனும் அந்தச்
சிலீமுகன் அனுப்ப ஏகிக்
கானில்வே ழக்கூட் டத்தைக்
கண்களாற் கண்டு நின்றே 37

**வேழம் = யானை.**

'நகைத்துடன் கொல்வர் துட்டர்
நாம்அவர் நடுவிற் பட்டால்;
வகைப்பட ஓர்பால் நின்றால்,
வந்தடித் திடுவர் மாறாய்;

மிகைப்பட அவர்கள் கையில்
வீறுடன் நாமும் சும்மா
அகப்படின் நம்மை அந்த
ஆனைதான் கொல்லும் அன்றே.' 38

வீறு = பெருமை, மிகை = குற்றம்.

'என்றுதன் மனத்தில் எண்ணி,
'இதன்கையில் அகப்ப டாமல்
நின்றுநாம் வெல்வோம்,' என்று
நினைத்தொரு குவட்டில் ஏறித்
துன்றிய களிற்று வேந்தைத்
'தும்பி! நீ சுகமோ?' என்ன,
வென்றிகொள் களிறு கண்டு
வியந்து,'நீ யாரே?' என்ன 39

குவடு = மேடு, களிற்று வேந்து = யானையரசு, வியந்து = ஆச்சரியப்பட்டு.

'இசைநிலா எறிக்கும் திங்கள்
ஏவிய தூதன்; என்பேர்
விசயன்என் பார்கள்; உன்பால்
விடுக்கவந் துற்றேன்,' என்ன,
அசைவிலா தாகி அந்த
ஆனையும் பயந்து நின்றே,
'விசய! நீ வந்த தென்ன?
விளம்பெ'பன, விளம்பும் அன்றே. 40

இசை = புகழ், நிலா எறிக்கும் = ஒளிவீசும், திங்கள் = சந்திரன்' விளம்புதல் = சொல்லுதல்.

'சந்திர சரசென் றெங்கள்
சசிபக வான்பே ராலே
இந்தநற் கான கத்தில்
இருஞ்சுனை ஒன்றுண் டாக்கி,

அந்தநற் சுனையில் எங்கள்
ஐயனும் தேவி மாரும்
முந்திய சலக்கி ரீடை
முயங்கியே பகலைக் கெல்லாம் 41

சசி பகவான் = சந்திர தேவன், இருஞ்சுனை = பெரிய நீர்நிலை, ஐயன் = தலைவன், தேவிமார் = மனைவியர், முந்திய = சிறந்த, சலக்கிரீடை = நீர் விளையாட்டு, முயங்கி = செய்து, பகலைக்கு = பகல் வேளைக்கு.

'தண்ணறுஞ் சுனைக்குக் காவல்
வைத்தெமைத் தாங்கள் போவர்;
விண்ணவர் உலகத் தாரும்
விரும்பினும் தொடப்ப டாது!
நண்ணிய சுனைநீர் உண்ண
நாடினை நீயென் றெங்கள்
அண்ணலார் சினந்துன் பக்கல்
அனுப்பினர் 'தடுத்தி' என்றே. 42

நாடினை = விரும்பினாய் அண்ணலார் = பெரியார், சினந்து = கோபித்து, உன் பக்கல் = உன்னிடம், தடுத்தி = தடுப்பாயாக.

'தூதுசொல் வார்இ யற்கை,
துங்கவாள் உருவிக் கொண்டு
கோதமாய்க் கேட்பார் முன்னும்
கூறுவ கூறல் வேண்டும்;
யாதவர் கூறி னாலும்
இகலினர் தூத ரேனும்
மூதறி வரசர் தூதர்
முனியினும் முனியார் அன்றே? 43

கோதம் = (குரோதம்) கோபம், கூறுவ = சொல்வன, இகலினர் = பகைத்தனர், மூதறிவு = பேரறிவு, முனிதல் = கோபித்தல்.

‘ தன்னுடல் வலியி னாலே
தான்பெரி யரைப்ப கைத்தால்,
பின் அவர் சினந்து வெல்லப்
பெற்றுயிர் இழத்தல் வேண்டும் ;
அன்னதை நினையா மற்பின்பு
அவர்பகை நினைத்தா ரேனும்
முன்னரே வணங்கிப் போற்றின்
முடிவுறார் ஆவி மன்னே. 44

**மன்னே = அசைச் சொல்,**

‘ மூவரில் முதல்வ ரான
முனைவனார் முடிமேல் வாழும்
தேவனைப் பகைத்த சிந்தைச்
செயலினை இனித்த டுத்தே
மேவுதண் சுனைமேல் வைத்த
வேட்கையை விடுத்திந் நேரம்
போவதே கருமம்,’ என்று
புத்திகள் பலவும் சொல்லி 45

**மூவர் = பிரம விஷ்ணு ருத்திரர், முனைவனார் = தேவர், வேட்கை = விருப்பம்.**

‘ இங்கிவை அனைத்தும் நானே
இயம்பினன் உன்னை வேண்டி ;
திங்கள் அம் பகவன் உன்மேல்
சினந்தது கொஞ்சம் அல்ல ;
அங்கவன் சினமும் நானே
ஆற்றுவன் அவன்பாற் சென்றே ;
வெங்களிற் றினத்தி னோடே
மீள்கநீ,’ என்று கூற 46

**பகவன் = கடவுள்.**

'தந்தியின் அரசும் அந்தச்
சசந்தனை நோக்கி, 'நீசொல்
சந்திரன் எனுந்தேவு இந்தத்
தடந்தனிற் குடைவ தெப்போது ?
அந்தவே ளையினில் வந்தங்கு
அவன் அடி போற்றி யானும்
உய்ந்துமீண் டேகு வேன்,' என்று
ஓதலும், முயல்நன் றென்று 47

தந்தி = யானை, சசம் = முயல், தேவு = கடவுள், குடைவது = மூழ்குவது.

'அன்றிரவு உடன்கொண் டேகி
அலைபுனல் தடத்தில் தோன்றும்
துன்றுவெண் மதியின் சாயை
சுட்டி, 'நீ காண்க,' என்ன,
நன்றதைக் கண்டு, திங்கள்
நாதனே என்றும், சூழ்வுற்று
ஒன்றிய உடுக்கள் அன்னோற்கு
உரியநன் மாதர் என்றும் 48

சாயை = நிழல், சுட்டி = குறித்து, சூழ்வுற்று = சூழ்ந்து, ஒன்றிய = கூடிய, உடுக்கள் = நட்சத்திரங்கள், உரிய நன்மாதர் = மனைவியர்.

'ஆனையும் நினைந்து நெஞ்சம்
அழிந்துபின் தெளிந்து நின்று,
'நான் இதை அறியேன்! எங்கள்
நாதனே! பொறுக்க!' என்று
வான்உயர் மதியை நோக்கி
வணங்கியே மீண்டு போகக்
கானுறும் முயல்கள் எல்லாம்
களித்துவாழ்ந் திருந்த அன்றே. 49

அழிந்து = வருந்தி.

'அப்படி யாக நாமும்
அரசன்பேர் பெரிய தாகில்
செப்பிய பகைவந் தாலும்
செயிக்கலாம்; அதுவும் இல்லை;
எப்படி அரசு நாட்ட
இயைந்துநீர் முகூர்த்தம் இட்டீர்?
தப்பிது நினைந்தீர்!' என்று
சாற்றியே பின்னும் சொல்லும்: 50

**முகூர்த்தம் = நல்ல நேரம்.**

***'பாவிகள் மோனர் போலும்***
***பலவிர தியர்கள் போலும்***
***ஓவறு சகாயர் போலும்***
***உறமுறைச் சுற்றம் போலும்***
***மேவுவர்; அவரைச் சேரின்***
***மேன்மைய ரேனும் உய்யார்,***
***பூவையும் முயலும் முன்ஓர்***
***பூனையைச் சேர்ந்த வாறே.'*** 51

***மோனர் = மௌனியர், விரதியர் = நோன்புடையவர், ஓவறு = நீங்காத, சகாயர் = உதவி செய்பவர், உறமுறை = உறவின் முறை, மேவுவர் = வருவர், உய்யார் = பிழையார், பூவை = மைனா.***

## 4. மைனாவும் முயலும் மோசம் போன கதை

என்ன,'அக் கதைஏ தென்றே
இனப்பற வைகள்வி னவ,
'முன்னம்ஓர் மரத்தின் மேலே
முயங்கிநான் இருக்கும் போது
தன்னிகர் இன்றி வாழும்
தனிமுயல் ஒன்று வந்தே
உன்னும்ஓர் பொந்திற் சேர்ந்தங்கு
உட்புகுந் திருந்த தன்றே. 52

'பூவையொன் றங்கு வந்து,'இப்
பொந்துநான் இருக்கும் வீடு;
நீவரு வானென் ?' என்ன,
'நிழலொடு தருக்கள், சாலை,
வாவி,நற் கூபம், செல்லும்
வழியினில் தண்ணீர்ப் பந்தல்,
சாவடி இவைகள் எல்லாம்
சகலர்க்கும் பொதுவே,' என்ன 53

வருவானென் = வருதல் என்ன ? சாலை = நடைவழி, வாவி = குளம், கூபம் = கிணறு, சாவடி = வழிப்போக்கர் தங்குமிடம்.

'அங்கவை இரண்டும் சண்டை
ஆகிப்பின், 'மத்தி யத்தர்
தங்களைக் கேட்போம்,' என்று
தனிமுயல் அழைத்துப் போக,
'இங்குநாம் வழக்கா வந்தோம்;
இருதலை வழக்கும் தீர்க்கும்
துங்கர்ஆர் ?' என்று பூவை
சொல்லவே, முயலும் சொல்லும் : 54

மத்தியத்தர் = நடுவு நிலைமையுடையவர், இருதலை = இரண்டு பக்கம், துங்கர் = தூயவர்.

'கருதிய யமுனை யாற்றங்-
கரையிலே தவத்தைப் பண்ணும்
பொருஇல்**கூர்ம் பல்லன்** என்னும்
பூனையார் சொல்வார்,' என்ன,
வெருவியே, 'பூனை பக்கல்
மேவிநாம் சொல்வ தெவ்வாறு ?
உரை,' எனத் 'தூர நின்றே
உரைப்பம்,' என் றழைத்துப் போக 55

இருடியார் = முனிவர், பரவினர் = துதித்தனர், யோகம் = ஆழ்ந்த தியான நிஷ்டை.

'இருவரும் போனார் ; அந்த
இருடியார் தவத்தைக் கண்டார் ;
'பெரியவர் இவர்தாம் நம்மைப்
பிடிப்பது செய்யார்,' என்று
கருதினர் ; பணிந்தெ ழுந்தார் ;
கைகளும் கட்டி நின்று
பரவினர் ; யோகம் நீங்கிப்
பார்த்தனர் பூனை யாரும். 56

'ஆரெவர் நீங்கள் ? நம்மை
அறிந்துநீர் இங்கு வந்த
காரியம் சொல்லும்,' என்று
கபடனார் உரைக்க, தங்கள்
பேரொடு வழக்கும் சொல்ல,
'பெருகிய மூப்பி னாலே
நீருரைப் பதுகே ளாது ;
நெருங்கிவந் துரைக்க,' என்ன 57

'சற்றிடம் கிட்டி வந்து
சாற்ற,'இம் மாற்றம் காதில்
உற்றது போலும் பாதி
உறுதது போலும் கேட்டோம் ;
மற்றினிப் பட்ச பாத
வழக்குநாம் உரைப்ப தில்லை ;
குற்றம்இங் கொருவர் மீதில்
கூறிடின் கோபம் ஆமே. 58

*மாற்றம் = சொல், பட்சபாதம் = ஒருதலைப் பக்கம்.*

'தருமமே விரும்பு வாரைத்
தருமமே விரும்பிக் காக்கும் ;
தருமமே இகழு வாரைத்
தருமமே இகழ்ந்து நிற்கும் ;

தருமமே மெய்யாய் நின்று
சகலமும் செய்த லாலே,
தருமமே சொல்வ தல்லால்
சற்றும்நாம் பொய்சொல் லோமே. 59

'எண்ணிய விரதம் எல்லாம்
இயற்றினம் ; இவைக்கு மேலாம்
புண்ணிய விரதம் ஒன்றும்,
பொய்சொலா விரதம் ஒன்றும்,
நண்ணிய உயிரைக் கொல்லா
நலந்தரு விரதம் ஒன்றும்
மண்ணினில் அனுட்டிப் போம்நாம் ;
வழக்கில்ஓ ரஞ்சொல் லோமே. 60

விரதம் = நோன்பு, இயற்றினம் = செய்தோம், அனுட்டிப் போம் = பின் பற்றுவோம், ஓரம் = ஒருதலைப் பக்கம்.

'கிட்டநீர் வந்து சொன்னால்
கேட்கும்நம் காது: நம்மை
விட்டுநீர் தூர நின்று
விளம்பினால் கேளாது,' என்று
துட்டனார் மாரீ சத்தால்
துலங்குகூர்ம் பல்லன் என்பேர்
இட்டமார்ச் சாலன் சொல்ல,
இவைதம துளத்தில் எண்ணி 61

மாரீசம் = வஞ்சகம், மார்ச்சாலன் = பூனை, என்பேர் = என்னும் பேரையுடைய.

'மெய்கள்போல் சொன்ன எல்லாம்
விசுவசித்து இரண்டும் செல்ல,
கைகளால் பிடித்துக் கண்டம்
கடித்திரத் தம்கு டித்தே

செய்கபு டான பூனை
　　செருக்கிஅங் கிருக்கச் சேர்ந்த
மொய்சிறைப் பூவை யோடே
　　முயலும்அங் கிறந்த அன்றே. 62

விசுவசித்தல் = விரும்புதல், கண்டம் = கழுத்து, மொய் சிறை = அடர்ந்த சிறகு, இறந்த = செத்தன.

'ஆகையால், புல்லி யோரை
　　அடைந்திடில் கெடுவ தல்லால்,
ஓகைகூர்ந் திருப்ப தில்லை ;
　　உலகினில் நீதி ஈதே ;
கூகையை அரசு நாட்டக்
　　குறிப்பது தீதே!' என்று
காகம்முன் எழுந்து போக,
　　கலைந்தது பறவைக் கூட்டம். 63

புல்லியோர் = அற்பர், ஓகை = மகிழ்ச்சி.

'அன்றுதொட் டின்று காறும்
　　அருங்கொடிக் குலத்தின் மேலே
துன்றிய கூகைக் கூட்டம்
　　தொடர்பகை வைத்த 'தென்ன,
மின்திகழ் அமைச்சன் சொல்லை
　　வினவிய மேக வண்ணன்,
'இன்றுநாம் அறிந்தோம் அந்த
　　இகல்,' என உளத்தில் உன்னி 64

துன்றிய = நெருங்கிய, மின் = ஒளி, உன்னி = நினைத்து, இகல் = பகை.

கூறிய நீதி யான
　　கொள்கையும் அறிந்து, நெஞ்சம்
தேறி,' நீ உரைத்த தெல்லாம்
　　தெளிந்தனன்,' எனக்கொண் டேகி

வேறும்ஓர் இடத்தில் வைகி,
'மேல்இனிச் செய்யு மாறு
கூறுக பெரியோய்!' என்ன,
குறித்துமங் திரியும் கூறும் : 65

'சந்திவிக் கிரகத் தாலே
தரியலர் இடத்திற் சென்று
வந்துநான் சேரு மட்டும்
மற்றுமோர் இடத்தி ருந்து
சிந்தையில் வைத்து வேறோர்
செவியுறு தடக்கில், இந்த
மந்திரம் பலிக்கும்,' என்று
வளம்படப் புகன்ற தன்றே. 66

தரியலர் = பகைவர், செவி = காது, மந்திரம் = ஆலோசனை.

ஆங்கது கேட்ட காக
அரசன்,' நாம் அவரை வெல்லப்
பாங்குள உபாயம் ஏது?
பகர்,' என வினவ லோடும்,
'தீங்குள வஞ்சர் மூவர்
சேர்ந்தொரு மறையோன் ஆட்டைத்
தாங்கொளப் புரிந்த மோசந்-
தனைச்செய்து வெல்வேன்,' என்றான். 67

## 5. அந்தணனை வஞ்சித்த கதை

'அக்கதை தெரியச் சொல்,' என்
றறைதலும், அமைச்சன் கூறும் :
'மிக்கதோர் வேள்விக் காக
வேதியன் வேற்றூர் சென்று,

தக்கநல் ஆடு கொண்டு,
தனதுதோள் மீது தாங்கித்
தொக்கஉள் மகிழ்வின் மீண்டு
தொல்பதிக் கேகும் போது 68

**வேள்வி = யாகம், வேதியன் = பார்ப்பான், தொல்பதி = பழையவூர்.**

"வஞ்சகர் மூவர் அந்த
மறையவன் ஆட்டை வௌவ
நெஞ்சினில் நினைந்தே அந்த
நெறியிடை ஒருவன் முன்போய்ச்
'செஞ்சுடர்த் தீவ ளர்க்கும்
செல்வ !நீ நாயைத் தோள்கொண்-
டஞ்சுதல் இன்றிச் செல்லல்
ஆகாத'தென்று கூற 69

**வௌவ = அபகரிக்க, நெறியிடை = வழியில், செஞ்சுடர்த்தீ = யாகம்.**

'துட்டனை நோக்கி, 'யாகப்
பசுவினைச் சுணங்கன் என்றாய் ;
கெட்டனை யோகண் ?' என்று
கிளத்தியே மறையோன் செல்ல,
இட்டனே போலி ரண்டாம்
இழிஞன் அங் கெய்தி, 'மேலோய் !
விட்டுயிர் போன கன்றை
மேற்கொளல் தகாத'தென் றோத 70

**சுணங்கன் = நாய், கிளத்தி = சொல்லி, இட்டன் = சிநேகிதன், இழிஞன் = தாழ்ந்தவன்.**

'பழுதறு மறையோன் அந்தப்-
படிஅவன் தனையும் வைது
வழிதனில் ஏக, மூன்றாம்
வஞ்சன்வந்து, 'அந்த ணாள !

எழுதரு நூல்கள் எல்லாம்
'இழிந்தசண் டாளம்' என்னும்
கழுதையைச் சுமந்து செல்லும்
காரியம் தகுமோ?' என்ருன். 71

**வைது = திட்டி, எழுதருநூல் = வேதம், சண்டாளம் = நீசத் தன்மை.**

'நாடியே மறையோன், 'இந்த
நரர்கள்வெவ் வேறு கூறக்
கூடிய உருவெவ் வேறு
கொண்டுதோன் றிடுத லாலே,
ஆடிராட் சதப்பி றப்போ!'
என்னும்ஐ யத்தால் விட்டான்,
நீடிய வஞ்சர் கொண்டார்,'
எனஉரை நிகழ்த்திற் றன்றே. 72

**நாடி = ஆலோசித்து, நரர்கள் = மனிதர்கள், ஐயம் = சந்தேகம்.**

மேகவண் ணனும்ம கிழ்ந்து
மிகுந்தகா கங்க ளோடே
ஏகிஓர் மலையின் உச்சி
ஏறிஅங் கிருக்க, அந்தக்
காகமந் திரியும், 'கூகைக்
கணத்தைநாம் சேரு மாறங்கு
ஏகுவோம்,' என்னும் முன்னே
இரவிபோய் மறைந்த தன்றே. 73

**இரவி = சூரியன்.**

மாலையம் பொழுதே கண்கள்
மறைந்தன சஞ்சீ விக்கு;
சாலவே கூகை மன்னன்
தன்படை முழுதும் கூட்டி

நாலுதிக் கிலும்வ ளைந்து,
'நம்முடைக் கண்ணைத் தப்பி
ஆலின்மேல் இருக்கும் காக்கை
அனைத்தையும் கொல்வோம்!' என்று 74

**சால = மிக, ஆல் = ஆலமரம்.**

வந்தது; காக்கை ஒன்றும்
மரத்தில்இல் லாமை யாலே
மந்திரி மாரை நோக்கி,
'வாயசக் கூட்ட மான
இந்தவன் பகையை வென்றோம்!
இனிநமக் கெதிரார்?' என்றே
சிந்தையில் மகிழ்ச்சி யோடே
செருக்கிஅங் கிருக்கும் போது 75

**வன்பகை = கொடிய பகை.**

கள்ளமாய் இதனை வெல்லக்
கருதிஅங் கிருக்கும் காகம்,
வெள்ளமாய்ப் பரவி வந்த
மேவலர் படையைக் கண்டு,
கொள்ளையாய் இறந்த காக்கைக்
குறையும்இன் றழியா முன்அப்-
புள்ளினுக் கரசன் தப்பிப்
போனதே போதும்!' என்று 76

**மேவலர் = பகைவர், கொள்ளை = மிகுதி, புள் = பறவை.**

சிறகுகள் ஒடிந்தி ரத்தம்
சிதறமெய் சோர்ந்து, சாவு
குறுகின காலம் போலக்
கொடிப்பிணத் திரளுக் குள்ளே

மறைபடக் கிடந்து, நெஞ்சில்
வருத்தமோ டவத்தை யாகி
முறையிடு வாரே போல
மொழிகளும் தேய்ந்து கத்த 77

கொடிப்பிணம் = காக்கைப் பிணம், திரள் = கூட்டம், அவத்தை = துன்பம்.

கூகைமன் னவனும் அந்தக்
குரல்செவி உறுத லாலே,
'காகம்ஏ தோகி டந்து
கதறுகின் றதுபார் !' என்ன,
ஏகியே தூதன் பார்த்தங்-
கெய்துகாக் கையைக்கொ ணர்ந்து
வாகுமன் னவன்முன் விட்டான் ;
மன்னன்,'நீ யாரை ?' என்ன 78

வாகு = வலிமை, யாரை = யார்.

## தரவு கொச்சகக் கலிப்பா

'என்னுடைப்பேர் சிரஞ்சீவி
என்பார்கள் ; அருள்மேக
வன்னனுடை முப்பாட்டன்
தலைமுறையில் வந்தவன்;நான்
சொன்னபுத்தி அருமையினல்
சுகமாக வீற்றிருந்தான் ;
அன்னவன்வா யிலிற்கொடிய
அமைச்சர்வந்து தலைப்பட்டார். 79

வீற்றிருந்தான் = சிறந்திருந்தான், தலைப்பட்டார் = கூடினர்.

'அங்கவர்கள் துன்மார்க்கம்
அரசனுக்குப் போதித்தே
உங்கள்குலத் தோடுபொர
ஒருமித்தார் ; இதையறிந்தே,

‘ இங்கிதுநீர் நினைந்தீரேல்
இடர்உறுவீர்!’ எனமறுத்தேன் ;
தங்கள்மத வலியாலே
தாம்பொருத வந்தார்கள். 80

பொர = சண்டையிட, ஒருமித்தார் = சம்மதித்தார், பொருத = போர் செய்ய.

‘ இப்படியே சிலபகலில்
இகல்புரிந்து வந்தென்னை,
‘ எப்படிநீ புத்திசொன்னாய் ?’
என்பார்கள் ; ‘ஓரிரவில்
தப்பறவே வளைந்துகொண்டு
சாடுவார் அவர்!’ என்றேன் ;
அப்படியே நென்னல்இரா
அடித்திழுத்துப் போட்டீரே ! 81

சாடுவார் = கொல்லுவார், நென்னல் = நேற்று.

‘ கால்வேறும் தலைவேறும்
கருஞ்சிறகு வெவ்வேறும்
வால்வேறும் குடர்வேறும்
வாய்வேறும் சுவல்வேறும்
தோல்வேறும் துடைவேறும்
துண்டாகத் துணிந்திறந்தார் !
நால்வேறு மந்திரியும்
நானும்அர சனும்பிழைத்தோம். 82

குடர் = குடல், சுவல் = முதுகு.

‘ படுகளம்சோ தித்தார்கள் ;
பட்டபிணத் திரளின்கீழ்
நடுநடுங்கி மறைகிடந்து
நாற்பதுகா கம்பிழைத்த ;

கொடிஅரசன் இவையெல்லாம்
கூட்டி,'இனி நாம்செய்யும்
அடைவுசொலும்,' என்றுதன
தமைச்சர்களைக் கேட்டானே. 83

**படுகளம்** = பிணக்களம், **பட்ட** = அழிந்த, **பிழைத்த** = **பிழைத்தன**, **கொடி அரசன்** = காக்கையரசன், **அடைவு** = முறை.

" பகற்பொழுதில் வளைந்துகொண்டு
பழிவாங்கு வோம்!' என்றும்,
' அகப்படுமோ நமக்கு?' என்றும்,
' அப்புறம்போ வோம்,' என்றும்,
' விகற்பம்நமக் குள்ளிருக்க
வெல்லும்வகை ஏதெ' ன்றும்;
வகைப்படநால் வரும்சொன்னார்;
மன்னவனும் கேட்டிருந்தான். 84

**விகற்பம்** = வேறுபாடு.

' இன்னம்உமக் கறிவிலேயோ?
இகல்ஒழிந்து நாம்கூகை
மன்னவனைப் பணிந்திருந்து
வாழ்வதுகா ரியம்,' என்றேன்;
சொன்னவுடன் எனையடித்துத்
துவைத்திழுத்துப் போட்டந்த
மன்னவனும் தாங்களுமாய்
மறைந்தெழுந்து போனாரே! 85

**இகல்** = பகை.

' 'செத்ததெ' ன்று போட்டுவைத்துச்
சென்றார்கள்; நான்பிழைத்தேன்!
உத்தமனே! நின்பதத்தில்
ஓடிவந்து விழஎன்றால்,

மெத்தஅடித் ததனலே
மெலிந்துகிடந் தேன்;இனியுன்
சித்தம்என்பாக் கியம்!'என்னச்
சிரஞ்சீவி வணங்கலுமே 86

மனமிரங்கி அரசனும்தன்
மந்திரிகள் தமைவினவி,
'சினம்மிகுந்த புலிவலையில்
சிக்கில்அதை விடலாமோ?'
எனமொழிந்தார்; இவர்தம்மில்
குருதிக்கண் ணனும்எண்ணி,
'தனையடைந்தார் தமைக்கோறல்
தருமம்அல,' என்றனே. 87

தீத்தொழில்இல் கொடுங்கண்ணன்
தனைவினவத் 'தெவ்வர்வரின்
மூத்தவர்கள் மனுநீதி
முறையுரைத்த விதிப்படியே
காத்தருளக் கடவதல்லால்,
கடுங்கொலைசெய் தவர்தமையும்
நீத்தவரை யும்காணேன்
நீள்நிலத்தில்!' என்றனே. 88

*தெவ்வர் = பகைவர், நீத்தவர் = விட்டவர்.*

மெய்த்தகொள்ளிக் கண்ணன் எனும்
மந்திரியை வினவலுமே,
'சத்துருவா னலும்,வந்து
தனக்கினிமை உரைத்தடைந்தால்,
உத்தமரா னவர்,வரிசை
உதவி,அவர் உயிர்காப்பார்;
மெய்த்தபுக ழோடுலகில்
மேவிமிக வாழ்வாரே. 89

## 6. கோமுட்டிக்குக் கள்ளன் உதவி செய்த கதை

'திருடவந்த கள்ளனுக்குத்
திரவியவான் கோமுட்டி
கருணையுடன் உபசரிக்கக்
கள்ளனும்ஓர் உதவிசெய்த-
தொருகதையுண் டென,'அக்கதை
உரை,' என்ன, 'ஒருமையுடன்
பெருகுநிதி படைத்துளகு-
பேரமித்ரன் எனும்பெயரோன் 90

திரவியவான் = செல்வன்

'வெண்ணரையன் திரைகவுளன்
விதிர்உடம்பன் ஒருநோக்கன்
பெண்ணமுத மடவார்க்குப்
பிரியமிலா முதிர்மூப்பன்
வண்ணமனை யாள்ஒருத்தி
மாரன்இர தியைப்போல்வாள்
நண்ணிலள்அங் கவனை,நெஞ்சில்
நாடிஅவள் தீண்டாளே. 91

திரை கவுளன் = சுருங்கிய தாடையுடையவன், விதிர் = நடுங்குகின்ற, ஒரு நோக்கன் = ஒற்றைக் கண்ணன், மூப்பன் = கிழவன், வண்ணம் = அழகு, மாரன் இரதி = மன்மதன் மனைவியான இரதி, நாடி = விரும்பி.

'எள்ளளவும் அவன்மீதில்
இச்சையிலாள், ஓரிரவில்
கள்ளன்வர நடுநடுங்கிக்
கணவனைப்போய்த் தழுவுதலும்,
உள்ளம்மகிழ்ந்து, 'உன்னுலே
உற்றஇன்பம் பெற்றனன்!என்
வெள்ளநிதி மிகவுள;நீ
வேண்டுவகொண் டே'கென்றான். 92

இச்சை = விருப்பம், வெள்ள நிதி = பெருஞ் செல்வம், வேண்டுவ = விரும்புவனவற்றை.

'கள்ளனும்அங் குளம்மகிழ்ந்து,
'கன்னிஉனைத் தழுவினதே
வெள்ளநிதி இன்றெனக்கு
வீட்டிலே விழுந்ததொக்கும்;
உள்ளம்மகிழ்ந் தெந்நாளும்
உனைஇவன்வந் தணையாமல்
எள்ளிஇருந் தால்வருவேன்;
எனைநினைப்பாய்,' எனப்போனான். 93

எள்ளி = இகழ்ந்து.

'அன்றளவு முதலாக
அவள்பயந்து நடுங்கிமனம்
ஒன்றிஅவ னொடுகூடி
உறங்கஅவன் சுகமடைந்தான்,'
என்றுகதை சொலி,'இவனுக்கு
இதஞ்செய்தால் இதம்பெறலாம்;
கொன்றதனால் ஏதுபலன்?
கொடும்பழியாம்,' என்றதுவே. 94

மனம் ஒன்றி = மனமிசைந்து, இதம் = நன்மை.

தகவுபெறு குரூரநா-
சன்றனை,'நீ சொல்,'என்ன,
'இகலினரா யினும்அடைந்தே
இதம்சொல்வார் தமைக்காப்பார்
நிகரில்பிரா மணப்பேய்க்கும்
நெடுஞ்சோரன் றனக்கும்முன்னாள்
அகம்மகிழ்ந்து வெகுமானம்
அந்தணன்செய் தான்,'எனவே 95

தகவு = பெருமை, இகலினர் = பகைத்தனர், வெகுமானம் = பரிசு.

'தெள்ளுகதை ஏதெ'தன,'ஓர்
திருநகரில் ஒருமறையோன்
உள்ளம்மகிழ் வொடுவளர்த்த
உயர்காம தேனுவினைக்
கள்ளன்ஒரு வன்கருதி,
'களவுகொள்வோம்,' எனவந்த
நள்ளிருளில் ஒருபிரம
ராட்சசனும் கண்டானே. 96

**தெள்ளு கதை=சிறந்த கதை, காமதேனு=பசு, பிரம ராட்சசன்=பிராமணப்பேய்.**

'கண்டவன்,'நீ யார் ?'என்ன,
கள்ளனும்,'நீ யார் ?'என்ன,
'எண்டிசைஎண் ணும்பிரம
ராட்சசன்நான்,' எனஅவனும்,
'மண்டுபொருள் கன்னமிடும்
மாசோரன் நான்,'என்றான் ;
என்றலும்,'நல் லிரவிருளில்
இங்குவந்த தேதெ'தன்றான். 97

**எண்டிசை=எட்டுத்திக்கில் உள்ளவர், மண்டுபொருள்=மிகு செல்வம், கன்னமிடும்=திருடும், மாசோரன்=பெருந்திருடன், ஏது=என்ன காரணம் ?**

'சோரனும்,'நீ வந்ததென்ன ?
சொல்,'எனவே, 'இந்தமனை
ஆரணவே தியன்உடலை
அருந்தவந்தேன்,' என,அரக்கர்
தீரனும்,'இங் கிவன்பசுவைத்
திருடவந்தேன்,' எனஇரண்டு
பேரும்ஒரு மித்துடனே
பெரியவன்முன் றிலைஅடைந்தார். 98

**ஆரணம்=வேதம், அருந்த=தின்ன, அரக்கர் தீரன்= இராட்சசரைப் போன்ற தைரியமுடையவன், ஒருமித்து=சம் மதித்து, பெரியவன்=பிராமணன், முன்றில்=வீட்டு வாயில்.**

'வந்தஇரு வோரும்அவன்
வாயிலிலே நின்றுகொண்டே,
'அந்தணன் ஆ ருயிரைமுந்தி
அருந்திடுவேன் நான்!'என்றும்,
'பந்தமுடன் நிற்கும்இந்தப்
பசுவைமுந்திக் கவர்வன்!'என்றும்
இந்தவகை தங்களிலே
இகலும்ஒலி கேட்டலுமே 99

**ஆருயிர்=அருமையான உயிர், பந்தம்=கட்டு, கவர்வன்= திருடுவேன், இகலும்=சண்டையிடும்.**

'மிக்கமறை யோனும்இவர்
விவகாரந் தனையறிந்தே
மக்களுந்தா னுங்கூடி
வலியதடி கைக்கொண்டு,
'புக்கஇரு வோர்தமையும்
பொன்றஅடிப் போம்!'என்று
சிக்கெனவா யிலின்கதவைத்
திறந்துபுறப் பட்டாரே. 100

**விவகாரம்=வழக்கு, புக்க=புகுந்த, பொன்ற=இறக்கும்படி, சிக்கென=விரைவாக, புறப்பட்டார்=வெளி வந்தார்.**

'மறையவனே! நின்உயிரை
வதைக்கவந்தான் இவன்!'என்றும்,
'குறைவறநின் பசுக்களவு
கொள்ளவந்தான் இவன்!'என்றும்

முறைமுறையாய் இருவரிவர்
மொழிந்துநின்றூர் ; அதுகண்டு
நிறைசுருதி மாதவனும்
நெஞ்சுகளி கூர்ந்தனனே. 101

சுருதி = வேதம், மாதவன் = பிராமணன்.

'அன்றுமுதல் இருவோரும்
அந்தணனும் உறவாகித்
தன்துணைவர் தமைப்போலச்
சார்ந்துநட்புற் றிருந்தார்கள் ;
இன்றிவனுக் குபகாரம்
யாமும்செய் தோமாகில்,
நன்றியல்லால் தீதன்று ;
நமக்கிவனும் துணை,'என்ருன். 102

இவையுரைத்து, 'மன்னவ!கேள் :
'இடர்உழந்து தனையடைந்த
சவிமாடப் புருவுக்காத்
தன்தசையைத் துலையிட்டான்
சிவிராசன்,' எனஉலகோர்
செப்புவதும் அறியாயோ ?
தவருமல் 'சரணம்'எனில்,
தற்காத்தல் நெறிஎன்றே 103

உழந்து = அனுபவித்து, சவிமாடப்புரு = அழகிய மாடப்புரு, தசை = சதை, துலையிட்டான் = தராசில் வைத்தான், சிவிராசன் = சிபிசக்கரவர்த்தி, சரணம் = அடைக்கலம், தற்காத்தல் = அவனைக் காப்பது, நெறி = விதி.

## 7. தச்சன் கதை

'தச்சன்ஒரு வன்மனைவி
தன்னெடுசோ ரனையும்எடுத்து
உச்சிதமாத் தலையினில்வைத்
துவகையொடு கூத்தாடி

மெச்சியதோர் கதை,' என, ' நீ
விளம்புக அக் கதை,' என்ன,
' மச்சுலவும் மாளிகைசூழ்
வளநகர்ஒன் றதிலொருவன் 104

உச்சிதமா = மேன்மையாக, மச்சு = தளம்.

' பேரிரத காரன் எனும்
பெருந்தச்சன்; அவன்தேவி
சோரன்ஒரு வனைக்கூடிச்
சுகங்காணத் தச்சன்வந்து
சேரில்அவன் மீதில்அன்பு
சிறிதும்இலாள்; ' ஈதென்ன
காரணம்?' என் றுங்கவன்உட்
கருதிவிசா ரித்திருந்தே 105

இரதகாரன் = தேர் செய்பவன், தேவி = மனைவி, சோரன் = கள்ளப் புருடன், விசாரித்து = ஆராய்ந்து.

' வேறொருவன் தோள்நசையை
விரும்பிநமைக் கண்டளவில்
சீறுதலால், சுரதநலம்
சிறிதும்இலை!' எனத்தச்சன்
தேறி, அதைச் சோதிக்கச்
சிந்தித்தே ஓரூர்க்குச்
சேறல்எனப் புறப்பட்டுச்
சென்றிரவில் மீண்டனனே. 106

நசையை = விருப்பத்தை, சீறுதலால் = கோபிப்பதால், சுரத நலம் = புணர்ச்சி இன்பம், தேறி = அறிந்து, சேறல் என = போவது போல.

' கட்டிலின்கீழ் ஒளித்திருந்தான்;
காரிகையும் சோரனுக்காள்
விட்டவனை அழைப்பித்து
மேவுதலும் அவன்கால்கள்

பட்டனதன் உடல்மீதில் ;
பாவைஅது கண்டஞ்சி
நெட்டுயிர்த்து விசாரமிட,
நேரிழைதன் முகம்நோக்கி 107

காரிகை = அழகி, அழைப்பித்து = அழைத்து வரச்செய்து, மேவுதலும் = சேர்ந்ததும், பாவை = பெண், விசாரமிட = கவலைப் பட, நேரிழை = பெண்.

'உனக்குமனம் என்மேலோ,
உன்கணவன் றன்மேலோ ?'
எனக்கழற, அவள்முனிந்தே,
'எவ்வனதோ டத்தால்என்
மனத்தையின்று பெண்புத்தி
மயக்கிவந்த தொருபாவம் !
எனக்கவனே தெய்வம் ! அவன்
இறக்கில்இறப் பேன் !' என்ருள். 108

கழற = சொல்ல, முனிந்து = கோபித்து, எவ்வன தோடம் = இளமைக் குற்றம்.

'அந்தமொழி கேட்டலுமே
அகமகிழ்ந்து ரதகாரன்
முந்தினைத் துத்தனது
முன் அவனைக் கூடினதும்
சிந்தையில்எண் ணுமல், அவர்
சேரும்மஞ்சத் துடனெடுத்து
வந்துதலை மீதுபட
வைத்துக்கொண் டாடினனே. 109

மஞ்சம் = கட்டில்.

'கண்ணுர அவள்இயற்றும்
கருமமெலாம் கண்டும், அதை
எண்ணுமல் ஓர்வார்த்தை
இதஞ்சொன்னுள் என்றலவோ

பண்ஆரும் தேர்த்தச்சன்
பரிவுற்ருன் ?—இவன்மனத்தில்
நண்ணுரைப் பகைத்துவந்தான்
நமக்கிவனே உறவெ'வன்ருன். 110

இவன் = இச்சிரஞ்சீவி, நண்ணுரை = பகைவரை.

என்றுசொலப் பிராகார
நாசனைப்பார்த் 'தினிஉரைப்பாய்
நன்றுனது கருத்தை,' என,
'நல்லவர்போல் எய்திடினும்,
துன்றுபகை உற்றவர்க்கு
ரகசியந்தோன் ருதடக்கல்
ஒன்றுதிறம் செய்கை,' என்றே
ஒருகதைநன் குரைசெய்யும் : 111

பிராகார நாசன் = மதிலை அழிப்பவன், எய்திடினும் = வந்து சேர்ந்தாலும், துன்று பகை = பொருந்திய பகை, ஒன்று திறல் செய்கை = பொருந்தும் ஆற்றல் வாய்ந்த தொழில்.

## 8. இரகசியம் விட்டுப் பாம்புகள் இறந்த கதை

'விண்டுவன்மன் என்னும்ஒரு
வேந்தன்வயிற் றுறும்நோயால்
கொண்டுதுயர் உடல்மெலிந்தே
யாத்திரையில் குறிப்பினைவைத்து
எண்டிசையி னுந்திரிந்தே
எம்பிரான் கோயில்ஒன்று
கண்டதனில் வசித்திட்டான்
கடவுள்அடி உளங்கொண்டே. 112

விண்டு வன்மன் = விஷ்ணுவர்மன், கொண்டு துயர் = துயர் கொண்டு, நலிந்து = மெலிந்து, யாத்திரை = பிரயாணம், எம்பிரான் = கடவுள்.

'அப்பதியில் இருந்துலகை
அளிக்கும்இறை பலிஎன்பான்
ஒப்பறுதன் புத்திரியர்
இருவருள்அங் கொருத்திதனைச்
செப்பியதீ துளத்தெண்ணிச்
செயிர்த்தந்த விண்டுவன்மன்
கைப்படநீர் விடுத்தளித்தான் ;
காரிகைகற் புடைமையினல் 113

பதி = நகரம், அளிக்கும் = பாதுகாக்கும், இறை = அரசன், செப்பிய தீது = 'நீர்நல்ல உணவுகளை உண்பீர்' என்று சொல்லிய தீமையை, செயிர்த்து = கோபித்து, கைப்பட நீர் விடுத்து அளித்தான் = தாரை வார்த்து மணம் செய்து கொடுத்தான், காரிகை = அழகி, கற்புடைமையினல் = கற்புடையவளாயிருந்ததால்.

'கணவனே தெய்வம்எனக்
கருதிஅவன் றனக்கிசைந்த
பணிபுரிந்து பரதேசம்
படரும்போ தொருநாள்இன்
உணவடலுக் குபகரணம்
ஊர்புகுந்து கொளப்போனள் ,
பிணியுடையான் கண்ணுறங்கப்
பெரும்பாம்பொன் றங்கொலிக்க 114

பணி = தொண்டு, பரதேசம் = அயலூர், படரும் போது = செல்லும் போது, இன் உணவு = இனிய சாப்பாடு, அடலுக்கு = சமைப்பதற்கு, உபகரணம் = துணைப்பொருள்கள், பிணி = நோய்.

'அவ்வொலிகேட் டவன்வயிற்றின்
அரவும்ஒலித் திட,இரண்டும்
வெவ்வியவா தம்புரிந்து
மேவுதலும் அப்போது
நவ்விவிழி இவன்துணைவி
நண்ணிஒளித் ததுகேட்கக்

கவ்விவயிற் றரவினொடு
புற்றரவு கழறுமால்: 115

வெவ்விய வாதம் = கடுமையான தர்க்கம், மேவுதலும் = தங்கியிருக்கவும், நவ்வி விழி = மான்கண் போலும் கண்களையுடையவள், துணைவி = மனைவி, நண்ணி = அடைந்து, வயிற்றரவு = நோயாளியின் வயிற்றில் வாழும் பாம்பு, புற்றரவு = புற்றில் வாழும் பாம்பு, கழறும் = சொல்லும், ஆல் = அசை.

'பாவி! நீ இவ்வரச
புத்திரனைப் படர்செய்யும்
தீவினை என்?' என, 'உணவு
செறிந்தகுடந் தனிற்சேர்ந்த
தாவறும்என் றனைநிந்தித்
திடுவதென்?' என் றதுசாற்ற,
ஓவறுபுற் றரவம், 'அவன்
கடுகுதின்றால் ஒழிகுவைநீ! 116

படர் = துன்பம், தீவினை = பாவம், உணவு செறிந்த குடம் = வயிறு, தாவறும் = குற்றம் அற்ற, சாற்ற = சொல்ல, ஓவறு = சலிப்பற்ற, ஒழிகுவாய் = சாவாய்.

'சுகமடைவான் அரசன்,' என்று
சொல்ல, வயிற் றரவுவெகுண்டு,
'உகுவைநீ வெந்நீரால்!'
எனவுரைக்க, இவ்விரண்டும்
பகர்தருநன் மொழிகேட்ட
பாவையும்அவ் வாறுசெய,
மிகைசெயும்அவ் வரவிறக்க
வேந்தனும்அந் நோய்தீர்ந்தே 117

வெகுண்டு = கோபித்து, உகுவை = இறப்பாய், நன்மொழி = நன்மை செய்யும் சொல், பாவை = பெண், மிகை = குற்றம்.

'தன்னகரந் தனிற்சேர்ந்து
தகவுபெறு மனைவியொடும்
இந்நிலத்தை ஆண்டிருந்தான் ;
ஆதலினால், இரகசியம்
அன்னியர்தேர்ந் திடப்புகலின்
அதனாலும் துன்பம்உறும்,'
என்னஇசைத் தொருவேடன்
கதைபின்னும் இயம்புமால் : 118

**தேர்ந்திடப் புகலின் = அறியும்படி சொன்னால், துன்பம் உறும் = துன்பம் வந்து சேரும், இசைத்து = சொல்லி, இயம்பும் = சொல்லும், ஆல் = அசை.**

## 9. வேடன் கதை

'வனமொன்றில் ஒருவேடன்
வளர்குருவிக் கூட்டினொடும்
இனம்ஒன்று வேட்டைகரு
விகளும்எடுத் தேதிரிய,
கனம்இருண்டு மழைபெய்யக்
காற்றெழும்ப அவன்நடுங்கி
மனம்மருண்டோர் மரத்தின்கீழ்
வந்திருந்தான் ; அப்போது 119

**வளர் குருவிக் கூடு = குருவி வளர் கூடு, இனம் ஒன்று வேட்டை = தன் சாதிக்குப் பொருந்திய வேட்டை, கனம் = மேகம், மருண்டு = மயங்கி.**

'தங்குமதன் மேலிருந்த
புருவொன்று தன்பேட்டை
'எங்ககன்ற தோ!வனத்தில்
யாரேனும் பிடித்தாரோ !

மங்கியதோ !' எனப்புகல,
அதுகேட்டு வனசரன்றன்
அங்கையுறு கூட்டின்உற்ற
பெண்புரு அழுதுசொலும் : 120

**பேட்டை = பெண் புருவைக் குறித்து, மங்கியதோ = இறந்ததோ, வனசரன் = வேடன், அங்கை = கையில்.**

'முன்வினையால் இதுபெற்றேன் !
ஆயினும்,நின் முனம்அடைந்த
இன்னவனுக் குபசாரம்
புரி,' எனலும், எரிகொளுவி,
அன்னவனை அழைத்துடலின்
குளிர்போக்கி, 'ஆகாரம்
என்னைநீ அருந்'தென்று
வீழ்ந்திறக்க இவன்நோக்கி 121

**முன் வினை = முன் பிறப்பில் செய்த தீவினை, இன்னவனுக்கு = இவனுக்கு, எரி கொளுவி = தீ மூட்டி.**

'அன்பினால் நம்பொருட்டு
வீழ்ந்தஇதை அருந்தியிடில்
துன்பம்வரும் !' எனப்பேட்டை
விடுத்திடலும், சூழ்ந்ததுவும்
தன்புருடன் பிரிவதனால்
வீழ்ந்திறக்க, தகும்இரண்டும்
இன்பமுறு தெய்வவுரு
எய்திவான் உலகடைந்த. 122

**அருந்தியிடில் = சாப்பிட்டால், சூழ்ந்து = சிந்தித்து, தகும் இரண்டும் = சிறந்த இரு புருக்களும், எய்தி = அடைந்து, அடைந்த = சேர்ந்தன.**

'இரக்கமொடு வேடுவனும்
எரிவீழ்ந்து கதியடைந்தான் ;
தரைக்குள்உளம் தளர்ந்துசர
ணார்த்தியென்று சார்ந்தார்க்கும்

புரக்கஅருள் செயின்தாமே
பொன்றவரி னும்வரும்,' என்று
உரைத்துப்பொன் எச்சமிடும்
பறவைக்கதை ஓதுமால்: 123

எரி = தீ, கதி = மோட்சம், சரணார்த்தி = அடைக்கலம் தேடுபவன், புரக்க = பாதுகாக்க, பொன்ற = இறக்க, ஓதும் = சொல்லும், ஆல் = அசை.

## 10. பொன் எச்சமிடும் பறவைக் கதை

'பொன்னாக எச்சமிடும்
ஒருபறவை பொருப்பின்மேல்
பன்னாளும் உறக்கண்டு
பயில்வேடன் அதைப்பிடித்து,
'மன்னவான் இதைக்காணின்
வாங்குவன்என் உயிரும்,' எனப்
பின்னாய்ந்து, வேந்தனுக்கிப்
பெருமைசொலி அளித்தனனால். 124

எச்சம் இடும் = மலம் கழிக்கும், பொருப்பு = மலை, பன்னாள் = (பல் + நாள்) பல நாள், உற = தங்க, பயில் வேடன் = பழகிய வேடன், மன்னவான் = அரசனாவான், ஆய்ந்து = ஆராய்ந்து, அளித்தனன் = கொடுத்தனன், ஆல் = அசை.

'அவன்மணிக்கூண் டிடைவளர்க்க,
அமைச்சனும்அங் கதுநோக்கிப்
'புவியில்அசம் பாவிதமாம்
பொருள்கேட்டிப் படிபுரிதல்
நவையுறும்; விட் டிடுதி,' என
நயந்துரைக்க, நரபதியும்
கவலையுற விடுத்திட்டான்;
நீங்கியதக் கடும்புள்ளும். 125

மணிக்கூண்டிடை = அழகிய கூண்டில், அமைச்சன் = மந்திரி. புவி = பூமி, அசம்பாவிதம் = நடவாத செயல், நவையுறும் = குற்ற

மாகும், நயந்து = விரும்பி, நரபதி = அரசன், கவலையுற = பின்னே வருத்தமுண்டாக, கடும்புள் = விரைவாகப் பறக்கும் பறவை.

'புரவலன் றன் மனைச்சிகரம்
பொருந்தி,'நான் முதல்மூடன் ;
விரவும்இரண் டாம்மூடன்
வில்வேடன் ; இவ்வரசன்
மருவும்மூன் றும்மூடன்
மந்திரிநான் காம்மூடன் ;
சரதம்,' என உரைத்தந்த
தனிப்பறவை நீங்கியதே. 126

புரவலன் = அரசன், மனைச்சிகரம் = வீட்டுக் கூரை, விரவும் = சேரும், மருவும் = பொருந்தும், சரதம் = உண்மை, தனிப் பறவை = ஒப்பற்ற பட்சி.

'ஆதலால், பகைவரென
அறிந்தபின்னே நம்புவோன்
சாதல்ஆ கும்இகழ்வு
தான்அடைவான்,' என்றுரைப்ப,
ஈதெலாம் உளங்கொள்ளா
தரசனிருந் திடநோக்கித்
தீதிலா அக்கூகை
சிந்தைதிகைத் தேயுரைக்கும் ; 127

உளம் கொள்ளாது = மனத்தில் வாங்கிக்கொள்ளாமல், தீது இலா = குற்றமில்லாத, சிந்தை திகைத்து = மனம் திடுக்கிட்டு.

'இற்றைநாள் காறும்இந்த
அரசனிடத் தினிதிருந்தேன் ;
பற்றிஇனி ஒருமலையில்
பயின்றிருத்தல் வேண்டுமென்றேன் ;
'மற்றதுஏன்?' எனிற்குகையைக்
கூப்பிட்டோர் வன்னரிதான்

பெற்றசுகம் போல்,' என்ன,
'அக்கதைஎன்? பேசெ'சன லும் 128

இற்றை = இன்று, பற்றி = இடம் பிடித்து, பயின்றிருத்தல் = வாழ்ந்திருப்பதை, வேண்டுகின்றேன் = விரும்புகின்றேன், வன்னரி = (வல் + நரி) தந்திரத்தில் வல்ல நரி, பேசு = சொல்.

## 11. நரி சிங்கத்தின் மோசம் அறிந்த கதை

'இரைதேடும் ஒருசிங்கம்,
'இக்குகையில் ஒளித்திருப்பின்,
விரைவினில்வந் தொடுங்கும்; அது
தனையுண்டு மிகுபசிதீர்ந்து
உரம்அடைவோம்,' எனக்கருதி
உற்றிடலும், நரிவந்து
பரவுசிங்கக் காற்சுவடு
பார்த்துச்சோ திக்களண்ணி 129

உரம் = வலிமை, காற்சுவடு = காலடி அடையாளம்.

'குகையதனை இருமுறைதான்
கூப்பிடலும் அதுபேசா
வகைகண்டு, 'நமக்கஞ்சி
வாய்விடா திருந்தெ'தனப்
பகையுறுகே சரிநினைந்து
பன்னுகுரல் வேருகத்
தகையினெடும் 'ஏன்?' என்னச்
சம்புவும்அங் குள்நடுங்கி 130

வாய் விடாது = பேசாமல், கேசரி = சிங்கம், பன்னு குரல் = பேசுகின்ற குரல் ஒலி, தகை = பெருமை, சம்பு = நரி, உள் = மனம்.

"'அப்பா! நான் பிழைத்தேன்!' என்று
அகன்ருேடிற் றுதலினுல்,
எப்பாலர் ஆயினும்நன்
காராய்தல் இயல்பெ'பன்னத்

துப்பான மித்திரர்க்குச்
சொல்லிஐந்தாம் மந்திரியும்
'இப்பாரில் உறுந்தேயம்
நோக்குவன்,' என் றேகினனே. 131

**எப்பாலர் = எவ்வகையினர், இயல்பு = முறை, துப்பான = ஆதரவான, மித்திரர் = சினேகிதர், தேயம் = இடம்.**

அரசன் அவன் போனபின்னே
அடைந்தகா கத்தினையே
'வருக' என அழைத்துவெகு
மானங்கள் மிகச்செய்து,
'திரமுடைய மந்திரிநீ
சிரஞ்சீவி!' என்றுபல
கருமமும்அன் னவன்வசமாக்
கட்டளையிட் டிருந்தானே. 132

**அவன் = ஐந்தாம் மந்திரி.**

அப்பொழுது காக்கையினல்
அடிபட்ட சிரஞ்சீவி,
'எப்படிநான் வைத்திருப்பேன்
இவ்வுடம்பை? தீயிட்டே
செப்பமொடு கூகையெனச்
சென்மித்துக் காக்கையெலாம்
தப்பறவே அடிப்பன்!' என்று
சாற்ற,அர சனும்சொல்வான்: 133

**செப்பமொடு = மனநிறைவோடு, சென்மித்து = பிறந்து, தப்பற = தப்பாமல்.**

## 12. எலிக் கதை

'இந்தமொழி சம்மதமாய்
ஏனுரைத்தாய் சிரஞ்சீவி!
முந்தியயோ னியைமாற்ற
முடியாதிங் கொருவருக்கும்!

அந்தவகை சொல்லுவன்கேள் :
அருந்தவமா முனியொருவன்
சிந்தையினில் நிட்டையொடு
சேர்ந்தொருநீ ழலில்இருந்தான். 134

முந்திய யோனி = முன் பிறவி, நிட்டை = யோகம்.

'பருந்தெடுத்த பெண்ணெலிஅப்
பருந்தின்வாய்த் தப்பியங்கே
இருந்தமுனி கரத்தில்விழ,
'ஏ'தனவே நோக்கி, அவன்
அருந்தவத்தால் பெண்பிள்ளை
ஆக்கிமனை யாள்கையில்,
'பொருந்தவளர்,' எனக்கொடுத்தான்
பூவையும்அங் கதைவளர்த்தாள். 135

முனி = தவசி, பூவை = மைனாவைப் போல அழகாகப் பேசுபவள்.

'அந்தமின்னைப் 'பலவானுக்
களித்திடுவோம்,' எனமுனிவன்
சிந்தையில்எண் ணிக்கொண்டு
செங்கதிரோன் தனைஅழைத்தே,
'இந்தமின்னை நீகொள்,' என
இரவிஅறிந் 'தெனைமறைக்கும்
முந்தியமே கம்பலவான் ;
முனிவ! அவன் கைக்கொ'டென 136

மின்னை = மின்னலைப் போன்ற ஒளியுடைய பெண்ணை, செங்கதிரோன் = சூரியன், இரவி = சூரியன், அறிந்து = தனக்குப் பலமில்லாமையைத் தெரிந்து, முந்திய மேகம் = என் மேல் எழுந்தமேகம்.

'மேகத்தை அழைத்'திவளை
விரும்புகநீ,' எனமுனிவன்
தாகத்தோ டுரைக்க, அவன்
தானும்அறிந் 'தெனைத்துகளாய்

மாகத்தில் அடிக்கும்அந்த
வாயுபக வான்பலவான் ;
மோகத்தோ டவற்களித்தல்
முனிவர !நன் றென்றனுமே 137

தாகத்தோடு = ஆவலோடு, துகளாய் = தூசியாய், மாகத்தில் = ஆகாயத்தில், வாயு பகவான் = காற்றுக் கடவுள், மோகத்தோடு = விருப்புடன், அவற்கு அளித்தல் = அவனுக்குக் கொடுத்தல், முனிவர = தவசிரேட்டனே.

'வாயுவையும் அழைத்'திவளை
மணம்புணர்க நீ,' என்று
நேயமுடன் இருடிசொல,
நிறைந்திடுமா ருதம்அறிந்தே,
'தூயவனே ! எனைமறிக்கும்
துங்கவரை யேபலவான் ;
சேயிழையை அவற்கருளிச்
செய்க !' எனச் செப்பிடவே 138

நேயம் = அன்பு, இருடி = முனிவன், மாருதம் = காற்று, மறிக்கும் = தடுக்கும், துங்க வரை = சிறந்த மலை, சேயிழை = பெண்.

'மலையரையன் தனையழைத்து,
'மங்கைமணம் புணர்க,' என,
குலவரையும் அறிந்துகொண்டே
கூறும்முனி தனைநோக்கி,
'நிலம்வரையே எனையறுக்க
நினைக்கும்அந்த மூடிகமே
பெலமுடையது ; அதற்களித்தல்
பெருமை,' என வரைகூற 139

அரையன் = அரசன், குலவரை = சிறந்த மலை, நிலம் வரை = பூமி வரையிலும், மூடிகம் = எலி, வரை = மலை.

'எலியரசன் றனையும்அழைத்து,
'இவளைமணம் புணர்'கெனவே,
'நலதிவள்என் வளையில்வர
நாடின்மணம் புணர்வன்,' என,

முலேமகளேத் தவமுனிவன்
முன்னிருந்த படிதானே
எலியுருவம் ஆக்கிவிட்டான் ;
இசைந்தவனும் கொடுபோனுன். 140

நலது = நல்லது, நாடின் = விரும்பினுல், முலே மகள் = வளர்ப்புப் பெண், இசைந்து = சம்மதித்து.

'ஆகையினுல் யோனிதனே
ஆரும்அழித் திடமாட்டார் ;
காகவடி வொழிந்துனது
கருத்தில்நினேத் ததுமுடிக்கும்
கூகைவடி வெடுக்கஉன்ஞற்
கூடாது ; நாம்உனது
சோகமதை அகற்றிடுவோம் ;
சுகமடைந்திங் கிரு,' என்ருன். 141

யோனி = பிறப்பு, சோகம் = துக்கம்.

அவன்மனது வரநடந்தே
அமைச்சர்களின் மேலாகித்
தவறறவே குகைவாயில்
தன்வசமாக் கிக்கொண்டோர்
திவசமதில் அமைச்சரொடும்
சேனேயொடும் தானுறங்கக்
கவடுசெய்தே குகைவாயிற்
கடையினில்தீக் கொளுத்திவிட்டான். 142

மனதுவர = மனம் விரும்ப, திவசம் = நாள், கவடு = வஞ்சனே வாயில் = வழி,

புகையுடனே தீச்சூழப்
பொருகூகைத் திரளெல்லாம்
குகையினுள்ளே மடிந்ததன்பின்
கொடிகூகை மேல்வைத்த

பகைமுடித்துச் சிரஞ்சீவி
பறந்துசிங்க மலையிருக்கும்
இகல்மேக வண்ணனொடும்
இனத்தோடும் சேர்ந்தனனே. 143

**கொடி = காக்கைகள், சிங்கமலை = சிம்மாசலம் என்னும் மலை.**

கண்டவுடன் மேகவண்ணன்
கருத்தில்அடங் காமகிழ்ச்சி
கொண்டனன்மந் திரிகளுடன்
கொடிக்குலமும் தொழுதுநிற்கப்
'பண்டுபழ காருடனே
பழகியிந்நாள் என்மனத்தில்
கொண்டபகை தீர்த்தாயே
கொடிக்கரசே!' எனச்சிறகால் 144

**கருத்தில் = மனத்தில், கொடிக் குலம் = காக்கைக் கூட்டம், பண்டு = முன்பு, கொடிக்கரசே = காக்கைகளுக்கு அரசே.**

புல்லிமுகத் தோடுமுகம்
பொருந்தவைத்தே மோந்துகொண்டே
எல்லையிலாக் களிப்பினொடும்
இருந்தவனை அருகிருத்திச்
'சொல்லிமுடி யாதபெருந்
தோத்திரங்கள் பலவழுத்திப்
புல்லியராம் பகைஞரொடு
பொருந்தியவா றரி'தெனவே. 145

**புல்லி = தழுவி, எல்லை = அளவு, இருத்தி = இருக்கச் செய்து, வழுத்தி = சொல்லி, புல்லியர் = அற்பர்.**

'செப்பரிய தம்பிகளும்
சேனைகளும் புடைசூழ
ஒப்பரிய அரியணையுற்று
உலகாளும் தருமனுந்தான்

தப்பிவரும் நாளறிந்து
சன்னுசி வடிவெடித்து
மெய்ப்பொடுதன் ஏவல்செயும்
விராடனிடத் திருந்திலனே? 146

செப்பரிய = சொல்லுதற்கு அருமையான, புடை = பக்கம், ஒப்பரிய = சமானமில்லாத, அரியணை = சிங்காதனம், சன்னுசி = சன்னியாசி, மெய்ப்பொடு = புகழ்ச்சியுடன், ஏவல் = தொண்டு, விராடன் = விராடதேசத்தரசன்.

'புசபலத்தால் வலிமையினுல்
புகழ்பெற்ற திறல்வீமன்
வசையரசன் அடுக்களையின்
மடையனென இருந்திலனே?
விசையனும்நா டகசாலை
மின்னுரை ஆட்டுவிக்கும்
திசைபெறுநட் டுவன்ஆகிச்
சிகண்டியென இருந்திலனே? 147

திறல் = வல்லமை, வசை = பழிப்புக்குரிய, அடுக்களை = சமையலறை, மடையன் = சமையற்காரன், விசயன் = அருச்சுனன், மின்னார் = பெண்டிர், ஆட்டுவிக்கும் = ஆடச் செய்யும், திசை பெறு = எட்டுத் திசையிலும் கீர்த்தி பெற்ற, சிகண்டி = அலி.

'நகுலனும்அங் கவன்குதிரை
நடைபழக்கு வானுகித்
தகைமையினுல் ஒடுங்கிஅவன்
றனைச்சேவித் திருந்திலனே?
புகழொடுமுக் காலம்அறி
புனிதன்எனும் சகதேவன்
இகழும்இனப் பசுமேய்க்கும்
இடையன்என இருந்திலனே? 148

தகைமை = தன்மை, அவன்றனை = அந்த விராடனை, புனிதன் = பரிசுத்தன்.

'எரிதழலில் அவதரித்தே
இரவிகுலத் தினில்வளர்ந்து
விரிநிலவின் குலம்புகுந்த
மின்னனையாள் பாஞ்சாலி
வரிவளைக்கை உத்தரைக்கு
மாலினியாய் இருந்திலளோ?
கருமம்முற்றும் அளவும்அவர்
கருத்தடங்பி இருப்பர்,' என்றே 149

எரிதழல் = எரிகின்ற நெருப்பு, அவதரித்து = பிறந்து, இரவி குலம் = சூரியகுலம், விரிநிலவின் குலம் = சந்திரகுலம், பாஞ்சாலி = திரௌபதி, உத்தரை = விராடன் மகள், மாலினி = மாலினி என்னும் தோழி.

மேகவண்ணன் சலிப்பாற்ற,
மீளவுமே, 'வாள்முனையில்
யோகம்இருந் தவர்போலும்
ஓங்கெரிபுக் கவர்போலும்
நாகவளை யுட்புகுந்து
நண்ணினவர் போலும்உன்றன்
ஆகம்வருந் தினையோ!'என்று
அரற்றிடலும், சிரஞ்சீவி 150

யோகம் = தவம், புக்கவர் = புகுந்தவர், நாகவளை = பாம்பு வளை, ஆகம் = மனம், அரற்றிடலும் = புலம்பவும்.

'தேவ!நின தருளாலே
தீவினையெ லாம்கடந்தேன்;
நீவிரவி இருந்ததலம்
நீத்துவன வாசத்தில்
மேவியுன்றன் திருமேனி
மெலிந்ததெல்லாம் நான்செய்த
பாவமன்றோ?' எனக்கூறிப்
பரிவினுடன் இருத்தலுமே 151

தேவ = அரசனே, தீவினை = பாவம், விரவி = சேர்ந்து, தலம் = இடம், நீத்து = விட்டு, வனவாசம் = காட்டு வாழ்க்கை, பரிவு = அன்பு.

'ஆண்டொருநாள் தாமிருந்த
அயோத்திவிட்டு வனவாசம்
வேண்டினதும், அவர்தேவி
மிக்கசிறை புக்கதுவும்
தீண்டரிய ராவணனைச்
செற்றதுவும் தேவிசிறை
மீண்டதுவும் ராகவனார்
வினைப்பயன் அன்றோ?' என்றும் 152

ஆண்டு = அவ்விடத்தில் (கோசல நாட்டில்), வேண்டினதும் = விரும்பினதும், தேவி = மனைவி (சீதை), செற்றது = அழித்தது, ராகவனார் = இராமர்.

'துங்கநளன் அரசிழந்து
தூயதம யந்திதனைக்
கங்குலிலே துகில்அரிந்து
கானில்விட்டுப் போனதுவும்,
வெங்கண்அர வம்தீண்ட
மேனிபழு தானதுவும்,
தங்கியதீ வினையாலே
தான்விளைந்த வா'றென்றும் 153

கங்குல் = இரவு, துகில் = ஆடை, வெங்கண் அரவம் = கார்க் கோடகன் என்ற பாம்பு.

'பாண்டவர்சூ தாடினதும்,
பார்இழந்து நின்றதுவும்,
மூண்டதழ லிற்பிறந்தாள்
முனைகுலைதல் ஆனதுவும்,
நீண்டபெருங் கானகத்தில்
நிலைபிரிந்து திரிந்ததுவும்
ஈண்டியதீ வினையாலே
இயன்றதல வோ?' என்றும் 154

பார் = பூமி, முனைகுலைதல் = முகம்வாடுதல், ஈண்டிய = மிகுந்த.

'பொன்னிழந்தும் நாடிழந்தும்
பொருவில்குமா ரனையிழந்தும்
பன்னருந்தே வியையிழந்தும்
பறையனுக்கூ ழியஞ்செய்தும்
தன்னுடம்பு தான்விற்றும்
சத்ய அரிச் சந்திரனும்
மன்னியதீ வினையாலே
மாழ்கினன்அன் றோ?'என்றும் 155

பொரு இல் = ஒப்பு இல்லாத, பன்னருந்தேவி = சொல்லுதற்கு அரிய மனைவி, மன்னிய = பொருந்திய, தீவினை = பாவம், மாழ்கினன் = வருந்தினன்.

'ஆகையினால், வினைப்பயனை
ஆர்கடந்தார்? நாமும்அந்தக்
கூகையினல் நம்முடைய
குலம்அழிந்தும் தலம்இழந்தும்
போகம்இழந் தும்மலையிற்
புக்கொளித்தோம்,' என்றும்,'இதை
நீகருதி நம்குலத்தை
நிறுத்தினை !'என் றும்புகழ்ந்தான். 156

தலம் = இடம், போகம் = இன்பம், புக்கு = புகுந்து, நிறுத்தினை = நிலைக்கச் செய்தாய்.

'சத்துருவை ஒருவேளை
தலைமேலும் தோள்மேலும்
வைத்திருந்து சமயம்வந்தால்
வதைத்திடவேண் டும்;முனம்ஓர்
துத்திவிரி கருநாகம்
தோள்மேலும் தலைமேலும்
வைத்திருந்து தவளைகளை
வதைத்தகதை போலும்,'என 157

துத்தி விரி = படப் புள்ளி விரிந்த, போலும் = ஒக்கும்.

## 13. பாம்பு தவளையைச் சுமந்த கதை

'வழுத்துகதை ஏவெ'தன,'ஓர்
மந்தவிடன் எனும்நாகம்
கொழுத்ததவ ளைக்குலத்தைக்
கொன்றுதின்ன வேகருதி,
முழுத்ததவ ளைக்கூட்டம்
முயங்கியஓ டைக்கரைமேல்
எழுத்தைநினைத் திருப்பவர்போல்
இருந்துதுய ரப்படவே 158

வழுத்து கதை = சொல்லிய கதை, முழுத்த = முதிர்ந்த. முயங்கிய = சேர்ந்த, எழுத்தை = தலை விதியை.

'சாலபதன் என்கின்ற
தவளைஅர சனும்அங்கோர்
கோலவரித் தவளையெனும்
குதிரைவா கனமேறி
நாலுவகைச் சேனைகளும்
நல்லமைச்சர் களும்சூழச்
சீலமொடு மேளவகை
சிலதவளை சேவிக்க 159

சாலபதம் = அகலமான பாதத்தை உடையது, கோளம் = அழகு, சீலம் = ஒழுங்கு, சேவிக்க = வாசிக்க.

'பவனிவரும் வேளையிலே
பாம்பரசன் ஒருகரைமேல்
கவலையுடன் இருக்க,அவன்
கண்டொருதூ தனையனுப்பி,
'இவனிருக்கும் வகைஏதிங்
கென்றறிந்து வருக,'என,
அவனருகிற் சென்று,'இவண்நீ
யார்?இருப்ப தேவெ'தன்றான். 160

பவனி = ஊர் வலம், இவண் = இவ்விடம் உள்ள.

'நாகஇறை நான்; என்பேர்
நல்லமந்த விடன் எனீபார்;
போகிபல சூழஒரு
புற்றில்இருந் தரசாள்வேன்;
யோகிதனைத் தீண்டிவிட்டேன்;
யோகி,'தவ ளையைச்சுமப்பாய்
ஆகிஅது தரஇரையும்
அருந்துவைநீ!' எனச்சபித்தான். 161

நாக இறை = பாம்பரசு, போகி = பாம்பு, யோகி = தவசி, அருந்துவை = தின்பாய்.

'சாபத்தி னல்எனது
தலையில்விதி தனைநினைந்தேன்;
ஆபத்து நீங்க உங்கள்
அரசனைநான் சுமக்கவந்த
சோபத்தால் இங்கிருந்தேன்;
தூத!அர சற்குரைத்தென்
ஆபத்து நீக்கில்உங்கட்கு
அடிமையெனத் திரிவேனே!' 162

சோபம் = துக்கம், அரசற்கு = அரசனுக்கு.

'எனவுரைத்தான் ; தூதனும்போய்
இவ்வாறே சொல,மகிழ்ந்து,
தனதமைச்சன் றனையழைத்துச்
சாலபதன் கேட்ப,அவன்,
'சினம்மிகுத்த பணியரசன்
தினமும்நமைச் சுமந்தால்,நம்
இனம்நிகர்த்த சாதியிலை
என்றுலகும் புகழும்!' என்றான். 163

பணி = பாம்பு, இனம் = குலம், நிகர்த்த = சமமான, உலரும் = உலகத்தாரும்.

'அப்பொழுதே சாலபதன்
அரவரசன் றனையழைத்தே,
'எப்பொழுதும் நமைச்சுமந்தால்
இரையுனக்குத் தினம்ஒன்று
தப்பறவே தருவம்,' என்று
சத்திபெறக் கூறலுமே
மெய்ப்புடனே மந்தவிடன்
மிகக்குனிந்தான் எதிர்புகுந்தே. 164

**இரை = தீனி, தப்பற = தவறாமல், சத்தி = விருந்து, மெய்ப்பு = புகழ்ச்சி, குனிந்தான் = வணங்கினான்.**

'ஏறினன் சாலபதன்;
ஏந்திநின்றான் மந்தவிடன்
'தேறின்நான் இவரையினித்
தின்னலாம்,' எனவெண்ணிச்
'சாறின்நான் உனைப்பிரியேன்
சாலபதனே!' என்று
கூறினன்; மனம்மகிழ்ந்து
கொடுத்தான்அங் கொருதவளை. 165

**தேறின் = ஆராய்ந்து பார்த்தால், சாறின் = பழத்தின் சாற்றைப் போல.**

'இவ்வாறு தினந்தினமும்
இதஞ்சொல்லி இரைநுகர,
அவ்வாறு தவளையெல்லாம்
அடங்கலுமே விழுங்கிவிட்டான்;
ஒவ்வாத சாலபதன்
ஒருத்தனுமே தனித்து,'நமக்கு
எவ்வாறு மோசம்வந்தது!'
எனக்கருதி யிருந்தானே. 166

**நுகர = தின்ன, ஒவ்வாத = சம்மதியாத.**

'மந்தவிடனும் அவன்
மனக்கவலை தனையறிந்தே
முந்தியதன் வளைவாயில்
முகத்தில் மெள்ள விடுத்தலுமே

குந்திஅவர் வளைபுகுந்தார் ;
　　கொடியமந்த விடனுரும்
புத்திமகிழ்ந் தவர்தமையும்
　　புசித்துவிட்டார் !' எனக்கூறி 167

**புத்தி = மனம்.**

'ஆகையினல், அரசர்களும்
　　அமைச்சர்களும் அறிவுடையோர்
ஆகியிருந் தால்அன்றி
　　அவிவேக ராயிருந்தால்,
கூகையினம் போலும்அந்தக்
　　குறுந்தவளை இனம்போலும்
ஆகும்,' எனச் சிரஞ்சீவி
　　அறைந்தனன் ;வேந் தனும்அறிந்தான். 168

**அவிவேகர் = அறிவற்றவர்.**

'புத்தியினல் நன்மனத்தின்
　　பொறுமையினல் திறமையினல்
சித்திகள்ஆ வதுபோலச்
　　சேனைகளால் திரவியத்தால்
வைத்திடுகோ பங்களினல்
　　மானத்தால் தன்மனத்தின்
சத்தியினல் ஒருகருமந்
　　தானும்முடி யாதெ'னவே 169

**சித்திகள் = வெற்றிகள்.**

சொல்லிஅந்த மேகவண்ணன்
　　சூழ்ச்சிபல தந்திரங்கள்
வல்லசிரஞ் சீவியொடும்
　　மற்றுமுள்ள அமைச்சரொடும்
நல்லகொடிக் குலங்களொடும்
　　நாடிமுன்பு தாமிருந்த
தொல்லைவட மரமடைந்து
　　சுகமாக இருந்தானே. 170

**தொல்லை = பழமையான, வடமரம் = ஆலமரம்.**

IV

# அர்த்த நாசம்

[கிடைத்த பொருளை அழித்தல்]

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

இந்துசே கரனுர் தில்லை
இறைவர்தம் அருளி னலே
முந்திய மித்ர பேதம்
முயங்கிய சுகிர்ல்லா பம்மே
சந்திவிக் கிரகம் மூன்றும்
சாற்றினம்; அர்த்த நாசம்
செந்தமிழ்க் கவிதை யாலே
சிறிதுநாம் பகர லுற்றும். 1

**இந்து சேகரனுர் = சந்திரனைச் சடையில் தரித்த சிவபிரானுர், தில்லை = சிதம்பரம், சாற்றினம் = சொன்னேம், அர்த்த நாசம் = பொருள் அழிவு.**

ஆதிதந் திரங்கள் ஐந்தில்
ஆதிஓர் மூன்றும் சொல்ல,
நீதிகொண் டவனி ஆளும்
நிருபன்றன் குமரர் கேட்டே,
'ஓதிய அர்த்த நாசம்
உரைத்திடு பெரியோய்!' என்ன,
வேதியன் சோம சன்மா
விருப்புடன் உரைக்க லுற்றுன்: 2

**ஆதி = பழமை, முதல், அவனி = பூமி, நிருபன் = அரசன்.**

'எவ்வள வாகி லுந்தான்
இயற்றிய பொருள்கள் வந்து
கைவசம் ஆகில் வேருேர்
கருத்தினுல் விடுக்கல் ஆகா;

எவ்வம்வந் தடையும் முன்னோர்
இருங்கரா உபாயத் தாலே
வவ்விய குரங்கை விட்டு
மாழ்கிய கதைபோல்,' என்றான். 3

**எவ்வம் = துன்பம், இருங்கரா = கரிய முதலை, வவ்விய — கவர்ந்த, மாழ்கிய = வருந்திய.**

## 1. முதலை குரங்கை விட்டு நாணம் அடைந்த கதை

'அக்கதை ஏதெ'தன் றோத,
ஆழிசூழ் கருங்கல் ஆற்றின்
பக்கம்ஓர் மரத்தின் மீது
பழம்பறித் தருந்தி வாழும்
மர்க்கட வேந்தன் தன்பேர்
வரும்பெலி வாதன் அன்னான்
கைக்குள்ஆம் பழத்தைத் தப்பிக்
களகளென் றாற்றில் வீழ்த்த 4

**ஆழி = கடல், அருந்தி = தின்று, மர்க்கடம் = குரங்கு, களகளென்று = களகளவென்னும் சத்தம் உண்டாகும்படி, வீழ்த்த = விழச்செய்ய.**

மற்றுமோர் கொம்பிற் பாய்ந்து
வளைத்தசைத் துதிர்க்கும் போழ்தில்
உற்றிடு கனிகள் எல்லாம்
உதிர்ந்தன களக ளென்ன,
குற்றமில் விளையாட் டாகிக்
கொழுந்தனிக் கொம்பு தன்னைப்
பற்றியே குதித்து திர்த்துப்
பரிவுடன் இருந்த தன்றே. 5

**கொம்பு = கிளை, பரிவுடன் = மகிழ்வுடன்.**

இப்படி இருக்கும் நாளில்
யாற்றினுக் கரச னகச்
செப்பிடு முதலை வேந்தன்
சிஞ்சுமா ரனும்அங் கெய்தித்
துப்புறு கனியைத் துய்த்துச்
சுவையின்மேல் விருப்பி னலே
அப்புறம் போக மாட்டா
தவ்விடத் திருந்து கொண்டே 6

**யாற்றினுக்கு** = ஆற்றுக்கு, **சிஞ்சுமாரன்** = முதலை, **துப்பு** = அழகு, **துய்த்து** = தின்று.

வானர அரசன் றன்னை
வன்கரா அரசன் நோக்கி,
'நானுனைப் பிரிய மாட்டேன்
நண்பனே!' என்ன அந்த
வானர வேந்தன் றனும்
மனம்மகிழ்ந் தினிய கூறித்
தேனுறு கனிய ளிக்கத்
தின்றுகொண் டிருந்த தன்றே. 7

**வன்கரா** = கொடிய முதலை, **இனிய** = இனிமையான சொற்கள்.

இப்படி அனேக நாளங்
கிருந்தனன் சிஞ்சு மாரன்;
கற்புறு தேவி அந்தக்
கசடன்மேல் மோகத் தாலே
வெப்புநோய் கொண்டு தூது
விடுத்தனள்; தூதி வந்து
செப்பும்:'நின் தேவி நோவு
தீர்க்கநீ வருக!' என்றே. 8

**கசடன்** = குற்றமுள்ளவன், **வெப்பு நோய்** = காய்ச்சல், **செப்பும்** = சொல்வாள்.

'பூகவேந் தனைநாம் கூடி
உறவுகொண் டிருந்தோம்; 'இந்நாள்
மோகமாய் நினது தேவி
முயங்குநோய் கொண்டாள்,' என்றாய்;
போகவும் கால்எ ழாது;
பூவைதன் நோவும் கேட்டோம்;
சோகமும் மிகுதி ஆனோம்;
தூதி! நாம் செய்வ தென்னே!' 9

பூக வேந்தன் = குரங்கரசு, முயங்கு நோய் = புணர்ச்சி வேட்கையால் உண்டான நோய், பூவை = பெண்.

என்றனன் சிஞ்சு மாரன்;
இதைஅவள் தானும் கேட்டே,
"இன்றிவன் குரங்கை விட்டங்கு
எய்திலன்; குரங்கைக் கொண்டு
சென்றுநாம் கொல்வோம்,' என்று
குறித்து, 'நின் தேவி வீழ்ந்த
அன்றுதொட் டின்று காறும்
ஔடதம் கொடுத்தோம்; அந்நோய் 10

ஔடதம் = மருந்து.

'தீரவும் இல்லை; என்ன
செய்குவோம்! 'வான ரத்தின்
ஈரல்வந் தாலே அன்றி
இவள்உயிர் பிழையா தென்றார்;
பாரியை இழந்த பேர்க்குப்
பகர்குடிப் பேரும் இல்லை;
காரியம் அதுவே நெஞ்சிற்
கருதிநீ வருக!' என்றாள். 11

வானரம் = குரங்கு, பாரியை = மனைவி, பகர்தல் = சொல்லுதல்.

தூதிசொல் கேட்டு நெஞ்சம்
துளங்கியே, 'குரங்கின் ஈரல்
ஏதினி அதுவே அல்லால்,
இவனைநாம் வதைத்தோ மாகில்
பாதகம்; தேவி செத்தால்
பழிவரும்; குடியும் கேடாம்;
ஆதலால், தேவி தானே
அதிகம்,' என் றிதயத் தெண்ணி 12

**துளங்கி = வருந்தி, ஏது = கிடைப்பதெப்படி, பாதகம் = பாவம், குடி = குடும்பம், இதயம் = மனம்.**

பயப்பய நடந்திம் மாற்றம்
பகரவும் கூசி நிற்க,
வயப்படு தோழன் கண்டு,
'வருக! நின் கருத்தே ெ'தன்ன,
'வியப்புறும் நினது நட்பை
மேவியே அனேக நாளா
நயப்புடன் இருந்தேன்; சற்றே
நாடினேன் தேவி தன்னை.' 13

**மாற்றம் = சொல், பயப்பய = மெள்ள மெள்ள, பகர = சொல்ல, வயப்படு தோழன் = இணக்கமான நண்பன். வியப்புறு = அதிசயம் பொருந்திய, நயப்பு = விருப்பம்.**

என்னலும், 'போய்வா,' என்றே
இசைத்தனன் யூக வேந்தன்;
'மன்ன! நின் றன்னை விட்டு
வாழ்வதிங் கொருநாள் உண்டோ?
என்னுடன் நீயும் வந்தால்,
ஏகியே வீடும் காட்டி
உன்னுடன் வருவேன்,' என்ன
உரைத்தனன் முதலை வேந்தன். 14

**இசைத்தனன் = சொன்னான், ஏகி = போய்.**

'நீரினுள் மூழ்கிச் செல்லும்
நின்னைநான் கரைமேல் வந்து
சேருவ தெவ்வா றெ'ன்று
செப்பும்வா னரத்தைச் சிஞ்சு
மாரனும், 'முதுகில் ஏறி
வருக,' என் றுரைக்க, 'நல்ல
காரியம் சொன்னாய்!' என்று
கடுகியே முதுகில் ஏற 15

கொண்டுபோய்த் தனது வீடு
குறுகுமுன், 'கல்லி னாலே
மண்டுபொன் காண்பர்; வாக்கால்
மனிதரைக் காண்பர்; தூர்த்த
மிண்டராற் சாது வான
மேன்மையர் தம்மைக் காண்பர்;
பெண்டுகள் மனத்தைக் காணப்
பிறிதிலை,' எனநி னைத்தே 16

**மண்டு பொன் = ஒளி மிகும் பொன், கல் = உரைகல், தூர்த்த மிண்டர் = வஞ்சமுடைய அறிவிலிகள், பிறிதிலை = வேறு கருவி இல்லை.**

'இவனைநாம் கொல்ல என்றே
எண்ணினேம்! தேவி செய்த
கவடமோ, தூதி தானே
கவடுசெய் தனளோ!' என்று
மவுனமாய் நிற்க, அந்த
வானரம், 'நண்பா! நெஞ்சில்
கவலையே தெ'ன்ன, 'ஒன்றும்
கவலையிங் கில்லை,' என்ன 17

**தேவி = மனைவி, கவடம், கவடு = வஞ்சனை, மவுனமாய் = வாய் திறவாமல்.**

‘வீட்டினுள் மனையாள் உற்ற
வேதனை யாதே னுந்தான்
கேட்டதும் உண்டோ ?’ என்று
கேட்க,‘ நான் ஏது சொல்வேன் !
‘வாட்டிய நோவு கொண்டாள் ;
வானர ஈர லாலே
கூட்டிய மருந்து கொண்டால்
குற்றுயிர் பிழைக்கும் !’ என்றாள். 18

**குற்றுயிர் = நீங்கும் தறுவாயில் உள்ள உயிர், பிழைக்கும் = பிழைப்பாள், என்றாள் = என்று தூதி சொன்னாள்.**

‘வானர ஈரல் எங்கே
வரும்நமக் கென்னும் அந்த
ஞானம்ஒன் றல்லால் வேறு
ஞானம்ஒன் றில்லை,’ என்ன,
வானரம் அறிந்து கொண்டு,
‘வானர ஈரல் நூறு
தானமை யாதோ ?’ என்று
சாற்றிட, முதலை வேந்தன் 19

**வரும் = கிட்டும், ஞானம் = ஆலோசனை, அமையாதோ = போதாதோ ?**

‘ஒன்றுதான் போதும்,’ என்றே
உரைத்திட, ‘அந்தோ ! அந்த
துன்றுநீள் மரத்தின் மீதே
தூக்கியே இருக்கக் கண்டும்
இன்றுநீ எனக்குச் சொல்லாது
இத்தனை தூரம் வந்தாய் !
சென்றுநாம் எடுத்துக் கொண்டு
திரும்புவோம் ; திரும்’பென் றோத 20

**ஒன்றுதான் = ஒன்றே, அந்தோ = ஐயோ, துன்று நீள் மரம் = நீட்சி பொருந்திய மரம், தூக்கி = தொங்க விட்டு, ஓத = கூற.**

'அல்லது வெறுங்கை யோடும்
அரமனைக் கேக லாமோ?
நல்லது சொன்னாய்! ஈரல்
நமக்குவேண் டியதும் கொண்டு
சொல்லருங் கனியும் கொண்டு
தோழியைக் காண நாமும்
செல்லுவோம்; வருக!' என்னத்
திரும்பினார் முதலை யாரும். 21

*அரமனை=மாளிகை.*

'விரைந்துபோய்க் குரங்கின் ஈரல்
வேண்டுவ தெடுத்து வந்தால்,
மருந்துமாம் மதனி யார்க்கும்;
மற்றுள பேர்கட் கெல்லாம்
பொருந்திய கனிதன் னாலே
போனகம் அமைக்க நல்ல
விருந்துமாம்; செல்க!' என்ன,
மெய்யெனச் சென்ற தன்றே. 22

**மதனி=தமையன் மனைவி, பொருந்திய=பொருத்தமான, போனகம்=உணவு.**

மரத்தினை அடுக்கக் கொண்டு
வந்துதான் விடுத்த லோடும்
சரத்தினும் விரைவிற் பாய்ந்து
தருவின்மேல் ஏறிக் கொண்டங்கு
இருத்தலும், முதலை யார், 'அங்
கிருந்துவா னரத்தின் ஈரல்
குரக்கினுக் கரச னே!நீ
கொண்டுவா,' என்று கூற 23

**அடுக்க=நெருங்க, விடுத்தலோடும்=விட்டவுடனே, சரத்தினும்=அம்பைக்காட்டிலும், தரு=மரம், குரக்கு=குரங்கு.**

‘ இன்னம்ஏன் ஆசை வைத்திங்கு
இருந்தனை முதலை யே !நீ ?
மன்னிய பசியான் நட்பில்
நம்பிக்கை வைத்தால் பாம்பால்
முன்னம்ஓர் மண்டு கந்தான்
ஒளித்திடும் முறைமை போலாம்,’
என்னலும், ‘ அஃதென் ?’ என்ன,
இயம்புவான் குரங்கு வேந்தன்: 24

*மன்னிய = பொருந்திய, பசியான் = பசித்திருப்பவன், மண்டுகம் = தவளை.*

## 2. தவளை பாம்பை வஞ்சித்த கதை

### *கலி விருத்தம்*

‘ தன்னை மற்றைத் தவளைகள் வாட்டலால்
இன்னல் உற்றோர் தவளை எழுந்தொரு
பன்ன கத்தைச் சினேகித்துப் ‘பையுள்செய்
என்னி னத்தை விழுங்கெ’கன் றிசைத்ததே. 25

இன்னல் = துன்பம், எழுந்து = புறப்பட்டு, பன்னகம் = பாம்பு, பையுள் = துன்பம், இசைத்தது = சொல்லியது.

‘ நாகம் கேட்டுப்பன் னாளும் மகிழ்ந்திரை
ஆக உண்ட ததன்பின், ‘ எனக்கிரை
ஈக,’ என்னத் தவளை ‘ இலை ’என்ற-
தாக, நாகம் அழன்றுரை செய்யுமால்: 26

பன்னாளும் = (பல் + நாளும்) பல நாளும், ஈக = தருக, இலை = இல்லை, என்றதாக = என்று சொல்ல, அழன்று = கோபித்து.

‘ வந்து நீசொன்ன வார்த்தையின் எய்தினேன்
எந்த நாளும் இரைஅளி யாய்எனில்
புந்தி இல்லோய்! நினையும் புசிப்பல்!’என்று
உந்தி அன்னதன் மக்களை உண்டதே. 27

**வார்த்தையின் = சொல்லினால், எய்தினேன் = இவ்விடத்தை அடைந்தேன், புந்தி இல்லோய் = புத்தியில்லாதவனே, புசிப்பல் = தின்பேன், உந்தி = விரைந்து.**

‘தவளை அன்னது கண்டுதன் தாரமோடு
இவள வென்றற் கருந்துயர் எய்தியே
துவளும் நெஞ்சொடு துண்ணென நீங்கிஓர்
உவள கத்தை அடைந்தின்பம் உற்றதே. 28

**தாரம் = மனைவி, இவளவென்றற்கு = இவ்வளவு என்று சொல்வதற்கு, எய்தி = அடைந்து, துவளும் = சோரும், துண்ணென = விரைவாக, உவளகம் = நீர் நிலை.**

‘முன்னம் ஓர்நரி மோசம் புரிதலால்
மின்னு புத்தியில் லாவொரு வேசரி
துன்னும் ஆவி தொலைந்தது கேள்,’ எனப்
பின்னும் ஓர்கதை பேசும் குரங்கரோ : 29

**மின்னு புத்தி = விளக்கமான அறிவு, வேசரி = கழுதை, ஆவி = உயிர், என = என்று, அரோ = அசைச்சொல்.**

## 3. கழுதை இறந்த கதை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

‘துன்னிய காடொன் றங்கே
துரைத்தனம் பண்ணும் சிங்க
மன்னவன் வாயி லுக்கு
மந்திரி ஓரி ஒன் றங்கு
அன்னவன் வயிற்றின் நோவாய்,
‘அமைச்சனே ! கழுதை ஈரல்
உன்னியே கொடுவா,’ என்ன,
ஓரிஓர் ஊரை நாடி 30

**துன்னிய = அடர்ந்த, துரைத்தனம் = அரசாட்சி, வாயில் = வீட்டு முற்றம், ஓரி = நரி, உன்னி = ஆராய்ந்து, கொடுவா = கொண்டு வா.**

'சென்றொரு வண்ணான் தப்பும்
செழும்புனல் சுனையின் பக்கம்
நின்றது ; பொதியைத் தள்ளி
நெடுங்கயிற் றாலே காலை,
ஒன்றிடத் தளைந்து வண்ணான்
ஓட்டினன் கழுதை தன்னை ;
வென்றிகொள் ஓரி சேர்ந்'துன்
மேனியேன் இளைத்த'தென்ன 31

சுனை = நீர் நிலை, பொதி = மூட்டை, ஒன்றிட = சேர, தளைந்து = கட்டி, வென்றி = வெற்றி, மேனி = உடல்.

'கூறவே, கழுதை, 'வண்ணான்
கொண்டநாள் முதல்எந் நேரம்
சீறியே அடித்த லானும்
தீனிபோ டாமை யானும்
ஏறியே பொதியும் என்மேல்
ஏற்றியே தள்ளிப் பின்னை
மாறுகால் பிணைத்த லானும்
வருந்திநான் இளைத்தேன் !' என்ன 32

கொண்ட = விலைக்கு வாங்கிய, சீறி = கோபித்து, ஏறி = தானும் என் மீது ஏறிக்கொண்டு, மாறு கால் பிணைத்தல் = ஒரு பக்கத்துக் காலோடு மறுபக்கத்துக் காலைக் கட்டுதல்.

'அந்தஓ ரியுந்தான் கேட்டே,
'ஐய! நீ வந்தா யாகில்,
சிந்தையுள் மகிழ்ந்தே எங்கள்
சிங்கமன் னவன்தன் பக்கல்
மந்திரி யாக உன்னை
வைத்தர சாள்வன் ; நீயும்
சுந்தர அமைச்சன் ஆகிச்
சுகத்துடன் இருப்பாய்,' என்ன 33

தன் பக்கல் = தன்னிடம்.

'சிங்கமோ விலங்கை எல்லாம்
தின்னுமே!' என்ன, 'ஓகோ!
எங்களை யெல்லாம் தான்வைத்
திரட்சைசெய் கிலனே? மன்னன்
வெங்களிற் றியானை அல்லால்
வேறொரு விலங்கைத் தீண்டான்;
அங்கவன் ஆணை தப்பான்;
அதற்குநான் பிணையே,' என்ன 34

**இரட்சை செய்கிலனே=காப்பாற்றுவான் அல்லனோ? ஆணை=கட்டளை, பிணை=உத்தரவாதம்.**

'கழுதையும் 'நல்ல'தென்னக்
காலினில் தளைத்தி ருந்த
பழுதையை ஓரி மெள்ளப்
பல்லினல் கடித்து விட்டே
வழிசொலி அழைத்துப் போய்த்தன்
மன்னவன் முனம்வி டுக்கப்
பழிபடு மன்னன் தானும்
பற்றியே பிடிக்க வந்தான். 35

**தளைத்திருந்த=கட்டியிருந்த, பழுதை=கயிறு, முனம்=முன்னிலையில், பழிபடு=பழி பொருந்திய.**

'கண்டது கழுதை தானும்
கதறியே திரும்பி ஓட்டம்
கொண்டது; சிங்கம் நோவு
கொண்டதால் ஓட மாட்டாது
அண்டையில் நிற்க, ஓரி,
'ஐய! நீ பதறி விட்டாய்!
கொண்டுநான் வந்துன் கையில்
கொடுத்தபின் வதைக்க,' என்ன 36

**பதறிவிட்டாய்=அவசரப்பட்டுவிட்டாய், வதைக்க=கொல்லுக.**

'பின்னையும் ஓரி சென்று,
'பேதையாய் இருந்தாய்! அந்தோ!
மன்னவன் உன்னைக் கண்ட
மகிழ்ச்சியால் தழுவி மோந்து
தன்னருகு இருத்திக் கொண்டு
தான்உனை அமைச்சன் ஆக்க
உன்னினன்; என்னே நீயும்
ஓடியிங் குற்றாய்!' என்றும் 37

பின்னையும்=மறுபடியும், பேதை=அறிவில்லாதவன். இருத்தி=இருக்கச் செய்து, உன்னினன்=நினைத்தான், என்னே=என்ன காரணமோ.

'கணக்கிலாப் பாவம் பண்ணிக்
கழுதையாய்ப் பிறந்து வண்ணான்
பிணக்கினால் அடியும் பட்டுப்
பெருஞ்சுமை சுமந்தாய்! நல்ல
இணக்கம்நான் செய்தேன்; அந்த
இணக்கம்நீ அறியாய் மூடக்
குணத்தினாற் பயந்தாய்,' என்றும்
கூறிடக் கழுதை கேட்டே 38

பிணக்கு=மனமாறுபாடு, இணக்கம்=சினேகம், அறியாய்=அறியாதவனாய்.

'உன்னது பேச்சை நம்பி
உற்றனன்; கிட்டும் முன்னே
மன்னிய சிங்கம் கொல்ல
வந்தது; தப்பி வந்தேன்;
இன்னம்ஏன் வந்தாய்?' என்ன,
இருநிலம் தொட்டுக் கையால்
தன்னிரு காதும் மூடிச்
சத்தியம் சொல்லு மாபோல் 39

இருநிலம்=பெரிய பூமி, சத்தியம்=உண்மை, சொல்லுமா போல்=பேசுவது போல்.

'ஐயையோ ! பாவம் பாவம் !
அரசன் அப் படிச்செய் வானே ?
பொய்யுரை சொல்ல வேண்டா ;
போடுநீ இந்தப் பேச்சை ;
வையகம் போற்றும் சிங்க
மன்னவன் வார்த்தை தப்பான் ;
மெய்யிது தானே,' என்று
வேந்தன்மேல் ஆணை இட்டே 40

**போடு = போக விடு என்பதன் மரூஉ, வையகம் = உலகத்தார், ஆணை = சத்தியம்.**

' தன்னிலே வருஞ்செல் வத்தைத்
தள்ளுவார் ஒருவர்க் காணேன் !
உன்னையே கண்டேன் இப்போது !
உன் தலை விதியோ ?' என்றே
தன்னிலே அதிச யித்தே
தான்,'இதை விட்டு நீநான்
சொன்னதைக் கேட்டு வந்தால்
சுகமெலாம் வரும்உ னக்கே. 41

**ஒருவர்க் காணேன் = ஒருவரைக் கண்டேனில்லை.**

' இருவரா நாமே கூடி
இருந்தன மாகில் வேறங்கு
ஒருவரால் ஆவ துண்டோ ?
உலகெலாம் நமதே !' என்ன,
வெருவிய கழுதை தானும்
விரும்பியே இதன்பின் செல்லக்
கருதிய ஓரி யும்சிங்
கத்தின்முன் விட்ட தம்மா ! 42

**வெருவிய = பயந்த.**

'கழுதையார் தம்மைச் சிங்கம்
கண்டுதன் கைகள் ஆரத்
தழுவியே மோந்து கண்டந்
தன்னையும் முறித்துப் போட்டே,
'பழுதுநாம் செய்தோம்! சந்தி
பண்ணியிம் மருந்தைக் கொள்வோம்,'
கழுதையைப் பழுது றுமல்
காத்துநீ இருப்பாய்,' என்றே 43

**கண்டந்தன்னை** = கழுத்தை, **பழுது** = பாவச் செயல், **சந்தி பண்ணி** = சந்தியா வந்தனம் செய்து, **மருந்து** = இனிய உணவு.

'ஓரியைக் காவல் வைத்தே
ஒருசுனை அருகிற் சென்று
பாரிய சிங்கம் சந்தி
பண்ணிஅங் கிருக்க, முன்னே
ஓரியும் 'மருந்தோ!' என்றங்
குற்றதன் கண்ணும் காதும்
ஈரிரண் டுறுப்பும் தின்றே
இருந்தது பயந்து தூர 44

**பாரிய** = பெரிய, **முன்னே** = முதலில், **அதன் கண்ணும் காதும்** = அக்கழுதையின் கண்களும் காதுகளுமாகிய, **ஈரிரண்டுறுப்பும்** = நான்கு அவயவங்களும்.

'சிங்கமும் சந்தி பண்ணிச்
சென்றிதன் கண்கள் எங்கே?
இங்கிதன் செவிகள் எங்கே?'
என்றுதான் முடுகிக் கேட்க,
'அங்கம்எல் லாம்உண் டாகில்
அகப்பட்டும் திரும்பிப் போய்ப்பின்
மங்கிட இறக்க இங்கே
வரநினைந் திடுமோ?' என்ன 45

**முடுகி** = விரைந்து, **அங்கம்** = உறுப்பு, **மங்கிட இறக்க** = வாட்டமடைந்து சாக.

‘ சிங்கமும் கழுதை ஈரல்
தின்னவும் இல்லை ; வீண
அங்கொரு நரிதான் வஞ்சித்து
அழைத்துப்போய்க் கொல்லு வித்துத்
தங்குல ஓரிக் கெல்லாம்
தான்இரை கொடுத்த தன்றே ?
பங்கமாய் அறிவில் லாமல்
பட்டது கழுதை தானே. 46

*வீண = வீணாக, அன்றே = அல்லவா ? பங்கமாய் = இடரடைந்து, பட்டது = அழிந்தது.*

‘ அப்படி நீயும் என்னை
அழைக்கில்உன் வார்த்தை கேட்டே
மெய்ப்பட வாரேன் ; வந்தால்
விரைந்துநீ கொல்லு தற்குத்
தப்பிலை ; இதுதான் நிற்க ;
தன்உண்மை தன்னைச் சொல்லித்
துப்பறு குலாலன் கெட்ட
கதையொன்று சொல்லக் கேளாய் : 47

*மெய்ப்பட = உண்மையாக, துப்பறு = (துப்பு + அறு) அறிவற்ற, குலாலன் = குயவன்.*

## 4. குயவன் கதை

### *கலி விருத்தம்*

‘ **உதிட்டிரன்** எனுமொரு குயவன் ஓர்சிறு
பதிக்கணே உறைந்துமண் பாண்டம் செய்குவோன்
பிதிர்க்கும்ஓ டொன்றுமுன் பீற லால்இள
மதிப்பிள வெனவடு வயங்கும் நெற்றியான். 48

*பதிக்கண் = ஊரில், பிதிர்க்கும் = (சூளையிலிருந்து) சிதறிய, பீறலால் = கிழித்தலால், இள மதிப்பிளவு = பிறைச் சந்திரனது கீற்று, வடு = தழும்பு, வயங்கும் = விளங்கும்.*

'கார்வளம் குன்றியே காணும் பஞ்சத்தால்
சீர்வளம் ஒன்றும்ஓர் தேயத் தெய்தினன் ;
போர்வளம் ஒன்றும்அந் நாட்டின் பூபதி
வார்வளம் ஒன்றிவன் வடுவைக் கண்டனன். 49

கார் வளம்=மழை வளம், பஞ்சம்=கருப்பு, ஒன்றும்=பொருந்தும், பூபதி=அரசன், வார்=நீட்சி.

'கன்றிய போரில்முன் காயம் பட்டவன்
என்றுசே னுபதி தலைமை ஈந்தனன் ;
வன்திறல் வேந்தன்ஓர் வைகல், 'யார்பொருது
ஒன்றிய வாளின்வெட் டுரை,' என் றேதினன். 50

கன்றிய=கோபித்த, சேனுபதி=படைத் தலைவன், வைகல்=நாள், பொருது=சண்டையிட்டு, ஒன்றிய=பொருந்திய.

'இழித்திடு குயவன்யான் ; இதுவு மோ,உறை
கழித்தவாள் வெட்டன்று ; கடத்தின் ஓடுமுன்
கிழித்தெ'தன் றிட,உளம் நாணிக் 'கீழ்மையோய் !
பழித்தல்செய் வார்எனைப் பாரின் வேந்தரே. 51

இழித்திடு=பிறர் தாழ்த்திப் பேசுகின்ற, இதுவுமோ=இவ் வடுவோ, கடம்=மண் பாண்டம், கீழ்மையோய்=தாழ்வுடையவனே.

'தீதுறு நின்குலம் தெரிவ தற்குமுன்
போதுக,' என்றிறை புகலப் 'போரினில்
யாதினும் எனைவெல்வார் இல்லை ; ஆதலால்,
நீதியன் றென்னைநீ நீக்கல்,' என்றனன். 52

போதுக=செல்வாயாக, இறை=அரசன்.

'நின்குலம் போரினில் நேர்வ தன்று ; நீ
கொன்படு சிறுநரிக் குட்டி போல்துளேல் ;
என்பயன் ?' என்ன,'அக் கதைஎன் ?' என்றலும்
வன்புறு வேந்தனும் வகுத்துச் சொல்லுவான் : 53

நேர்வது=ஈடுபடுவது, கொன்படு=அச்சம் பொருந்திய துளேல்=துள்ளாதே, என் பயன்=இப்படித்துள்ளுவதால் பயன் என்ன? வன்பு உறு=வலிமை வாய்ந்த.

## 5. நரிக்குட்டிக் கதை

'குட்டிகள் இரண்டுடைக் கொடிய கேசரி
பெட்டையை நோக்கி,'உன் பிள்ளை கட்குணத்
தட்டற ஈகுவன்; தனிவி டாதுநீ
மட்டறும் அன்பினுல் வளர்த்தி யால்,'என்றே 54

கேசரி = சிங்கம், பெட்டை = பெண் சிங்கம், உணு = தீனி, தட்டற = குறைவில்லாமல், ஈகுவன் = தருவேன், தனி விடாது = தனியே விடாமல், மட்டறும் = அளவற்ற, வளர்த்தி = வளர்ப்பாயாக, ஆல் = அசைச்சொல்.

'உறும்உண வளித்துவாழ் நாளில் ஓர்தினம்
சிறுநரிக் குட்டியைப் பற்றிச் சென்'றிதைக்
கறியெனக் கொள்க,'என் றளிப்பக் கண்'டிது
பெறும்அழகு உடைத்தெ'தனப் பெட்டை எண்ணியே 55

கறி = பதார்த்தம், உடைத்து = உடையது.

'குறியதன் குட்டிக ளோடும் கூட்டியே
நறியஊன் உணவினைத் தந்து நாள்தொறும்
பிறிவற வளர்த்திட வளர்ந்த பின்னொர்நாள்
அறிவுறு மூன்றும்அங் கடவி புக்கவே. 56

குறிய = சிறிய, நறிய = மணம் பொருந்திய, ஊன் = இறைச்சி, அறிவுறு = (இரைதேடும்) அறிவு பொருந்திய, அடவி = காட்டில், புக்க = புகுந்தன.

'நண்ணிஓர் கரிதனை நரியின் குட்டிதான்
கண்ணுற நோக்கியே ஓடக் கண்டிடம்
அண்ணிமற் றிரண்டும்பின் அதனை நோக்கியே,
'ஒண்ணுமோ ஓடுதல் உனக்கெ'கன் றேசலும் 57

கரி = யானை, அண்ணி = நெருங்கி, மற்றிரண்டும் = மற்றச் சிங்கக் குட்டிகள் இரண்டும், ஒண்ணுமோ = பொருந்துமோ, ஏசலும் = கேலி செய்யவே.

'நரிபெறு குட்டியும், 'வ்லியின் நான்மிகப்
பெரியன் !'என் றுறுகலாம் புரியப் பின்பிதைப்
பரிவொடு வளர்த்தபெண் சிங்கம் பார்த்'திது
தெரிவிலா துரைத்தனை ; செய்தி கேள்,'என 58

வலியின் = வலிமையால், உறுகலாம் = பெருங்கலகம், பரிவொடு = அன்புடன், என = என்று சொல்லி.

'நீயொரு சம்புவின் குட்டி ; நின்னைநான்
மாய்வில்என் குட்டிக ளொடும்வ ளர்த்தனன் ;
தீயநின் குலந்தனைத் தெரியின் என்மகார்
காய்வர் !'என் றுரைத்தலும் கடிதில் நீங்கிற்றே.' 59

சம்பு = நரி, மாய்வு இல் = (தங்கள் பிறப்பை) மறைத்தல் இல்லாத, மகார் = பிள்ளைகள், காய்வர் = கோபிப்பர், கடிதில் = விரைவில்.

'களிப்புற வேந்திதைக் கழறி, 'நின்குலம்
வெளிப்படா முன்னர்நீ விரைந்து போகெ'கன,
ஒளிப்பொடு குலாலனும் ஓடி னான்,'என
நளிப்புனல் முதலைதான் நவின்ற தென்பவே. 60

வேந்து = அரசன், கழறி = சொல்லி, போகென = (போக + என) போவாயாக என்று சொல்ல, ஒளிப்பு = மறைவு, குலாலன் = குயவன், நளிப்புனல் = குளிர்ச்சியான நீர், நவின்றது = சொல்லிற்று, என்ப = என்று சொல்லுவர்.

சொன்னஅம் முதலைக்குச் சுமுக வானரம்,
'கன்னியர் கிருத்திர மத்தைக் காணரிது !'
என்னலும், 'யாதினால் இசைக்கின் றாய் ?'என,
'இன்னதால்' என்றொரு கதைஇ சைக்குமால் : 61

கிருத்திரமம் = வஞ்சனை, காணரிது = காண்பது இயலாது, இன்னதால் = இதனால்.

## 6. கணவனை வஞ்சித்த கதை

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

'மிக்கதா ராவனத்தில் மேவும் சத்ய
விரதனும் பார்ப்பானுக் குரிய தேவி
தொக்கபெருஞ் சண்டையிட்டுக் குடும்பந் தன்னைத்
தூறுபுரி வாள்;அவள்மேல் ஆசை கொண்ட
தக்கபெரு வேதியனும் அவள்மோ கத்தால்
சஞ்சாரம் செயநினைந்தோர் கானிற் சென்றுன்;
மைக்கணியும் நடையாலும் வெயிலி னுலும்
வருந்தி,'நீர் வேண்டும்,'என வாய்விண் டாளே. 62

தூறு புரிவாள் = பழி உண்டாக்குவாள், சஞ்சாரம் = பிரயாணம், கான் = காடு, மைக்கணி = கரிய கண்களையுடையவள், வாய் விண்டாள் = சொன்னுள்.

'பேதை!நீ இங்கிரு,'என் றுரைத்துப் பார்ப்பான்
பெயர்ந்தனன்நீர் கொண்டுவரும் முன்னே மாது
சாதலும்விண் வாணி,'நின்றன் வயதிற் பாதி
தருதியேல், உய்வள்,'எனச் சாற்றக் கேட்டே
ஈதலும்அங் கவள்பிழைத்தே ஏகும் போதோர்
இசைபாடும் முடவனைக்கண் டிச்சை வைத்து,
'வேதிய!நீ தனிவிட்டுப் போம்போ தெல்லாம்
வெருவேன்இம் முடம்துணை யாய் மேவின்,'என்றுள். 63

பேதை = பெண்ணே, மாது = பெண், விண் வாணி = அசரீரி, உய்வள் = பிழைப்பள், இசை = இராகம், முடவன் = நொண்டி, இச்சை = விருப்பம், வெருவேன் = பயப்பட மாட்டேன், முடம் = முடவன், மேவின் = அமைந்தால்.

'இவள்கருத்தை அறியாவே தியனும் நன்றென்று
இம்முடவன் றனக்கும்சோ றீந்து வந்தான்;
அவள்ஒருநாள் துரவோரத் திளைப்பாய்த் தூங்கும்
அந்தணனை அதனில்விழத் தள்ளி இந்தப்

பவமுடவன் றனையெடுத்துக் கொண்டோர் நாட்டிற்
படர்ந்தனள் ;அந் நாட்டிறைவன் இவளைப் பார்த்துக்
'கவலையில ளாய்முடமாம் புருடன் றன்னைக்
காக்கின்றுள் கற்பின்மிக்காள் !' எனவி யந்தான். 64

*துரவு = பெருங்கிணறு, பவமுடவன் = பிறவி நொண்டி, படர்ந்தனள் = சென்றுள்.*

'தங்கைஇவள் எனமுறைகொண் டுடையும் சோறும்
தான்அளித்து வேந்திருக்க, மறையோன் உய்ந்தே
அங்குவரல் கண்டஅவள் இறையை நோக்கி,
'அவன்எனது புருடனுக்குப் பகைஞன்,' என்ன,
'இங்கிவனைச் சிறையிடுமின்,' என்ன வேந்தன்
இயம்புதலும், மறையவன்முன் நிகழ்ந்த தோதத்
திங்கள்நெடுங் குடைவேந்தன் உண்மை தேர்ந்து
தெரிவைக்குத் தக்கதண்டம் செய்திட் டானே. 65

*வேந்து = அரசன், உய்ந்து = பிழைத்து, இறை = அரசன், பகைஞன் = விரோதி, திங்கள் நெடுங்குடை = சிறந்த சந்திர வட்டக் குடை, தெரிவை = பெண்.*

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

'அங்கவ்வே தியனைப் போக்கி
அரசனும் இருந்தான் ; வஞ்ச
நங்கையர் தம்பேச் சுக்கு
நற்செவி கொடுக்க லாகாது ;
அங்கவர் சொற்குக் காது
கொடுத்தர சனும்அ மைச்சும்
பங்கம்உற் றனர்கள்,' என்று
பகர்ந்தனன் குரங்கு வேந்தன். 66

*போக்கி = போகச் செய்து, அமைச்சு = மந்திரி, பங்கம் = அவமானம்.*

## 7. மகளிர் சொற்கேட்டு மானம் இழந்த கதை

முதலை,'அக் கதைஎன் ?' என்ன,
' முன்புநந் தனன்என் வேந்தன்
இதமுறு மனையாள் ஊட,
எத்திறச் சமாதா னத்தும்
சிதைவில ளாய்,'நீ வாயில்
திகழ்கடி வாளம் கொண்டுன்
முதுகின்மேல் எனையெ டுத்து
முற்படக் கனைத்தா யானுல் 67

ஊட = பிணங்க, சிதைவிலளாய் = கோபம் நீங்காதவளாய்.

'உன்னுரை தனக்குக் காது
கொடுப்பன்,'என் ருேத, அப்போது
அன்னவன் அவள்மோ கத்தால்
அப்படிச் செய்யக் கேட்டுத்
தன்னிகர் அமைச்சன் இல்லும்
பிணங்கி,'நீ தலைம ழித்துப்
பின்இடம் வலம்செய் தென்னைப்
பெரிதுறுப் பெட்டும் ஐந்தும் 68

இல்லும் = மனைவியும், பிணங்கி = ஊடல் கொண்டு, மழித்து = மொட்டையடித்து, இடம் வலம் செய்து = இடசாரி வலசாரியாகச் சுற்றி வந்து, பெரிது = மிகவும், உறுப்பு எட்டும் ஐந்தும் = எட்டு அவயவங்களும் ஐந்து அவயவங்களும்.

'பரிவுடன் நிலத்தில் தோயப்
பணிவையேல் உனக்கென் இன்பம்
தருவன்,'என் றிட,அ மைச்சன்
சாற்றிய வண்ணம் செய்தான் ;
வரருசி என்னும் அன்னேன்
மறுதினம் சபையில் எய்த,

அரசன்,'நீ முண்டி யாய்இங்கு
அடுத்ததென் ?' என்று கேட்டான். 69

பரிவுடன் = அன்புடன், தோய = படிய, பணிவையேல் = வணங்குவாயானால், முண்டி = மொட்டை.

'மந்திரி, அரச ரே!நீர்
வாசிபோல் கனைத்த தாலே
இந்தமுண் டிதம்எ னக்கும்
எய்திய'தென் று கூற,
அந்தநற் சபையில் உள்ளார்
யாரும்இவ் வாறு தேர்ந்து
புந்தியுள் நகைகொண் டார்கள் ;
புரவலன் நாணம் கொண்டான். 70

வாசி = குதிரை, முண்டிதம் = மொட்டை, புந்தியுள் = மனத்திற்குள், நகை = சிரிப்பு, புரவலன் = அரசன், நாணம் = வெட்கம்.

'மாதர்க ளுடனே வீணாய்ப்
பேசினும் மருவும் பாவம் !
ஆதலால், இல்லாட் காநீ
அடுத்தெனைக் கொலநி னைத்தாய் !
தீதது !' என்னும் போது,
'செத்தனள் மனைவி !' என்று
கோதறு வன்மீன் ஒன்று
குறுகிநின் றுரைத்த தன்றே. 71

மருவும் = சேரும், இல்லாட்கா = மனைவிக்காக, கோதறு = குற்றம் அற்ற, வன்மீன் = முதலை.

தன்பிரி வால்இ றந்தாள்
தாரம்என் றுரைக்கக் கேட்ட
வன்கராக் குரங்கைப் பார்த்து,
'வானர வேந்தே ! நானும்
புன்மையேன் ஆத லாலே
பொல்லாங்கும் அடைந்தேன் ; உன்னை

இன்மைசெய் திடநி னைத்தே
இட்டன்அல் லேனும் ஆனேன் !' 72

**தாரம்=மனைவி, வன்கரா=கொடிய முதலை, புன்மையேன்= அற்பக்குணமுடையேன், பொல்லாங்கு=தீமை, இன்மை செய் திட=கொன்றுவிட, இட்டன்=நண்பன்.**

என்றிடக் குரங்கு சொல்லும் :
'எனைக்கொல நினக்குச் சொன்ன
துன்றுநின் மனைவி துட்டை ;
ஆதலால், துயரம் கொள்ளேல் ;
அன்றெனில், பிறற்கு டம்பட்-
டிருந்தஓர் அரிவை தன்னை
நன்றுமுன் நரிசி ரித்த
நற்கதை போலாம்,' என்ன 73

**துன்று=(தீக்குணம்) பொருந்திய, துட்டை=தீயவள், பிறற்கு உடம்பட்டு =அயலானுக்கு இசைந்து, அரிவை=பெண், நன்று= நன்றாக.**

## 8. நரி சிரித்த கதை

'சம்புதான் எவளைப் பார்த்துத்
தான்நகைத் திட்ட தென்ன,
'**சம்பகா வதி**என் றோதும்
தக்கசீர்ப் பட்ட ணத்தில்
சம்பம்இல் கிழவன் **தேவ-**
**தத்தனும்** சாவ காரி ;
**சம்பகக் குழலி** அன்னான்
தாரம்,சோ ரஞ்செய் வாளே. 74

**சம்பு=நரி, சம்பம்=ஆடம்பரம், சாவகாரி=பெரிய வர்த்தகன், சோரம்=விபசாரம்.**

'பெண்டிழந் திடும்ஓர் தூர்த்தன்
பெரிதும்தன் னிடத்தில் நேசம்
கொண்டதை அறிந்தாள் ; வீட்டில்
கொட்டிவைத் திருந்த பொன்னைக்

கண்டெடுத் தவனைத் தேயம்
காணவே அழைத்துக் கொண்டு
வண்டிமிர் குழலாள் சென்றாள் !
வழியில்ஓர் ஆறு கண்டார். 75

*பெண்டு = மனைவி, தூர்த்தன் = வஞ்சகன், தேயம் காண = அயல் இடங்களைப் பார்க்க, வண்டு இமிர் குழலாள் = வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையுடையவள்.*

'பொருளைமாத் திரம்தான் கொண்டு
போகவே அவன்நி னைத்தே,
'அரிவை ! நீ கட்டிக் கொண்ட
ஆடைமுன் ஆன எல்லாம்
வெருவுரு தளிப்பை யாகில்,
மிகுந்தநீர் ஆற்றைத் தாண்டி
மருவவைத் திட்டு நின்னை
வந்துபின் பழைத்துப் போவேன். 76

*அரிவை = பெண்ணே, வெருவுருது = பயப்படாமல், மருவ வைத்திட்டு = பத்திரப்படுத்தி வைத்துவிட்டு.*

'என்ன,' அப் படிசெய்,' என்றாள் ;
எடுத்துக்கொண் டோடிப் போனான் ;
பின்அவள் நாணத் தாலே
பெரிதரை அமிழ்ந்து நீரில்
மன்னிநின் றனள் ; அப் போதோர்
வனநரி இறைச்சி தன்னை
அந்நதி அருகே வைத்தங்கு
அடுத்தமீன் றன்னைக் கௌவ 77

*அரை அமிழ்ந்து = பாதி மூழ்கி, கௌவ = பற்ற.*

'மீனமும் தப்பிற் றந்த
இறைச்சியை மேவி ஓர்புள்
தானெடுத் தாகா யத்திற்
பறந்தது ; சம்பு கம்தான்
வானினைப் பார்க்க, மங்கை,
'வானைப்பார்த் தாவ தென்ன

ஈனம்இல் நரியா ரே !' என்று
இசைக்க, அந் நரிதான் பார்த்தே 78

புள் = பறவை, சம்புகம் = நரி, ஈனம் = இழிவு. இசைக்க = சொல்ல.

'சோரனை நம்பி யேநின்
கணவனைத் துறந்த தேபோல்
நாரியே! எனக்கும் வந்தது !'
என்றது நகைப்ப, இவ்வாறு
ஓரும்இங் கிவர்கள் வாக்கு
வாதஞ்செய் துறுங்கால் சாவ-
காரியும் அறிந்து மாதைக்
கண்டித்துத் தள்ளி விட்டான். 79

சோரன் = கள்ளப்புருடன், நாரியே = பெண்ணே, ஒரும் = அசைச் சொல்.

'ஆகையால், இல்லாள் சாகைக்கு
அல்லல்நீ உறுமல் உன்றன்
சாகைசேர்,' எனக்க ராவும்
தன்னிடம் சேர்ந்து பார்க்க,
வாகைசேர் முதலை ஒன்று
மருவிடப் பார்த்து மீண்டே,
'ஓகைசேர் குரங்கே! யானும்
உறைவிடந் தனக்குச் சென்றேன். 80

இல்லாள் = மனைவி, சாகைக்கு = மரணத்திற்கு, சாகை = இருப்பிடம், வாகை = வெற்றி, மருவிட = சேர்ந்திருக்க, ஓகை = (உவகை) மகிழ்ச்சி.

'வன்மைசெய் முதலை ஒன்று
வந்ததில் இருந்த தையா !
இன்மைசெய் ததனைத் தள்ள
இயம்புவாய் உபாயம்,' என்ன,
நன்மைசெய் சுமுகன் சொல்லும் :
'நன்றியைக் கொன்ற பாவி !

புன்மைசெய் மூட னுக்குப்
போதித்தால், அன்ன வன்றுன் 81

வன்மை = கொடுமை, இன்மைசெய்து = கொன்று, புன்மை = இழிசெயல்.

## 9. குரங்கு குருவிக் கூட்டைக் கலைத்த கதை

'வீடுடை யவனை வீட்டை
இழந்திடச் செய்வான்,' என்ன,
நாடுறும் முதலை, 'அந்த
நற்கதை உரைப்பாய்,' என்ன,
நீடுறு குரங்கு சொல்லும்:
'நெடியதோர் பழும ரத்தில்
கூடுகொண் டனஇ ரண்டு
தூக்கணங் குருவி தாமே. 82

பழுமரம் = ஆலமரம்.

'குளிரினுல் நடுங்கி வானக்
கொடுமழை யால்ந னைந்து
நளிர்சுரத் தோடு தேகம்
நடுங்கியே பற்கள் கிட்டி
வளமறு குரங்கொன் றங்கு
வந்தது; குருவி பார்த்தே
இளகிய மனத்தி னுலே
இன்சொலால் ஒன்று சொல்லும்: 83

நளிர் சுரம் = குளிர் காய்ச்சல்.

''கைகள்கால் இருந்தும் இந்தக்
கன்மத்தை அனுப விக்கும்
செய்திஎன்?' என்ன, 'ஊசி
மூஞ்சிகொள் சிறிய மூடா!
வைதுநீ புத்தி சொல்ல
வல்லையோ?' எனக்கோ பித்து

நெய்திடும் அதன்நற் கூட்டை
நெடுங்கையாற் பிய்த்த தன்றே. 84

கன்மத்தை = துன்புறும் செயலை, செய்தி = காரியம், வைது = இகழ்ந்து, வல்லையோ = வல்லமை உடையையோ, நெய்திடும் = அழகாகத் தொடுத்திடும், நற்கூடு = அழகிய கூடு, பிய்த்தது = கலைத்தது, அன்றே = அசைச்சொல்.

'ஆதலால், கீழா னோர்கட்கு
ஆர்உப தேசித் தாலும்
தீதுறும்,' என்று சொல்லச்
சிஞ்சுமா ரனும்உ ரைக்கும் :
'கோதுடை யேன்நா னேனும்
கூறுவாய் ஓர்உ பாயம்
நீதியோய் !' என்னச் சொல்லும்
நெடியவா னரத்தின் வேந்தே : 85

கோதுடையேன் நானேனும் = (நான் கோதுடையேனேனும்) நான் குற்ற முடையேன் எனினும்.

'நின்பகை யொடுபோர் செய்து
நீஇறந் திடிற்சு வர்க்கம் ;
பின்பவன் பொருதி றந்தால்
பெரிதும்நின் இடம்கி டைக்கும் ;
முன்பொரு புத்தி சாலி
முறைமையில் நாலு பேர்க்கும்
இன்பொடு செய்தாற் போல
இயற்றிட வேண்டும்,' என்றான். 86

சுவர்க்கம் = மோட்சம், பொருது = சண்டை செய்து, பெரிதும் = பெரும்பாலும், இன்பொடு = மகிழ்வுடன்.

## 10. நரி நால்வர்க்கும் நான்கு உபாயம் செய்த கதை

*கலிநிலைத்துறை*

'இறந்த யானையைத் தின்னஓர்
இகலன்அங் கெய்தச்
சிறந்த சிங்கமொன் றடைந்து,'நீ
யார் ?' எனச், சிறியேன்

மறங்கொள் நீகொன்ற யானையைக்
காத்திங்கு வதிந்தேன்
அறம்த வாச்சிங்க அரசனே !'
என்றதந் நரியே. 87

இகலன்=நரி, மறம்=வீரம், வதிந்தேன்=தங்கியிருந்தேன், அறம் தவா=தருமம் தவருத.

'ஈது நான்கொன்ற தன்று ;நீ
கொள்க,' என் றிசைத்துப்
போத மற்றெருரு புலிவந்து,
'யார் ?' என, நரியார்,
'மாதுலா !இதை மடித்தகே
சரிஒன் றங் குளதால்
'ஓது வேங்கைஇங் குறில்எனக்
குரை,' என ஒளித்தே, 88

போத=செல்ல, மாதுலா=அம்மானே, மடித்த=கொன்ற, கேசரி=சிங்கம், உளதால்=இருக்கின்றது, ஆல்=அசை, ஓது= சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, வேங்கை=புலி, இங்குறில்= இங்கு வந்து சேர்ந்தால்.

'என்ன காரணம் அதற்கெனில்,
வேங்கைஒன் றெய்தி
முன்னெர் யானையைக் கொன்றுதான்
மூழ்கப்போம் காலைத்
துன்னி எச்சில்ஆக் கியதெ'னச்
சொல்லலும் வேங்கை
பின்னர் எண்ணியே, 'மருமக-
னே!நினற் பிழைத்தேன் !' 89

துன்னி=நெருங்கி, சொல்லலும்=சொன்ன உடனே.

'என்று சொல்லிமுன் ஓடியது ;
இதன்பின்ஓர் குரங்கு
துன்ற நோக்கி,'இக் கரியினைத்
துண்ணெனக் கிழித்துத்

தின்று போ!'எனக் குரங்கதைக்
கிழித்தது ; ' சிங்கம்
நன்று வந்தெ'தன் றுரைத்திட
நடுங்கிஓ டியதே. 90

துன்ற = வந்து சேர, துண்ணென = விரைவாக.

' பக்கு வம்செய்து குரங்குபோ
தலும்நரி பார்த்துத்
தக்க தென்றுணப் போம்பொழு
தொருநரி சார்ந்து
கைக்கொ ளற்கெண, அதையடித்
தோட்டியே கடிதில்
தொக்க வெம்பசி தொலைந்திட
உண்டது நெடுநாள். 91

கடிதில் = விரைவில், தொக்க வெம்பசி = மிகுந்த கொடும்பசி.

' சாம பேதம்நல் தானதண்
டஞ்செய்த சம்பு
தீமை நீங்கிய தென்னநின்
பகைவர்க்குச் செய்து
நீமு யங்கிடத் திருந்திடு;
வேறிடம் நிற்கில்
நாம வெந்துயர் நணுகும்,'என்
றிசைத்தது குரங்கு. 92

சாமம் = சமாதானம், பேதம் = மாறுபாடு, சம்பு = நரி, முயங்கிடத்து = சேரும் இடத்தில், நாமவெந்துயர் = அச்சத்தை விளைக்கும் கொடுந்துன்பம், நணுகும் = அடையும்.

## 11. நாயைக் கடித்த கதை

சிஞ்சு மாரனும், ' யாதினல் ?
அதுதெரித் திடுகெ'ன்று
அஞ்சி ஓதலும், ' அயோத்தியில்
இருக்கும்ஓர் சுணங்கன்,
பஞ்சம் எய்தலால் வேறொரு
தேசத்திற் படர்ந்து
துஞ்சின் நீங்கிஓர் மாதுதான்
சோறிட இருந்தே 93

தெரித்திடுக = தெரியச் செய்க, சுணங்கன் = நாய், பஞ்சம் = கருப்பு, படர்ந்து = சென்று, துஞ்சின் நீங்கி = சோர்வடைதலி னின்று நீங்கி, மாது = பெண்.

'சிறிது நாட்சென்ற பின்பந்தத்
திருமனை விடுத்து
மறுகின் உற்றிட, மற்றைநாய்
யாவும்மேல் விழுந்தே
இறுதி வந்தெனக் கடித்தலும்
எழுந்தஃ தோடி
மறுவி லாததன் நகரிடை
நொடியில்வந் ததுவே. 94

திருமனை = நல்ல வீடு, மறுகின் உற்றிட = தெருவில் வர, இறுதி வந்தென = மரணமடைந்தாற்போல, மறு = குற்றம்,

'வந்த பின்னர்அவ் வூரிடை
மருவிய நாய்கள்,
'அந்தத் தேயம்நற் றேயமோ?'
என,'அகல் புவியுள்
எந்தத் தேயத்தும் நல்லதத்
தேயம்;நம் இனத்தில்
பந்த ஒற்றுமை இன்மையால்
பலித்ததிவ் விடரே.' 95

மருவிய = வாழ்ந்த, தேயம் = இடம், அகல் புவி = விசாலமான உலகம், பந்தம் = கட்டுப்பாடு, பலித்தது = ஏற்பட்டது.

'ஆத லால்,தன திடத்தினில்
அமர்ந்திடல் இனிதாம்;
நீதி யால்அந்த முதலையை
நீவெற்றி கொள்வாய்;
போதி,' என்றலும் முதலையும்
போய்ப்பொரு ததனை
வீதல் செய்துதன் இடத்தினில்
மேவிவாழ்ந் ததுவே. 96

போதி = செல்வாயாக, பொருது = சண்டை செய்து, அதனை = அப்பகை முதலையை, வீதல் செய்து = அழியச் செய்து (கொன்று), மேவி = பொருந்தி.

V

# அசம்பிரேட்சிய காரித்துவம்

[காரியத்தைத் தேற விசாரியாமற்செய்தல்]

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

சுருதிஅந் தத்தும் தில்லைத்
தொல்லைமன் றத்தும் அன்பர்
உருகுநெஞ் சத்தும் ஆடல்
உகந்தபே ரொளியைப் போற்றி
மருவிய பஞ்ச தந்த்ர
வகையில்முன் நான்கு சொன்னோம்;
கருதரும் அசம்பி ரேக்ஷ்ய
காரித்வம் சொல்லு வோமே. 1

சுருதி அந்தம் = வேதத்தின் முடிவு, தில்லை = சிதம்பரம், தொல்லை = பழமை, பேரொளி = கடவுள், போற்றி = துதித்து.

ஐவகைத் தந்தி ரத்தில்
ஆதிஓர் நான்கும் அந்த
மெய்வகை மறையோன் சொல்ல
வேந்தனூர் மைந்தர் ஓர்ந்தே,
'செய்வகை உபாய மாம்தந்-
திரமெலாம் தெளிந்தோம் ஐயா!
கைவரும் அசம்பி ரேக்ஷ்ய
காரித்வம் சொல்லு'கென்றார். 2

ஓர்ந்து = அறிந்து, கை = ஒழுக்கம்.

அரசனூர் குமரர் கேட்க,
'யாதொரு கரும மேனும்
திரமொடு விசாரி யாமல்
செய்யஒண் ணுது; செய்தால்,
வரம்மிகு கீரி தன்னை
வளர்த்ததைக் கொன்று பின்னர்த்

தரணியில் மறையோன் வீழ்ந்து
தவித்தது போலாம்,' என்ருன். 3

கருமமேனும்=செயல் எனினும், திரமொடு=உறுதியோடு, ஒண்ணுது=கூடாது, வரம்=மேன்மை, தரணி=பூமி.

## 1. கீரிப்பிள்ளை கதை

என்ன,'அக் கதைஏ தென்ருர்;
'எழில்பெறு கௌட தேச
மன்னவன் றனக்கு நித்தம்
வந்துபஞ் சாங்கம் சொல்வோன்
தன்னது தேவி கர்ப்பம்
தரித்திலள் அதனுல் கர்ப்பம்
என்னஓர் கீரி தன்னை
எடுத்தவர் வளர்த்தார் மன்னே. 4

கர்ப்பம்=கரு, கீரி=கீரிப்பிள்ளை, மன்னே=அசைச்சொல்.

புத்திர வாஞ்சை யாலே
புல்குவன்; மடிமேல் வைப்பன்;
முத்தமும் இட்டுக் கொள்வன்;
முந்தியே பாலும் சோறும்
துய்த்திட அளிப்பன்; மார்பில்
தூங்கவும் படுத்திக் கொள்வன்;
மெத்தவும் களித்து நெஞ்சில்
விருப்புடன் வளர்த்த பின்னர் 5

புத்திர வாஞ்சை=மகனிடத்தில் அன்பு, புல்குவன்=தழுவுவன்; முந்தியே=தான் சாப்பிடுவதற்கு முன்னமே, துய்த்திட=சாப்பிட.

மனையவள் யாக சேனி
வயிற்றினிற் கருப்பம் கண்டே,
'சுனைவளர் குவளை உண்கண்
தோகைநல் லாளே! நீயோர்
தனையனைப் பெறுவாய்; அன்னுன்
சதுமறைத் தலைவ ஞகி,

நினையும்நம் குலமும் காப்பன் ;
நிதியமும் படைத்து வாழ்வன். 6

குவளை = நீலோற்பல மலர், உண்கண் = மையுண்ட கண்கள், தோகை நல்லாளே = மயில் போலும் அழகியே, தனையன் = மகன், அன்னான் = அவன், சதுமறை = நான்கு வேதங்கள்.

'வயதொரு நூறி ருப்பன் ;
மன்னவன் சித்தம் மெச்ச
நயபுரோ கிதமும் சொல்லி
நலங்களும் பெறுவன்,' என்றே
தயவொடு தேவ சன்மா
சாற்றலும், தேவி யான
கயல்நெடுங் கண்ணாள், 'என்ன
காரியம் சொன்னாய்! நன்றே! 7

சித்தம் = மனம், புரோகிதம் = பஞ்சாங்கம் சொல்லுதல் கயல் = கெண்டை மீன், நன்றே = இது நன்றாயிருக்கிறது.

'காணுமுன் கேட்கும் முன்னே
காரியங் களைநி னைந்து
வீணிலே பூமி யின்மேல்
விழுந்துருண் டழுது நெஞ்சம்
நாணினன் பிரம சாரி ;
நாடில்அங் கதுபோல் நீயும்
பூணணி மார்ப! வீணே
புகலவொண் ணா'தென் றாளே. 8

நாணினன் = வெட்கமடைந்தான், நாடில் = ஆராய்ந்தால், பூண் = ஆபரணம்.

## 2. பொரிமாத் தோண்டியை உடைத்த கதை

'உரைத்தஅக் கதையே'தென்ன,
'ஓதும்ஓர் நகரந் தன்னில்
தரித்திர பிரம சாரி
சார்ந்தொகு சிராத்தத் துண்டான் ;

அரைத்திடும் பொரிமாத் தோண்டி
அவற்கொரு மறையோன் ஈந்தான் ;
திருத்தியிற் பருப்பும் சோறும்
தின்றதோர் மயக்கத் தாலே 9

பிரமசாரி = மணம் ஆகாதவன், சிராத்தம் = இறந்தவருக்காகச் செய்யும் வருடத் திதி.

'மற்றொரு நகர்க்குச் செல்லும்
வழியில்ஓர் மணல்த டத்தில்
சற்றொரு கணப்போ தங்கே
தரித்தவன் இருந்து நெஞ்சில்
உற்றகா ரியங்கள் கோடி
உன்னினன் : 'இந்த மாவை
விற்றுநாம் ஆடு வாங்கி
மேய்க்கில்ஓர் இரண்டு குட்டி 10

தடம் = இடம், கணப்போது = விநாடிநேரம், தரித்து = தங்கி, உன்னினன் = நினைத்தான்.

'போடும் ;அவ் விரண்டில் ஒன்றும்
பொலிகடாத் தன்னை விற்று
நாடுபெண் ஆடி ரண்டு
நயவிலை யாகக் கொள்வேம் :
ஆடொரு நாலாம் ; அந்த
ஆடுகள் இரண்டி ரண்டாப்
போடும்அக் குட்டி யோடே
பொருந்திய பனிரண் டாமே. 11

பொலி கடா = ஆடுகளைச் சினையாக்கும்பொருட்டு வளர்க்கப்படும் ஆட்டுக்கடா, நாடு = விரும்பத் தகுந்த, நயவிலை = மலிவான விலை.

'பன்னிரண் டாடும் விற்றுப்
பசுக்கள்ஓர் இரண்டு கொள்வோம் ;
தன்னிலே பட்டி மேய்ந்து
தருக்கியே இரண்டும் ஈனும் ;

மன்னுபால் நெய்யும் விற்று
மற்றிரு பசுவும் கொள்வோம் ;
அன்ன அப் பசுக்கள் ஆறும்
ஆறுசேங் கன்று நல்கும். 12

தன்னிலே = தன் இச்சைப்படி, பட்டி மேய்ந்து = ஊரார் இடும் பயிரை மேய்ந்து, தருக்கி = கொழுத்து, ஈனும் = கன்றுபோடும், அன்ன = அப்படிப்பட்ட, சேங்கன்று = ஆண் கன்று, நல்கும் = ஈனும்.

'மூவணை ஏரும் கூட்டி
முன்உள நிலங்கள் எல்லாம்
ஓவற வளங்கள் ஆக
உழுதுநாம் பயிர்கள் இட்டே
மேவுதா னியங்கள் எல்லாம்
விலைகளைக் குறைய விற்றுக்
காவலன் அறிக்கை யாலே
கனக்கவோர் வீடு கட்டி 13

மூவணை = மூன்று ஜதை, ஓவற = நீங்காமல், காவலன் = அரசன், அறிக்கை = கட்டளை, கனக்க = சிறப்பாக.

'இருந்துநாம் பணமும் காசும்
ஏரொடு பொருளும் தேடிப்
பொருந்திய பிராம ணர்க்குப்
போசனம் இடுவோம் ; இட்டால்,
வருந்தியே நமக்குப் பெண்ணும்
வலியவே தருவார் ; அந்தத்
திருந்திழை யாளும் நாமும்
செருக்கிஅங் கிருக்கும் நாளில் 14

ஏரொடு = அழகுடன், போசனம் = உணவு, வருந்தி = கெஞ்சி, வலிய = பலவந்தமாக, திருந்திழையாள் = அழகிய ஆபரணங்களை அணிந்தவள், செருக்கி = மகிழ்ந்து.

'மாரனும் இரதி தானும்
மருவிய வாறு நாமும்
சேருவோம் ; சேர்ந்து நல்ல
சேயையும் பெற்றெ டுத்துப்
பேருறு **சோம சன்மா**
என்றுபேர் இட்டவ் வூரில்
காரகத் தனுமாய் வாழ்வு
கனம்பெற இருப்போம் என்றும். 15

மாரன் = மன்மதன், இரதி = மன்மதன் மனைவி, மருவிய = சேர்ந்த, சேய் = பிள்ளை, பேருறு = பெருமை மிகுந்த, காரகத்தன் = (கிருகஸ்தன்) இல்லறத்தான், கனம் = பெருமை.

'அப்படி இருக்கும் நாளில்
அந்தியில் பசுக்கள் கட்டக்
கொப்படர் கண்ணுள் செல்லக்
குழந்தையும் அழும் ;நாம் ஓடி
இப்படி அடிப்போம் அங்கே !'
என்றொரு தடியெ டுத்துச்
செப்பிய பொரிமாத் தோண்டி
சிதறிட அடித்திட் டானே. 16

அந்தி = மாலை நேரம், கொப்பு அடர்கண்ணுள் = காதணியைத் தொடும் நீண்ட கண்களை உடையவள், சிதறிட = சுக்கலாய் உடைய.

'கலங்கினன் பிரம சாரி;
காரகத் தங்கள் எல்லாம்
துலங்கிய பொரிமா வைத்த
தோண்டியோ டழிந்த தன்றே !
மலங்குகண் ணீர்கள் சோர
வயிற்றினில் அடித்துக் கொண்டே
நிலந்தனிற் புரண்டு வீழ்ந்து
நெடுந்துயர் அடைந்தான் அன்றே. 17

காரகத்தங்கள் = இல்லற விவகாரங்கள், மலங்கு கண்ணீர் = ததும்பிய கண்ணீர்த்துளிகள், அன்றே = அசை.

## 3. கீரிப்பிள்ளையைக் கொன்ற கதை

'ஆதலால், காணும் முன்னே
அகத்தினுள் நினைக்கொ ணு'தன்று
ஓதிய யாக சேனி-
யுடன்அவன் இருக்கும் நாளில்
தீதிலா முகூர்த்தந் தன்னில்
செல்வனும் பிறந்தான்; அந்தச்
சூதகம் கழிக்கும் நாள்ஓர்
சுனையினில் மூழ்கப் போனுள். 18

அகத்தினுள் = மனத்தினில், முகூர்த்தம் = சுபவேளை, செல்வன் = மகன், சூதகம் = குழந்தை பிறந்த தீட்டு, சுனை = நீர் நிலை.

'ஆயிழை போகை யாலே
ஆரணம் முழுதும் வல்லோன்
சேயினைக் காத்தி ருந்தான்;
சிராத்தம்என் றரசன் தூதர்
'நீயவண் வருக!' என்ருர்;
'நேரமும் சென்று போனுல்
போயதை எல்லாம் வேறு
புரோகிதர் கொண்டு போவார்' 19

ஆய் இழை = அழகிய ஆபரணத்தை அணிந்தவள், ஆரணம் = வேதம், சேயினை = பிள்ளையை, அவண் = அங்கு, அதை எல்லாம் = சிராத்தத்தால் கிடைப்பதை எல்லாம்.

'என்றுதன் மனத்தில் எண்ணி
இன்பமா வளர்த்த கீரி
தன்துணை ஆக அந்தத்
தனயனை வைத்து நீங்கிச்
சென்றனன்; அரசன் வீட்டில்
சிரார்த்தமும் முடித்துப் பெற்ற
பொன்துகில் அரிசி எல்லாம்
பொதிகளில் ஏற்றுக் கொண்டே 20

தனயன் = பிள்ளை, பொன் = தட்சிணை, துகில் = ஆடை, பொதி = மூட்டை.

'வருமுனே சேயைக் கிட்டி
வந்ததோர் நாகம் ; அந்தக்
கரியநா கத்தைக் கீரி
கடித்திரு துண்டம் ஆக்கிக்
குருதிவாய் எங்கும் ஆகக்
கொண்டுசந் தோடம் காட்ட
அருமறை யோன்முன் சென்றது ;
'ஆ !கெடுத் தாயோ!' என்றே 21

குருதி = இரத்தம், சந்தோடம் = மகிழ்ச்சி, ஆ = இரக்கக்குறிப்பு.

'தண்டினுல் அடித்துக் கொன்ருன் ;
தளர்வொடு வீட்டில் வந்தான் ;
கண்டனன் பிள்ளை; முன்னே
கரியபாம் போஇ ரண்டு
துண்டமாக் கடிக்கப் பட்டுத்
தூரவே கிடக்கக் கண்டான் ;
மண்டிய துயர மாகி
வயிற்றினில் அடித்துக் கொ:ண்டான் ; 22

தண்டு = தடி, மண்டிய = மிகுந்த.

'வாயிலும் அடித்துக் கொண்டான் ;
மண்ணையும் போட்டுக் கொண்டான் ;
'சேயிலும் அதிக மான
சேயைநான் கொன்றேன் !' என்ருன் ;
'நீயெனக் கெதிரே வந்து
நின்றெனைக் கெடுத்தாய் !' என்று
போயதன் மேல்வி ழுந்து
புரண்டுருண் டரற்றி ஞனே. 23

சேயிலும் = பிள்ளையைக்காட்டிலும், அரற்றினன் = அழுதான்.

‘தேவியும் மூழ்கி வந்தாள்;
தேவசன் மாவை நோக்கி,
‘பாவி!இங் கேது கீரிப்
பாலகன் இறந்த தென்றே
ஓவென அலறி நின்ருள்;
உற்றவா றவனும் சொன்ஞன்;
காவிஅம் கண்ணி தானும்
கனல்இடு மெழுகொத் தாளே. 24

ஏது = என்ன காரணம், காவி அம் கண்ணி = நீலோற்பல மலர்போலும் அழகிய கண்களை உடையவள், கனல் = நெருப்பு.

## 4. நாவிதன் இறந்த கதை

‘ஐயையோ! விசாரி யாமல்
அருங்கொலை வந்த தே!நாம்
செய்யுமா றென்ன?’ என்றே
தேவசன் மாவை நோக்கி,
‘கையற விசாரி யாமல்
கண்டது கொண்ட டித்து
நையவே இறந்து போன
நாவிதன் கதைபோன்ம்,’ என்ருள். 25

விசாரியாமல் = ஆலோசியாமல், அருங்கொலை = நீக்க இயலாத கொலைப் பாவம், கையற = துக்கப்பட, நைய = வருத்த, நாவிதன் = அம்பட்டன், கதை போன்ம் = கதைபோலும் (போன்ம் = மகரக் குறுக்கம்)

‘நாவிதன் கதையே தென்ன,
‘நகரமொன் றதிலோர் செட்டி
தேவிதான் பிள்ளை பெற்ருள்;
‘தீயநாள் முகூர்த்தத் தாலே
சாவர்தாய் தந்தை; இச்சேய்
தரித்திரன் ஆகிப் பின்பு

மேவும்நற் செல்வம்,' என்று
விளம்பினர் கணித நூலோர். 26

சேய் = பிள்ளை, மேவும் = அடைவான், கணித நூலோர் = சோதிடர்.

'பயந்துதான் வணிகன் அந்தப்
பாலனை எறிந்து போட்டான்;
அயர்ந்தவன் மனைவி மூர்ச்சை
ஆகியே வீழ்ந்தி றந்தாள்,
'நயந்தரு தேவி போனாள்;
நமக்கினி வாழ்வே ?'தன்று
சயந்தரு வணிகன் ஆவி
தானகப் போக்கிக் கொண்டான். 27

எறிந்து = முறித்து, அயர்ந்து = சோர்ந்து, நயம்தரு = நன்மை செய்கின்ற, சயந்தரு = வெற்றியை உண்டாக்கும், ஆவி = உயிர், 'சயந்தரு' என்பதை 'ஆவி' என்பதோடு கூட்டிப் பொருள் கொள்க.

'இப்படி இவர்கள் செத்தார்;
இவையெலாம் அரசன் கேட்டே
தப்பற வணிகன் ஈட்டும்
தனமெலாம் எடுத்துப் போனன்;
'முப்பழி ஆமோ ?' என்று
முதியள்ஓர் தாதி அந்தக்
குப்பையில் எறிந்து போட்ட
குழவியை எடுத்துப் பார்த்தாள். 28

தப்பற = தவருமல், ஈட்டும் = சம்பாதிக்கும், தனம் = செல்வம்; முப்பழி = மூன்று பாவம், முதியள் = கிழவி, தாதி = வேலைக்காரி; குழவி = குழந்தை.

'இழைத்தநாள் வராமை யாலே
எத்தனை சிறுமைப் பட்டும்
பிழைத்தது கிடக்க அந்தப்
பிள்ளையை எடுத்துப் போய்த்தான்

உழைத்ததன் கூலி யாலே
ஒருத்தியை முலைகொ டுக்க
அழைத்துவந் தவள்மு லைப்பால்
அருத்துவித் தவள்வ ளர்த்தாள். 29

இழைத்த நாள் = மரணத்திற்கு விதித்த நாள், சிறுமை = துன்பம், அருத்துவித்து = உண்ணச் செய்து.

'வளர்ந்தனன் செட்டி பாலன்
வயதொரு பதினு ருயும்
இளந்தலைப் பட்டுக் கொண்டே
இருந்தனன் தரித்தி ரத்தால்
உளந்தடு மாறி ஓர்நாள்
உறங்கிய போதில் ஆங்கோர்
வளந்தரு சித்தன் வந்து,
'வருந்தநீ வேண்டா; இன்றே 30

இளந்தலை = சிறுமை, சித்தன் = அற்புதங்களைச் செய்யத் தகுந்தவன்.

'விடியுமுன் எழுந்தி ருந்து
வீடெலாம் சுத்தி பண்ணி
முடிமயிர் இறக்கிக் கொண்டு
மூழ்கிவெண் ணீறு பூசித்
தடியும்ஒன் றெடுத்துக் கொண்டு
தனிமனை முன்றில் தன்னில்
கடிகைமூ வைந்து மட்டும்
காத்துநீ இருக்கில் ஆங்கே 31

முடிமயிர் இறக்கிக்கொண்டு = மொட்டையடித்துக்கொண்டு, வெண்ணீறு = விபூதி, தனி மனை = தனித்த வீடு, முன்றில் = வாயில், கடிகை = நாழிகை.

'மதியமாம் வேளை தன்னில்
வருவர்பிட் சைக்கு மூவர்;
பதறிடா தெழுந்தி ருந்து
பார்த்துநீ அவரை மூளை

சிதறிட அடித்தால், அந்தச்
சித்தர்கள் மூவர் மூன்று
நிதிகளாய் இருந்து நெஞ்சில்
நினைத்தது தருவார்,' என்றான். 32

மதியம்=மத்தியானம், நிதி=செல்வம்.

'விழித்தனன், அவனைக் காணான்,
வீடெலாம் சுத்தி பண்ணி
அழைத்துநா விதன்கை யாலே
அவன்பணி கொண்டு, மூழ்கிக்
குழைத்துவெண் ணீறு பூசிக்
கூறிய நேரம் மட்டாக்
கழைத்தடி கையிற் கொண்டு
காத்தவன் இருந்தான் மன்னே. 33

மட்டா=அளவாக, கழை=மூங்கில், மன்னே=அசை

'அப்படித் தானே மூவர்
அந்தவே ளையினில் வந்தார்;
கொப்பெனத் தடியி னாலே
கொண்டவன் அடித்த போதில்
தப்பற அவரும் அங்கே
தமனியம் ஆகக் கண்டான்;
செப்பிய வாறெ டுத்துத்
திருமனை தனில்வைத் தானே. 34

கொப்பென=விரைவாக, தமனியம்=பொன், செப்பியவாறு=சொல்லியபடி.

'கண்டனன் நாவி தன்றான்
கருதியவ் வாறு தானும்
முண்டிதன் ஆகி வந்த
மூவரைத் தடியால் மோத,
விண்டுயிர் இறந்தார்; அந்த
வேளையிற் காவ லாளர்

கண்டனர் அவனை ஐயோ!
கழுவினிற் போட்டு விட்டார்! 35

முண்டிதன் = மொட்டைத்தலையன், விண்டு உயிர் இறந்தார் = உயிர் நீங்கி இறந்தார், கழு = கழுமரம்.

'தீரவே விசாரி யாமல்
செய்யும்ஓர் கருமத் தாலே
பாரிய மனோவி யாதி
பற்றிடும்; உயிர்க்கும் கேடாம்;
காரியம் தப்பி னாலும்
கருதிஓர் குறிப்பி னாலே
தேருவார்க் கின்பம் எய்தும்
செட்டியார் கதைபோல்,' என்றாள். 36

கருமம் = செயல், பாரிய = பெரிய, மனோ வியாதி = மனநோய்.

## 5. செட்டியார் கதை

'செட்டியார் கதையே தென்னத்
'திருந்தும்ஓர் பட்ட ணத்தில்
மட்டிலாச் செல்வ னான
வணிகனும் **குபேர தத்தன்**
கட்டழ குடைய தேவி
**காமசஞ் சீவி**; அந்த
மட்டுலாம் குழலாள் ஈன்ற
மைந்தனும் **அனங்க மித்ரன்**. 37

மட்டு இலா = அளவில்லாத, கட்டழகு = பேரழகு, மட்டு உலாம் = வாசனை வீசும், குழலாள் = கூந்தலையுடையவள்.

'தேவியும் வணிகன் றானும்
சேயொடு செருக்கி வாழ்ந்து
மேவிஅங் கிருக்கும் நாளில்
விரிகடற் கப்பல் ஏறிப்
போவது கரும மாகப்
புந்தியில் வணிகன் எண்ணிக்

'காவிஅம் கண்ணி! நீயுன்
கற்பினை விடாதே,' என்றும் 38

செருக்கி = களித்து, விரிகடல் = விசாலமான சமுத்திரம், புந்தி = மனம், காவி = குவளை மலர்

'சேயினைப் 'பூர்வ வத்துச்
சேர்ந்திடில் விடாதே; செம்பொன்
ஆயிரம் கழஞ்சா னலும்
அளித்ததைக் கொள்வாய்,' என்றும்
போயினன் கப்பல் ஏறிப்
புயலினல் திசைபு ரண்டோர்
மாயிருந் தீவு சேர்ந்து
வாணிபம் செய்தி ருந்தான். 39

பூர்வ வத்து = பழைய பொருள், கழஞ்சு = ஓர் அவுன்ஸில் ஆறில் ஒரு பங்கு எடை, புயல் = சூருவளி, புரண்டு = மாறி, மாயிருந்தீவு = மிகப் பெரிய தீவு.

'அங்கவன் மீண்டு செல்ல
அனேகநாள் சென்ற; அந்தப்
பைங்கொடி ஈன்ற பாலன்
படித்தனன் கலைகள் எல்லாம்;
இங்கிது நிற்க; வேருேர்
எழில்நக ரத்தில் வாழும்
துங்கமா மறையோ னன
சோமசன் மாஎன் பானும் 40

சென்ற = கழிந்தன, பைங்கொடி = பசுங்கொடி போன்றவள், எழில் = அழகு.

'ஓதினன் கலைகள் எல்லாம்
உலககெலாம் புகழ; நித்தம்
தாதைஇங் கிவனைச் சீறத்
தாய்தனை நோக்கி, 'யானும்
போதுவன் பரதே சத்தில்;
புகலுநின் கணவற் கெ'ன்றே

கோதமாய்ச் சொன்னன் ; பின்னும்
கொடுங்தொழில் நினைந்து மீண்டான். 41

ஓதினன் = கற்றுன், தாதை = தந்தை, சீற = கோபிக்க, போது வன் = செல்வேன், பரதேசம் = அயலூர், கோதம் = (குரோதம்), கோபம், கொடுங்தொழில் = கொலைத் தொழில்

'இவனைநாம் கொல்வோம்,' என்றே
எண்ணிஓர் கல்லைக் கொண்டு
கவடமாய்ப் பரணில் ஏறிக்
கரந்தனன் ; தாயும் காணுள் ;
தவளநூல் மார்பன் வந்து,
'தனயன்உண் டனளே ?' என்ருன் ;
'அவனைநாம் எங்கே காண்போம் !
அவன்பர தேசம் போனுன்.' 42

கரந்தனன் = ஒளிந்தான், தவளம் = வெண்மை, தனயன் = மகன்.

'என்னவே கலங்கி, 'மைந்தன்
ஏதினுற் போனுன் ?' என்று
தன்னிரு கண்ணீர் வாரச்
சதுமறை யோனும் கேட்டான் ;
அன்னவள் அழுது கொண்டே
'அருங்கலை கற்ற பிள்ளை,
தன்னைஎங் நேரம் சீறும்
தன்மையாற் போனுன்,' என்ருள். 43

ஏதினுல் = என்ன காரணத்தால், வார = ஒழுக, சதுமறை யோன் = நான்கு வேதங்களையும் கற்ற பார்ப்பனன்.

'பேதையே ! நாம்பு கழ்ந்தால்,
பிள்ளைதான் செருக்க டைந்து
போதனை மறப்பான் என்று
புத்தியே சொன்னேன்,' என்ருன் ;
'பாதகம் நினைந்தோம் !' என்று
பரணினும் இறங்கி வந்து

தாதைபா தத்தில் வீழ்ந்தான் ;
 தனயனைத் தழுவிக் கொண்டான். 44

பேதையே = அறிவில்லாதவளே, போதனை = ஞானம், பாதகம் = பாவச்செயல்.

'மைந்தனும், 'ஐயா! உன்னை
 வதைத்திட நினைந்த பாவம்
எந்தமா தவத்தால் நீங்கும்?
 எனக்கருள் செய்வாய்!' என்ன,
அந்தணன், 'நீபோய் நின்வேட்
 டகத்திலே சிலநாள் உற்றால்
சிந்தையில் நினைந்த பாவம்
 தீரும் ; நீ செல்க,' என்றான். 45

வேட்டகம் = மாமனார் வீடு.

'ஏகினான் சோம சன்மா ;
 எதிர்கொடு வந்தார் அந்த
மாகவே தியர்கள், 'எங்கள்
 மாப்பிளை வந்தான்!' என்றே ;
பாகுபால் பருப்பு நெய்தேன்
 பாயசம் பண்ணியா ரங்கள்
ஓகையாய் விருந்து செய்தார் ;
 உண்டுகொண் டவன் இருந்தான். 46

எதிர்கொடு = எதிர்கொண்டு, மாகம் = திசையில் உள்ள, பாகு = சர்க்கரை, ஓகை = மகிழ்ச்சி.

'தினமொரு நீதிப் பாட்டுச்
 சீட்டினில் எழுதிக் கட்டித்
தனதுமஞ் சத்தின் மேலே
 தலையணைக் கீழே வைத்தான் ;
பினைவர வரவெ றுத்துப்
 பேசினார் ; ஒருநாள் அன்னான்

மனைவியை அழைத்து, 'நீதான்
வருக்கவொண் ணுதோ ?' என்றார். 47

**மஞ்சம் = கட்டில், பினை = பின்பு, வருக்க வொண்ணுதோ = சொல்லக் கூடாதோ?**

'என்னநான் சொல்ல ?' என்றாள் ;
" இப்படி நீர்இ ருந்தால்
பொன்இலை செல்வுக் கென்று
புகலுநீ,' எனச்சொன் னார்கள் ;
மின்னும்அவ் வாறே சொன்னாள் ;
வேதியன் சீட்டில் ஒன்றை
அன்னவள் கையில் ஈந்'தீது
ஆயிரம் பொன்,'என் றானல். 48

**மின்னும் = மின்னலை ஒத்தவளும்.**

'தையலும் சீட்டை வாங்கித்
தமையனார் கையில் ஈந்தே,
'மெய்விலை ஆயி ரம்பொன் ;
விற்றுநீ வருக,' என்றாள் ;
கையிலே வாங்கி மிக்க
கவிதையை வாசித் தந்த
ஐயன்,'ஈ தாயி ரம்பொன்
அதிகமே பெறுங்காண் !' என்று 49

**தையல் = அழகி, ஐயன் = பார்ப்பனன்.**

'போயினன், பட்ட ணத்தில்
புகுந்தனன், சீட்டைக் காட்டி,
'ஆயிரம் பொன்ஈ தென்றான் ;
அவரவர் வாங்கிப் பார்த்துப்
'பேய!போ !' என்றார் ; கொண்டு
பின்னுமோர் தெருவி னிற்றன்

வாயிலில் வரும்போ தந்த
வணிகஞர் மைந்தன் கண்டான். 50

பேய = பேயனே, வாயிலில் = வீட்டின்முன், வணிகஞர் மைந்தன் = செட்டியார் புதல்வனை அனங்கமித்திரன்.

'சீட்டிதன் விலைசொல்,' என்ருன்;
'செம்பொன்ஆ யிரமாம்; ஈது
தாட்டிகர் கொள்வர்,' என்ருன்;
தான்அவை எண்ணி நல்கிச்
சீட்டினை வாங்கிக் கொண்டோர்
செய்யபட் டாலே சூழ்ந்து
வீட்டிலே தூங்கும் மஞ்சம்
மேலுறத் தூக்கி வைத்தான். 51

தாட்டிகர் = பெரியோர், நல்கி = கொடுத்து, செய்ய = சிவந்த, சூழ்ந்து = சுற்றி, தூக்கி = தொங்கவிட்டு.

'செட்டியும் ஈரைந் தாண்டு
சென்றபின் திரும்பி வந்து
பட்டணக் கரைகண் டோடிப்
பாய்களும் இறக்கி நாவாய்
விட்டொரு படகில் ஏறி,
வீட்டினில் கருமம் பார்க்க
ஒட்டியே பாதி அல்லில்
ஒளித்துவந் தகத்திற் புக்கான். 52

நாவாய் = கப்பல், கருமம் = நடைபெறும் செயல், ஒட்டி = பதுங்கி நின்று, அல்லில் = இரவில், புக்கான் = புகுந்தான்.

'அன்னையும் தானும் கூடி
அருந்திஓர் தூங்கும் மஞ்சந்-
தன்னிலே உறங்கக் கண்டு
தான்,'இவன் சோரன்,' என்று
மின்னும்வாள் உறைக ழித்து
வெட்டவே செல்லும் போது

மன்னிய சீட்டுத் தொங்க,
'மற்றிதே'தென்று பார்த்தான். 53

*தான் = வணிகன், சோரன் = கள்ளப் புருடன்.*

'பட்டினூற் சூழ்ந்து கட்டிப்
பாதுகாப் புற்ற சீட்டை
விட்டுவா சித்தான், 'ஒன்றும்
விசாரியா மற்செய் தோர்கள்
கெட்டுமாய்ந் திடுவர்; பின்னும்
கேடற விசாரித் தோர்கள்
மட்டிலாச் செல்வம் பெற்று
வாழ்வர்,' என் றிருந்த தன்றே. 54

*விட்டு = பிரித்து, கேடற = குற்றம் நீங்க.*

'சீட்டினை மெல்ல வைத்துச்
செறியிருள் விடிந்த பின்பு
வீட்டினில் வந்தான்; அந்த
மென்கொடி பணிந்து நின்றாள்;
தாட்டிக மைந்தன் றானும்
தாளினில் வீழ்ந்தான்; தன்பெண்-
டாட்டியை, 'இவன் ஆர்?' என்றான்;
'அனங்கமித் திரனும்,' என்றாள். 55

*செறியிருள் = அடர்ந்த இருள், அனங்கமித்திரனும் = அனங்க மித்திரனவன்.*

'புல்லினன், மோந்து கொண்டான்,
புதல்வனை அருகி ருத்தி,
மெல்லியல் தன்னை நோக்கி
விளைந்தவா றுரைத்தே, 'இந்த
நல்லசீட் டாற்பி ழைத்தான்
நம்பி!' என் றவனை நோக்கிச்
'சொல் இதே'தென்று கேட்டான்:
சொல்லுவான் நிகழ்ந்த வண்ணம்: 56

புல்வினன் = தழுவினன், இருத்தி = அமரச் செய்து, நம்பி = மக்களுள் சிறந்தவன் (செல்லப் பெயர்).

'நீயெனக் குரைத்துப் போன
நீதியை நினைந்து கொண்டே
ஆயிரம் செம்பொன் ஈந்தே
ஐய!யான் கொண்டேன்,' என்றான்;
சேயினைத் தழுவிக் கொண்டு,
'செம்பொன்ஓர் கோடி அன்றோ
நீயெனக்கு!' என்று கூறி
நேசமாய் வாழ்ந்தி ருந்தான். 57

அன்றோ = அல்லவா? நேசமாய் = அன்பாய்.

'கண்ணினிற் காணு முன்னம்
கருத்தினில் விசாரி யாமல்
பண்ணும்ஓர் கருமத் தாலே
பாவமும் பழியும் வந்து
நண்ணிடும்; உயிர்க்கும் கேடாம்;
நலமுடன் தெளிந்து செய்தால்
புண்ணியம் கீர்த்தி மிக்க
பொருளும்வந் தெய்தும்,' என்றாள். 58

கருத்தினில் = மனத்தில், நண்ணிடும் = சேர்ந்துவிடும், கீர்த்தி = புகழ், எய்தும் = சேரும்.

'பின்னும்வே தியனை நோக்கிப்
பேசுவாள் யாக சேனி:
மன்னும்என் கருப்பம் கண்டு
மகிழ்ந்துநீ உரைத்த எல்லாம்
நன்னெறி அல்ல; வீணாய்
நகைக்கிடம் ஆகும் என்று
முன்னமே சொன்னேன்; இன்று
முடிந்ததீ வினைபார்!' என்றே. 59

நகைக்கு = கேலிச்சிரிப்புக்கு.

' ஆர்க்கும்பே ராசை ஆகாது ;
அந்தணன் ஒருவன் முன்னாள்
தீர்க்கரு வறுமை தன்னைத்
தீர்க்கும்நாள் வந்த போது
போர்க்கும்பே ராசை கொண்டு
பொருந்தினன் துயரம்,' என்றாள் ;
' தார்க்குழால்! அதுசொல்,' என்னத்
தையலும் சாற்ற லுற்றாள் : 60

*வறுமை = தரித்திரம், தார்க்குழால் = மலர் மாலையை அணிந்த கூந்தலை உடையவளே, சாற்றலுற்றாள் = சொல்லத் தொடங்கினாள்.*

## 6. பேராசை கொண்டு பேதுற்ற கதை

### *அறுசீர் ஆசிரிய விருத்தம்*

' மன்னும் அமரா வதிமேவும்
மறையோர் நால்வர் வறுமையினால்
இன்னல் அடைந்தோர் யோகிதனை
எய்தி, ' இதனைத் தீர்த்தருள்நீ,'
என்ன வேண்ட அவன்றான்ஈ-
ரிரண்டு சித்தி தமையெண்ணிப்
பன்னும் அவர்தம் தலைமீது
பரிந்தொவ் வொருவர்த் தியைவைத்து 61

*இன்னல் = துன்பம், யோகி = சித்த புருடன், சித்திதமை = சித்திகளை, பன்னும் = தம் வேண்டுகோளைச் சொல்லும், வர்த்தி = திரிச்சீலை.*

' நீவிர் இமய வரைநோக்கி
நெடுந்தூ ரஞ்சென் றிடின்எவன்மேல்
மேவு வர்த்தி விழுகின்ற-
தவனுக் கங்கே வேண்டும்நிதி
பூவின் இருக்கும் ; கொள்க,' என,
போனார் ; போகும் வழிநடுவே

தாவில் ஒருவன் வர்த்திவிழக்
கண்டான் அங்குத் தாமிரமே. 62

**மேவுவர்த்தி=பொருந்திய திரி, பூவின் = பூமியில், தா இல் = குற்றம் இல்லாத, தாமிரம்—செம்பு.**

'மூவர் தமக்கும் காட்டி,' இதை
முறையால் வாரிக் கொள்வம்,' எனக்
கூவ; 'நீயே கொள்க;இதில்
கூடும் பயனென்?' என அவனும்,
'தேவன் நமக்குத் தந்ததிது,'
என்னக் கொண்டு சென்றனன் ;பின்
ஆவல் உறும்மூ வரும்போம்போ-
தங்கே வீழ்ந்த தொருவனுக்கே. 63

**முறையால்=முறைப்படி, கூவ=அழைக்க, கூடும் பயன்= உண்டாகும் பலன்.**

'வெள்ளி தனைக்கண் டவனுமவ்வா-
றுரைக்க, மேலும் ஆசையுற்ருர்,
'உள்ள துனக்கே இது,'என்ன
உரைத்தார் ; உற்ருன் அவன்கொண்டு;
மெள்ளச் செல,அங் கொருவற்கு
வீழத் திரிபொன் உறல்கண்டு,
'கொள்ளு வாமீ திருவரும்,'என்-
ருேதக் கொளும்பே ராசையால் 64

**உற்ருன்=(வெள்ளியைப்) பெற்ருன், ஒருவற்கு=ஒருவனுக்கு, உறல்=இருப்பதை.**

'நீயே கொள்ளெ'கன் றுரைத்தொருவன்
நீங்க, 'நீயும் வந்தபின்பு
தூயோய் ! ஊர்க்குச் செல்வம்,'எனச்
சொல்ல, 'விரைவின் வந்திடுவன் ;
தாயே அனையாய் ! இரு,'என்று
சாற்றிப் போனன்; அவ்விடத்துச்

சாயா தொருசக் கரம்ஒருவன்
தலையிற் சுழலக் கண்டனனுல். 65

**தூயோய்=பரிசுத்தமானவனே, செல்வம்=போவோம், அனையாய்=போன்றவனே, சாற்றி=சொல்லி.**

'கண்டு, 'நீயார்? உன்மேற்சக்-
கரந்தான் சுழலும் காரணமென்?
விண்டு புகல்,' என்றிட அவனை
விட்டுக் கேட்ட இவன்தலைமேல்
பண்டு சுழன்ற தெனச்சுழலப்
பயங்'தீ தென்னே! கிணறுவெட்ட
மிண்டு பூதம் புறப்பட்டாற்
போல விளைந்த வேதனையே!' 66

**விண்டு புகல்=விவரித்துச் சொல், பண்டு=முன்பு, ஈது என்னே=இஃது என்ன ஆச்சரியம், மிண்டு பூதம்=வலிய பூதம்.**

'என்னக் கவலை யுடன்அவனைக்
கேட்க, அவனும் இயம்புவான்:
'முன்னைக் குபேரன் சாபத்தால்
என்மேற் சுழன்ற முனையாழி
உன்னைக் கண்டால் தீருமென
உரைத்தான்; அன்னே! அவ்வாறே
நின்னைக் கண்ட எனைவிடுத்தது,'
எனலும், வர்த்தி நெடுந்தலையன் 67

**குபேரன்=அஷ்டதிக்குப் பாலகருள் வடதிசைக்கு உரியவன்; இயக்கர் தலைவன்; பெருஞ்செல்வத்தினை உடையவன், முனை ஆழி=கூர்மையான சக்கரம், அன்னே=ஐயோ.**

'வருந்திப்' பிள்ளை யார்பிடிக்கக்
குரங்காய் முடிந்த வாறதுபோல்
பொருந்திற்றெ'றன்று துன்புற்றுப்
'புகலாய் இங்கெத் தனைநாளா

இருந்திட் டனே ?"என் றிடக்'காலம்
எனக்குத் தெரியா ; சீராமன்
திருந்தப் புவியாள் காலம்,' என்று
செப்பி னுன்முன் திகிரிதரன். 68

புகலாய் = சொல்வாய், புவி = பூமி, சீராமன் புவியாள் காலம் = திரேதாயுகம், முன் திகிரிதரன் = முன்பு சக்கரத்தைத் தரித்திருந்தவன்.

'தருவார் நீர்சோ றுர் ?"என்னத்
'தாகம் பசியிங் கில்லைஎனத்
திருவார் குபேரன் நிதிகவரச்
சேர்வார் தம்மை அச்சுறுக்கப்
பெரிதா வைத்த ஆழி,' எனப்
பேசி அகன்ருன் ; பின்புமுன்பு
பரிவாய்க் காத்த சுவர்ணசித்தி
பார்த்துப் பார்த்துக் கண்பூத்தே 69

திருவார் குபேரன் = செல்வம் பொருந்திய குபேரன், அச்சுறுக்க = பயப்படுத்த, ஆழி = சக்கரம், சுவர்ண சித்தி = பொன்னை அடைந்தவன், கண் பூத்து = கண் பார்வை மங்கி.

'தேடி வருங்கால் சக்கரந்தான்
சிரமேற் சுழல அவன்இருத்தல்
நாடி, 'இதுவென் ?' எனக்கேட்க,
'நண்பா ! பேரா சையின்வந்த
பாடு'டன் றுரைக்கச் சுவர்ணசித்தி
பயந்து, 'பிள்ளை வரந்தேடிக்
கூடு புருடன் றனைப்பறிதான்
கொடுத்தாற் போலா யிற்'றென்றே 70

பாடு = துன்பம், பறிகொடுத்தல் = இழத்தல்.

'சற்றே கலங்கிப் பின்தெளிந்து
சாற்றும் : 'வெள்ளைப் புத்தியினர்,
மற்ருேர் அறிவைக் கேளாமல்
மாண்ட சிங்கம் உயச்செய்து

கற்றே உறும்மந் திரவலியைக்
காட்டும் கதைபோல் ஆனதெ'ன்றன் ;
'மற்றே ததுசொல்,' எனக்கேட்க,
வகுப்பான் சுவர்ண சித்தியுமே : 71

**சாற்றும் = சொல்லுவான், வெள்ளைப் புத்தியினர் = அறிவில்லாதவர், வகுப்பான் = சொல்லுவான்.**

## 7. சிங்கத்தைப் பிழைப்பித்துச் செத்த கதை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

' துளசா புரத்தில் நால்வர்ஒரு
தொடர்பாய்க் கல்வி பயின்றோர்கள் ;
வளமார் அவருள் ஒருமூவர்
மந்தி ரத்தின் மிக்கமையால்,
தளமார் அரசன் றனைக்கண்டு
தங்கள் வித்தைத் திறங்காட்டி
ஒளியார் தனங்கள் மிகஈட்டற்கு
உன்னித் தம்முள் கூறுவார் : 72

**மிக்கமையால் = சிறப்படைந்ததால், தளமார் = சேனைகளையுடைய, ஒளியார் = பிரகாசம் பொருந்திய, ஈட்டற்கு = சம்பாதிப்பதற்கு, உன்னி = நினைத்து.**

' இவன்றன் மிக்க கல்வியிலன்;
எனினும் நம்மோ டிருந்துபடித்-
தவன்ஆ தலின்நாம் ஒருபங்கு
தருவோம்,' என்றங் குடனழைத்துப்
புவியாள் அரச னிடைப்போகும்
போதில் அந்த வழியினிடைச்
சவமாம் சிங்கந் தனைக்கண்டு
தம்மந் திரம்சோ திக்கஎண்ணி 73

**அரசனிடை = மன்னனிடம், சவம் = பிணம்.**

"'கற்ற வித்தை யாற்செத்த
கண்டீ ரவத்தை எழுப்புவேன்;
மற்றை யவர்க்குச் சம்மதமோ ?'
என்ன, மந்தி ரம்தெரியா-
துற்ற ஒருவன், 'எழுப்பில் அது
கொல்லும் !' என்ன உரைத்திடலும்
பற்றி அவனைத் தள்ள அவன்
பயந்தோர் மரத்தில் ஏறினன். 74

கண்டீரவம் = சிங்கம்

'எழுப்பி னர்; பின் பதுகொல்ல
இறந்தார் அம்மூ வரும்; இதனால்,
இழுக்கி லாத கல்வியினும்
அறிவே பெரி'தென் றிசைத்திடலும்,
ஒழுக்கம் அறுநே மித்தலையன்,
'ஊழே பெரி'தென் றொருகதைதான்
பழுத்த செம்பொன் பெற்றோற்குப்
பரிவ தாகப் புகல்வானே : 75

இழுக்கிலாத = குற்றமில்லாத, ஒழுக்கம் அறு = நல்ல நடக்கை அற்ற, நேமி = சக்கரம், ஊழ் = பழவினை.

## 8. அறிவின்மிக்க மீன்கள் இறந்த கதை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

'மறுவில் மகத தேயத்து
மலர்ப்பொய் கையினில் வீற்றிருக்கும்
அறிவா யிரத்தன் நூற்றறிவன்
எனுமீன் இரண்டோ டங்கிருக்கப்-
பெறும்ஓர் அறிவன் எனுந்தவளை
பிரியா துறைந்தது; அத்தவளை

உறுகால் வலைஞன் ஒருநாள் அங்கு
உற்றுப் பேசும் உரைகேட்டே 76

**மறுஇல் = குற்றமில்லாத, மலர்ப்பொய்கை = தாமரைக்குளம், உறுகால் = தங்கிய போது.**

'இருமீன் களையும் தான்நோக்கி,
'இங்கு நாளை வலைஞன் வந்து
'பெருமீன் எல்லாம் பிடிப்பன்' என்று
பேசினான்; யாம் இப்போதே
ஒருநீர்த் தடத்துக் கேகுவது
நன்மை,' என்ன உரைத்திடலும்,
'அருநீர் நடையின் மிகவல்லேன்,'
என்றான் அறிவா யிரத்தனே. 77

**வலைஞன் = செம்படவன், அருநீர் நடை = ஆழமான நீரில் சஞ்சரித்தல்.**

'நிலையிற் பெயரல் ஆகா'தென்-
றுரைத்தான் நிகழும் நூற்றறிவன்;
அலையில் திகழும் தவளை, 'நான்
அகல்வேன்,' எனப்போதலும்பின்னாள்
வலைஞன் மீனங் களையெல்லாம்
வாரிக் கொண்டு போம்போது
கொலையிற் படுதன் நட்பினரைக்
குலவோர் அறிவன் கண்டனனே. 78

**குலவோர் அறிவன் = (குலவு ஓர் அறிவன்) விளங்குகின்ற ஓரறிவுடையவன்.**

'பெட்டை தனக்கும் அதுகாட்டிப்
பேசும்: 'என்றன் சொற்கேளா
மட்டி அறிவா யிரத்தனொடு
வளர்நூற் றறிவன் சுற்றமொடு
பட்ட பாடும் எனதிருப்பும்
பார்!' என் றுரைத்த ததனாலே

தட்டில் மிக்க அறிவனையும்
தீயூழ் வந்து தடுக்கும்,' என்றான். 79

மட்டி = மூடன், பாடு = துன்பம், இருப்பு = வாழ்வு, தட்டில் = (தட்டு + இல்) குறைவில்லாத, தீயூழ் = கெட்ட விதி.

## 9. இசைபாடிக் கழுதை இடருற்ற கதை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

'பரிதி தரன்இவ் வாறுரைக்கப்
பைம்பொன் பெற்றேன், 'இசைபாடி
ஒருபுன் கழுதைக் குற்றதுபோல்
உனக்கிவ் விடர்தான் உற்ற'தெனத்
'தெரிய அதுகூ'றென்ன,' நெடுஞ்
**செவியல்** என்னும் ஒரு கழுதை
பொருவில் **சுமதி** நரியினொடு
புலத்திற் பயிர்மேய்ந் துறும்நாளில் 80

பரிதிதரன் = சக்கரத்தைத் தரித்தவன், புன்கழுதை = அற்பக் கழுதை, நெடுஞ்செவியல் = நீண்ட காதுகளை உடையது, பொருவில் = ஒப்பில்லாத, புலம் = வயல்.

'மேவும் ஒருநாள் விலாப்புடைகள்
வீங்க மேய்ந்து தேக்கெறிந்து
தாவில் கழுதை, 'நிலவெறிக்கும்
தண்ணார் இரவி னிற்பொழுது
போவ தற்குச் சங்கீதம்
புகல்வேன் ; நீகேள்,' எனநரியும்,
'கூவும் உனது குரல்கேட்டால்
கொல்வார் பயிர்காத் திடுவாரே !' 81

விலாப்புடை = விலாப்பக்கம், தேக்கெறிந்து = ஏப்பம்விட்டு, தா இல் = குறை இல்லாத, தண்ணார் இரவினில் = குளிர்ச்சி பொருந்திய இரவில்.

'என்று சொல்லக் கேளாமல்
இராகம் பாடக் குரல்கேட்டே
ஒன்று கழுதை எனஉழவர்
உடம்பு நுறுங்கப் புடைத்திட்டார் ;
அன்று நரிதான், 'மாமா !என்
பேச்சைக் கேளா அகந்தையினுல்
இன்று பட்டாய் !' எனஏசிற்று,'
என்ருன் பொன்பேற் றன்ருனே. 82

ஒன்று கழுதை = உண்மையான கழுதை, புடைத்திட்டார் = அடித்தார், அகந்தை = கர்வம், பட்டாய் = துன்பமடைந்தாய், பொன் பேற்றன் = பொன்னைப் பெற்றவன்.

## 10. தகா வரம் பெற்றுச் சாலியன் இறந்த கதை

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

'நிந்தைஇல் சுவர்ண சித்தி
நிகழ்த்திய கதையைக் கேட்டே,
'இந்தநற் கதைகேள்,' என்றே
இயம்புஞ்சக் கரத ரன்ருன் :
'நந்துறு தடங்கள் சூழும்
நாரண புரத்தில் வாழும்
மந்தர நாமன் தந்து
வாயன்வத் திரங்கள் நெய்வோன் 83

நிந்தை = பழிப்பு, இயம்பும் = சொல்வான், நந்துஉறு = நத்தைகள் வாழும், தடங்கள் = குளங்கள், மந்தர நாமன் = மந்தரன் என்னும் பெயருடையவன், தந்துவாயன் = கைக்கோளன்.

'தறிமரம் முறித லாலே
தக்கநல் மரம்வெட் டற்குச்
செறிவனந் தன்னிற் சென்று
திரிந்தொரு வாகை கண்டு
முறிபட வெட்டு தற்கு
முயலும்போ ததன்மேல் நின்ற

அறிவுறும் இயக்கன் நோக்கி
அவனெடும் ஒன்று சொல்வான் : 84

வாகை = கருவாகை மரம், இயக்கன் = தேவ வகுப்பான்.

'இந்தஎன் இடத்தை வெட்டாய்
என்னின், நீ இச்சை கொண்டு
வந்தநல் வரம்ஈ வேன்நான்,'
என்றனன் ; மகிழ்ந்து மீண்டு
நந்தல்இல் நட்பாய் உள்ள
நாவிதன் றன்னைக் கேட்க,
'மந்திரி ஆவேன் நான்;நீ
அரசனும் வரங்கேள்,' என்றான். 85

இச்சை = விருப்பம், நந்தல் இல் = கெடுதல் இல்லாத.

'மனைவியோ டிதையு ரைக்க,
மற்றவள், 'அரசு பெற்றால்
கனஇடை யூறு மேவும் ;
ஆதலால், காத லா!நீ
இனம்ஒரு தலையும் கைகள்
இரண்டும்பெற் றுற்ற யானல்
தினம்இரு தறிவி ரித்துச்
செய்யலாம் வேலை,' என்றாள். 86

கன இடையூறு = பெருந்துன்பம், இனம் = இன்னம்.

'மாலைஅம் குழலாள் சொன்ன
வார்த்தையே நல்ல தென்று
சாலியன் சென்று பெற்றுத்
தன்னகர் உற்றான் ; கண்டோர்,
'ஆலம்நேர் அரக்க னும் !' என்று
ஆளுக்கோர் கல்லைக் கொண்டு
மேலுற எறிந்தார் ; செத்தான்
மெய்விகா ரங்கொண் டோனே.' 87

*அம்குழலாள் = அழகிய கூந்தலை உடையவள், சாலியன் = கைக்கோளன், ஆலம் நேர் = விஷம் போன்ற, அரக்கனும் = இராட்சசன் ஆவன், மெய் விகாரம் = உடல் மாறுபாடு.*

சக்கர தரன்இவ் வாறு
சாற்றிய கதையைக் கேட்டே,
'இக்குவ லயத்தொ ருத்தற்கு
இதம்ஒழித் தகிதம் செய்தால்
துக்கமே அடைவர்,' என்று
சுவர்ணசித் தியும்உ ரைக்க,
'அக்கதை சொல்லு 'கென்ன,
அவன்றனக் கறைய லுற்றான் : 88

*சக்கரதரன் = சக்கரத்தைத் தரித்தவன், குவலயம் = பூமி, ஒருத்தற்கு = ஒருவனுக்கு, இதம் = நன்மை, அகிதம் = தீமை, சுவர்ணசித்தி = பொன்னை அடைந்தவன்.*

## 11. குரங்கு பழி வாங்கிய கதை

### *அறுசீர் ஆசிரிய விருத்தம்*

'தவம்மிகும் அயோத்தி ஆளும்
சந்திர சேனன், தன்சேய்
கவிகளின் ஆடல் காணும்
கருத்தறிந் தொருசா லைக்கண்
சவிபெறு குரங்க னேகம்
தான்வளர்த் திடும்அந் நாளில்
புவிபுகழ் அரசன் ஏவல்
புரிபவர் சண்டை யிட்டார். 89

*கவிகள் = குரங்குகள், சவி = அழகு, புவி = உலகம்.*

'ஒருகுரங் கதுகேட் டுத்தன்
உறவினுக் குரைக்கும் : 'இப்போர்
பெருகுறின் தீதாம்; மற்றோர்
வனத்தில்நாம் பெயர்வோம்.' என்ன

உரைசெயக் ‘கிழநின் சொற்கேட்டு
உண்பதை அரேும்,’என் றேவா-
னரமெலாம் இகழ்ந்து பேச
நடுங்கியங் கவற்றை விட்டே 90

பெயர்வோம் = நீங்கிச் செல்வோம், அரேம் = நீங்கோம், வானரம் = குரங்கு.

‘ தன்குடும் பத்தி ேேடோர்
கானிடைச் சார்ந்த தப்பால்
பின்பொரு நாள் அச் சண்டை
பெரிதுற அவரி லேயோர்
வன்பினன் கொள்ளிக் கட்டை
மற்றவன் மேலே வீச
முன்புறு குதிரைச் சாலை
மேலது மூண்ட தன்றே. 91

வன்பினன் = கொடியவன்.

‘ சாலையும் எரிய வாசி
தாம்சில இறந்த ; எண்ணில்
கோலவெம் புரவி தீயிற்
கொண்டன காயம் ; மன்னன் -
பாலடைந் ததனைக் காப்போர்
பகர்தலும், அங்நோய் தீர்க்கும்
சீலனை அழைத்து, ‘மாக்கள்
தீயின்நோய் நீக்கு ெ’கன்றுன். 92

வாசி = குதிரை, கோலவெம்புரவி = அழகிய விரும்பத் தகுந்த குதிரை, மன்னன்பால் = அரசனிடம், மாக்கள் = மிருகங்கள்.

‘ மருத்துவன், ‘குரங்கு நெய்யால்
அன்றிநோய் மாயா ெ’தன்றுன் ;
செருத்தொழில் இறைவன், ‘சாலை
சேர்ந்துள குரங்கை எல்லாம்

வருத்திஅந் நெய்யைக் கொண்டு
வாசிநோய் வாசி யாக்கெ'ன்று
உரைத்தனன் ; அவ்வா றேநோய்
ஒழித்தனர் மருத்து நூலோர். 93

மருத்துவன் = வைத்தியன், மாயாது = நீங்காது, செரு = போர், வருத்தி = கொன்று, வாசி = குதிரை, வாசியாக்கு = குணப் படுத்து, மருத்து நூலோர் = வைத்தியர்.

"'இப்பழி இறையி யிடத்தே
வாங்குவேன் !' என்று முன்போய்த்
தப்பிய கிழக்கு ரங்கு
தன்மனம் பதைத்தே எண்ணி
ஒப்பிலாப் பெருங்கா னத்தில்
ஒருகுளம் இருக்கக் கண்டு,
'வெப்புறு பேயொன் றிங்கு
மேவவே வேண்டும்,' என்று 94

இறை = அரசன், வெப்புறு = கொடுமை பொருந்திய, மேவ = தங்கியிருக்க.

'எண்ணிஅக் குளத்திற் கஞ்சத்
தாளினல் இருநீர் உண்ண,
நண்ணிய பேய்கண் டங்கு
நணுகி,'நின் பெருமை கண்டுன்
கண்ணெதிர்ப் பட்டேன்,' என்று
கழுத்துறு மாலை தன்னைத்
துண்ணென எடுத்து நல்க
வாங்கியே சொலும்கு ரங்கே: 95

கஞ்சத்தாள் = தாமரைத் தண்டு, இருநீர் = பெருநீர், நணுகி = நெருங்கி, துண்ணென = விரைவாக, நல்க = கொடுக்க.

"'எவ்வள விந்த நீரில்
உனக்குள வலிமை ?' என்ன,
'செவ்வியோய் ! இந்த நீரில்
ஆயிரம் பேர்சேர்ந் தாலும்

கைவ்வலித் துண்டற் கான
சத்தியென் கண்ணுண் டென்ன,
'இவ்விடம் புசிப்பு னக்கே
யான்கொடு வருவன்,' என்றே 96

செவ்வியோய் = நேர்மையானவனே, புசிப்பு = உணவு.

'மாலையைக் கழுத்திற் பூண்டு
வானரம் அகன்று, வேந்தன் -
பாலடைந் திட,அ வன்றான்
பார்த்'திந்த மணியின் மாலை
சீலனே! எங்குச் சம்பா -
தித்தனை?' எனக்கு ரங்கு,
'கோலம்ஆர் ஒருகா னத்திற்
குளந்தான்ஒன் றுள து மன்னு! 97

கோலம் ஆர் = அழகு பொருந்திய.

'அக்குளந் தன்னிற் காலை
அடைந்துமுன் குதிப்போர்க் கெல்லாம்
இக்கதிர் மணிகள் எய்தும்,'
எனச்சொல, 'யானும் எய்தித்
திக்கொளி விரிக்கும் சோதிச்
செழுமணி பெறுவேன்!' என்று
புக்கஅக் குரங்கி னோடும்
போயினன் சேனை சூழ. 98

கதிர் மணிகள் = ஒளியுள்ள மாணிக்கங்கள், எய்தும் = கிடைக்கும், புக்க = வந்த.

'போனபின், 'இதுவே காலம்;
புகுந்தநின் சேனை எல்லாம்
கானவிர் மலர்த்த டத்திற்
களிப்பொடு குதித்துத் தங்கட் -
கானநன் மணிகள் கொண்ட
பின்னரே அரச! நீயும்

நானும்ஒண் மணிகள் கொள்வேம்,'
என்றதந் நாகந் தானே. 99

புகுந்த = வந்த, கான் அவிர் = மணம் வீசுகின்ற, நாகம் = குரங்கு.

" 'அப்படி ஆக,' என்றே
அரசனும் சேனை யோரைக்
'குப்புறு 'கன்ன ஓதக்
குதித்தலும் அவரைப் பற்றித்
துப்புறு பூதந் தானும்
தொடர்ந்திழுத் துண்ட தங்கே
தப்புறு வேந்தன் ருனும்
தடத்திடைக் காத்தி ருந்தான். 100

ஆக = ஆகட்டும், குப்புறுக = குதியுங்கள், துப்புஉறு = வலிமை மிகுந்த, தடத்திடை = குளக்கரையில்.

'நெடும்பொழு தங்குக் காத்தும்
நீரிடைக் குதித்த சேனை
அடங்கலும் வராமை கண்டே
அரசன்அக் குரங்கை நோக்கித்
'தடந்தனிற் குதித்த சேனை
சார்ந்தில தென்னே ?' என்ருன் ;
நடந்தொரு மரத்தின் கொம்பில்
நாகம்முன் னேறிச் சொல்லும் : 101

நீரிடை = தண்ணீரில், அடங்கலும் = முற்றும், என்னே = என்ன காரணம்? நாகம் = குரங்கு.

" 'கொழிபுகழ் வேந்த னே !எம்
குலத்தையெல் லாம்நீ கொன்ற
பழிதனை வாங்க வந்தேன் ;
முடித்தனன் ; பண்டு நின்சோறு
அழிபசிக் குண்டேன் ஆத -
லாலுனை விடுத்தேன்,' என்று

மொழிதர, இரங்கி வேந்தன்
முந்துதன் நகர்புக் கானே. 102

கொழிபுகழ் = ஓங்கு புகழ், பண்டு = முன்பு, அழிபசி = வருத்தும் பசி, மொழிதர = சொல்ல, இரங்கி = இரக்கம் கொண்டு, புக்கான் = புகுந்தான்.

' அத்தகு கருமம் செய்தாய்
ஆதலின், நினக்குத் துன்பம்
சித்தியா யினெ'தன் ருேதி,
'உறைவிடம் செல்வேன்,' என்ருன் ;
'பத்திநீத் தென்னை விட்டுப்
போகுதல் பண்போ ? யான்சொல்
இத்தைநீ கேட்டி,' என்றே
இயம்புவான் சுவர்ண சித்தி : 103

சித்தியாயினது = நேரிட்டது, பத்தி நீத்து = அன்பை விட்டு, பண்போ = சரியோ, இத்தை = இதை.

## 12. குரங்கு துன்புற்ற கதை

' பன்னுசீர் மதுரை வாழ்வோன்
பத்திர சேன வேந்தன் ;
அன்னவன் புதல்வி ரத்தி-
ுவதி அழகின் மிக்காள் ;
தன்னை ஓர் அரக்கன் பற்றச்
சார்ந்ததைத் தோழிக் கோதச்
சொன்னதை அரக்கன் கேட்டுத்
துணுக்கமுற் றெண்ணு வானுல் : 104

துணுக்கம் = அச்சம்.

' ' நம்மினும் வலியோன் இந்த
நாட்டமுற் றிவண்இ ருந்தால்
அம்ம !நாம் என்செய் வேம் !' என்று
அச்சமுற் றரசன் இல்வாழ்

செம்மைசேர் குதிரைப் பந்தி
சேர்ந்தொரு குதிரை ஆகி
விம்மலுற் றிருந்தான் ; அந்த
வேலைஓர் கள்வன் வந்தான். 105

காட்டம் = எண்ணம், அம்ம = வியப்பிடைச் சொல், பந்தி = இலாயம், விம்மலுற்று = மனம் வருந்தி, வேலை = சமயம்.

' அரக்கனும் குதிரை தன்னைக்
கவர்ந்தனன் அதன்மேல் ஏறிச்
செருக்கொடு நடத்த நேரே
செல்லுறு மையின் அடிக்கத்
தருக்கழிந் தோடல் கண்டு
தழைந்தஓர் ஆலின் வீழை
வெருக்கொடு பற்றி ஏறி
மீதுசென் றனன்அக் கள்வன். 106

கவர்ந்தனன் = அபகரித்து, செல்லுறுமையின் = செல்லாததால், தருக்கு = வலிமை, வீழை = விழுதை, வெருக்கொடு = அச்சங்கொண்டு.

' குதிரையும் வெருவி ஓடக்
குரங்கொன்று கூவிச் சொல்லும் :
பொருவிலா அரக்க னை
புரவியே ! மனித னுக்கு
வெருவுதல் என்னே ?' என்ன
விளம்பலும் சோரன் கேட்டுப்
பரிவொடு குரங்கின் வாலைப்
பற்றியே வருத்தி னனே 107

வெருவி = அஞ்சி, பொருவிலா = ஒப்பில்லாத, பரிவொடு = வருத்தத்துடன்.

' நீடுறு குரங்கு வஞ்சம்
உடைத்தென நினைந்த ரக்கன்
ஓடினன்; அக்கு ரங்குக்கு
உறுதுயர் எனக்கும் எய்தும் ;

ஆடுறு சக்க ரத்துக்கு
அஞ்சினேன் நான்!'என் றேத,
ஈடில்ஊழ்க் கதையொன் றேதும்
இடருற்றேன் பொன்னுற் றேற்கே. 108

**ஈடில்ஊழ் = ஒப்பில்லாத பழவினை, ஓதும் = சொல்வான்.**

## 13. குருடன் முதலிய மூவர் குணப்பட்ட கதை

### *அறுசீர் ஆசிரிய விருத்தம்*

'மதுவூர் தனக்குக் காவலனும்
மதுசூ தனற்கு மும்முலைப்பெண்
புதுமை யாகப் பிறந்திடலால்
புரைதீர் சோதி டனையழைத்து,
'முதுமை உடையீர்! இதற்குநான்
முயல்வ தென்னே ?' என்ன,அவன்,
'இதுநன் காய்ந்து சொலவேண்டும் ;
ஆரா யாமல் இசைத்திட்டால் 109

**புரைதீர் = குற்றம் நீங்கிய, முதுமை உடையீர் = பெரியவரே.**

'சண்ட கருமன் செயல்போலாம்
தலைவ !' என்ன, 'அவன்யாது
பண்டு புரிந்தான் ?' என,'அவன்றன்
பரவும் தண்ட காரணியத்து
அண்டி உறைவான் ; அரக்கனவன்
அங்குற் றிடுமோர் பூசுரன்மேல்
மிண்டி ஏறி நடத்திவரும்
நாளில் ஒருநாள் வேதியனும் 110

**பண்டு = முன்பு, பரவும் = சிறப்பித்துப் பேசும், பூசுரன் = பிராமணன், மிண்டி = தருக்கி.**

"பாதம் உனக்கு மெல்லியவாய்
இருக்கும் பரிசென் ? புகல்,'என்னப்
பேத அரக்கன், 'நீராடி
ஈரம் புலர்ந்த பின்செல்வேன்

ஆத லால்இவ் வாறிருந்த,'
என்முன் ; ஒருநாள் அவ்வரக்கன்
சீத நீரிற் குளிக்கும்போது
ஓடி ஞன்அச் செழுமறையோன். 111

பரிசென் = தன்மை யாது? புலர்ந்த = உலர்ந்த, இவ்வாறிருந்த = இப்படி யிருந்தன, சீதம் = குளிர்ச்சி.

"அடியின் ஈரம் புலர்வதன்முன்
அப்பால் நடப்ப தில்லைஎன்ற-
படியால் அன்ருே 'நமைப்பிடிக்க
மாட்டான்,' என்று பார்ப்பானும்
நொடியின் அகன்முன்?" என அரக்கன்
நொந்தங் கிருந்தான் ; ஆதலினுல்,
நெடிதா ராய்ந்து சொல்லுதலே
நீதி,' என்முன் சோதிடனும். 112

புலர்வதன் முன் = உலருவதற்கு முன்னே, நொடி = விநாடி நேரம்.

'பன்னூல் ஆய்ந்து புரவலனைப்
பார்த்து, 'நீநின் மகள்எதிரே
துன்னல் ஆகா மையின்வேருேர்
துலங்கு மாடந் தனில்வைப்பாய்,'
என்ன, அவ்வா றவன்வைத்தே
இருக்கும் நாளில் அவ்வனிதை
உன்னும் மங்கைப் பருவமதை
உற்முள் எனக்கேட் டரசனுமே 113

பன்னூல் = (பல் + நூல்) பல சாஸ்திரங்கள், புரவலனை = அரசனை, துன்னல் = பொருந்தியிருத்தல், துலங்குமாடம் = சிறந்த மாளிகை, வனிதை = பெண்.

'இந்த மாது தனைக்கொள்வாற்கு
அளவில் நிதியோ டீவன்,' என,
அந்த மொழிகேட் டொருகுருடன்
கூனன் மிசையூர்ந் தடுத்'தரச !

தந்தி டென்ன, அக்கணமே
தந்தான் குருடற்கு ; 'இவ்வூர்விட்டு
எந்த நாட்டி னுயினும்நீர்
ஏகும்,' என்ன அவர்போனர். 114

கொள்வாற்கு = மணம் செய்துகொள்பவனுக்கு, மிசை ஊர்ந்து = மேலேறி, ஏகும் = செல்லுங்கள்.

'மற்ருேர் நாட்டில் மூவரும்போய்
வைகும் நாளில் கூனன்மிசை
உற்ற ஆசை மிகக்குருடன்
உயிரைப் போக்க உபாயமிது
கற்றே செத்த பாம்பொன்றைக்
கறியாக் கிடுதற் கடுப்பேற்றிச்
'சற்றே தீயூட் டெனக்குருடன்-
ருனும் விறகிட் டெரித்திட்டான். 115

வைகும் நாளில் = தங்கியிருக்கும்போது, கறியாக்கிடுதற்கு = சமைப்பதற்கு, தீயூட்டு = நெருப்பை எரியச் செய்.

'வேகும் பாம்பின் ஆவிஅவன்
விழியின் மேலே தாக்குதலால்
போகும் விழிகள் தெரிந்தன ; தூ-
ரத்திற் போகிக் குலாவும்அவர்
மோகம் கண்டு போய்வளைந்த
முதுகன் றனையீர்த் தெடுத்தவளது
ஆகந் தன்னில் எறிய,நடு
முலையும் மறைந்த தப்பொழுதே. 116

ஆவி = புகை, போகும் விழி = குருடான கண், குலாவும் = கொஞ்சும், மோகம் = காதல், வளைந்த முதுகன் = கூனன், ஈர்த்து = இழுத்து, ஆகந்தன்னில் = மார்பில்.

'கூனன் கூனும் நிமிர்ந்திட்டது ;
ஆத லால்இக் குவலயத்தில்
ஆன தெய்வ அருள்உண்டேல்
யாவும் நலமாம்,' என்றதன்பின்

'நீநின் நகருக் கேகுங்கால்
நெறிக்குத் துணையோ டே'கனமுன்
போன துணையிற் பயன்கொள்கதை
புகலு வான்சக் கரதரனே : 117

குவலயம் = பூமி, நெறி = வழி.

## 14. நண்டின் வழித்துணையால் பிழைத்த கதை

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

'நாசிக தேயங் தன்னில்
நண்ணிய தத்தன் என்பான்,
'தேசிகன் கருமம் முற்றச்
செல்வன்ஓர் ஊர்க்'கென் றேத,
ஏசுறு அன்னை, 'நீநல்
துணையொடும் ஏகு'கென்றாள் ;
'பேசுறும் துணையின்' றென்னப்
பின்னும்அவ் வன்னை எண்ணி 118

தேசிகன் கருமம் = குருவின் காரியம், முற்ற = முடிக்க, செல்வன் = போவேன், ஏசுறு = இகழ்ச்சியடையாத.

'அலவனைக் கலசத் துட்பெய்து
அவன்கையில் அளிக்கக் கொண்டு
செலும்பொழு திளைப்பாய் ஆங்கோர்
செழுந்தரு நிழலில் தூங்க,
நலிதர இவனைத் தீண்ட
நல்லரவு ஒன்று நண்ணிக்
கலசமுள் தலையை நீட்டக்
கர்க்கட கந்தான் கண்டே 119

அலவன் = நண்டு, கலசம் = குடுவை, செழுந்தரு = தழைத்த மரம், நலிதர = வருந்தும்படி, நல்லரவு = நல்லபாம்பு, கர்க்கடகம் = நண்டு.

'காரரவு எனநி னைந்து
கடுங்கொடுக் கால்இ டுக்கி
மாரணம் செய்யப் பின்னர்
மறையவன் விழித்துப் பார்த்துப்
'பேரர வதனைக் கொன்றது
ஆர்?' எனப் பெரிதும் எண்ணித்
தேருறு பொழுது, 'நண்டால்
செத்ததீ 'தெனத்தெ ரிந்தான். 120

காரரவு = கிருஷ்ண சர்ப்பம், கொடுக்கு = பிளவுபட்ட கால், மாரணம் செய்ய = சாகச் செய்ய, தேருறுபொழுது = நிச்சயிக்கும் போது.

''மாதுரு வாக்கி யத்தை
மன்னும்என் சிரத்திற் கொண்டு
போதர லாற்பி ழைத்தேன்!'
என்றவன் புகுந்தான்,' என்று
தீதுளான் ஓதக் கேட்டுச்
சுவர்ணசித் தியும்அ வன்பால்
ஆதர வாகப் பேசித்
தன்னகர் அடைந்து வாழ்ந்தான்' 121

மாதுரு = தாய், போதரலால் = வருவதால், புகுந்தான் = சென்றான், தீதுளான் = தீமையுள்ளவனை சக்கரத்தலையன், ஆதரவாக = அன்பாக.

என்றிவை பலவும் பன்னி
இரங்கலும் தனது பன்னி,
நன்றென மறையோன் கேட்டு,
'நாம்அறி யாமல் அந்தோ!
இன்றுவந் துளதிப் பாவம்!'
எனமறை முறையின் ஆய்ந்து
பின்றைநற் கழுவாய் ஆற்றிப்
பீழைதீர்ந் திருந்தார்,' என்றே 122

பன்னி = சொல்லி, இரங்கலும் = வருந்தவே, பன்னி = (பத்தினி) மனைவி, மறை = வேதம், பின்றை = பின்பு, கழுவாய் ஆற்றி = பிராயச்சித்தம் செய்து, பீழை = துன்பம்.



கூறினன் சோம சன்மா ;
கொற்றவன் அருளும் மைந்தர்
தேறினர் உபாய நீதித்
திறமெலாம் அறிந்து கொண்டே
வீறினர் ; அரசன் முன்போய்
விவேகத்தின் மாட்சி காட்டி
ஈறிலா அரசு பெற்றிவ்-
விருநிலம் புரந்து வாழ்ந்தார். 123

கொற்றவன் = அரசன், அருளும் மைந்தர் = பெற்ற பிள்ளைகள், வீறினர் = சிறப்படைந்தனர், விவேகம் = அறிவு, மாட்சி = பெருமை, ஈறிலா = அழிவில்லாத, இருநிலம் = பெரியபூமி, புரந்து = பாதுகாத்து.

ஆகச் செய்யுள் 737

பஞ்சதந்திரம் முற்றிற்று.



# இந்த நூல்

இந்திய நாட்டு இணையிலா நூல்களுள் 'பஞ்ச தந்திரம்' என்பதும் ஒன்றெனக் கூறலாம். இந்நூலின் மேன்மை இதிற் புனைந்து கூறப்படும் நீதிசாரக் கதைகளால் இனிது புலப்படும். இதன் அடியொட்டியும் இதன் மொழி பெயர்ப்பாகவும் இந்நாட்டு மொழிகளிலும் மேனாட்டு மொழிகளிலும் வெளி வந்துலவும் நீதிக் கதை நூல்கள் எண்ணற்றவை. 'பன்னூலுள் நுண்ணூலாம் பஞ்சநற்றந்திரம்' எனப் பாராட்டப்படுகின்ற இந்நூலைக் கதலீபாகமான இன்றமிழ்க் கவிகளால் இயற்றியவர் வீரமார்த்தாண்ட தேவர் என்னும் கவிஞர். அறிவு விளக்கக் கருவூலமாய்த் திகழும் இந்நூலைத் தமிழன்பர் பலர்க்கும் பயன்படும் வகையில் குறைந்த விலைப்பதிப்பாக வெளியிடுகின்றோம். தமிழ் நாடு பெற்றுப் பயனடைவதாக!

